# சங்க இலக்கியத்தில் தொன்மங்கள் - ஓர் ஆய்வு

*சென்னைப் பல்கலைக்கழகத்திற்கு*
*முனைவர் (பிஎச்.டி.) பட்டத்திற்காக*
*அளிக்கப்பெறும் ஆய்வேடு*

ஆய்வாளர்
**திருமதி பி. சுதா** எம்.ஏ., பி.எட்., எம்.பில்.,

நெறியாளர்
**முனைவர். கி.மைதிலி** எம்.ஏ., பி.எட்., பிஎச்.டி.,
இணைப் பேராசிரியர் (ஓய்வு)
பச்சையப்பன் கல்லூரி, சென்னை-30




**தமிழ்த்துறை**
**பச்சையப்பன் கல்லூரி**
**சென்னை - 600 030**

**ஜூலை 2010**

**முனைவர். கி.மைதிலி,** எம்.ஏ., பி.எட்., பிஎச்.டி.
இணைப் பேராசிரியர் (ஓய்வு)
தமிழ்த்துறை
AG129/12A, 7வது பிரதான சாலை
அண்ணா நகர், சென்னை-600 040.

# நெறியாளர் சான்றிதழ்

**'சங்க இலக்கியத்தில் தொன்மங்கள் - ஓர் ஆய்வு'** என்னும் தலைப்பில் **திருமதி. பி.சுதா,** எம்.ஏ., பி.எட்., எம்.பில்., செய்துள்ள இவ்வாய்வு 2006 முதல் 2010 முடிய அவரால் தன்னியலாகச் செய்யப்பட்டதென்றும் இவ்வாய்வின் மீது ஆய்வாளருக்கு எந்தப் பட்டமும் அளிக்கப் பெறவில்லை என்றும் சான்றளிக்கின்றேன்.

இடம் : சென்னை-30

நாள் : 28.07.10

கி.மைதிலி
**(கி. மைதிலி)**

**திருமதி. பி.சுதா,** எம்.ஏ., பி.எட்., எம்.பில்.,
முனைவர் பட்ட முழுநேர ஆய்வாளர்
தமிழ்த்துறை
பச்சையப்பன் கல்லூரி
சென்னை-30.

# ஆய்வாளர் உறுதிமொழி

**'சங்க இலக்கியத்தில் தொன்மங்கள் - ஓர் ஆய்வு'** என்னும் தலைப்பில் முனைவர் (பிஎச்.டி) பட்டத்திற்காக 2006 முதல் 2010 முடிய ஆய்வு நிகழ்த்தி அளிக்கப்பெறும் இவ்வாய்வேடு என் சொந்த முயற்சியில் உருவானது என்றும் இஃது இதற்கு முன் வேறு எந்த பட்டத்திற்கும் அளிக்கப்பெறவில்லை என்றும் உறுதி கூறுகின்றேன்.

இடம் : சென்னை-30

நாள் : 28-07-10

**(பி. சுதா)**

# நன்றியுரை

**'சங்க இலக்கியத்தில் தொன்மங்கள் - ஓர் ஆய்வு'** என்னும் இவ்வாய்விற்கு நெறியாளராக இருந்து ஆய்வுப் போக்கில் ஏற்பட்ட ஐயங்களை நீக்கி, நெறிப்படுத்திய சென்னைப் பச்சையப்பன் கல்லூரி, தமிழ் இணைப் பேராசிரியர் முனைவர் **கி.மைதிலி** அவர்களுக்கு என் முதல் நன்றி உரித்து.

ஆய்வு நடத்த அனுமதி வழங்கிய சென்னைப் பல்கலைக்கழகத்திற்கும், ஆய்வாளராக என்னை ஏற்றுக் கொண்ட பச்சையப்பன் கல்லூரிக்கும், முதல்வர் முனைவர் **இரவிக்குமார். (பொ)** அவர்களுக்கும், தமிழ்த்துறைத் தலைவர் முனைவர் **பு.பிரகாசம்** அவர்களுக்கும் என் நன்றி.

ஆய்வேட்டிற்குப் பல வகையிலும் உதவி புரிந்த பச்சையப்பன் கல்லூரி, தமிழ்ப் பேராசிரியர் முனைவர் **சா. வளவன்** அவர்களுக்கும், வைணவப் பெண்கள் கல்லூரித் தமிழ்த்துறை தலைவர் முனைவர் **கவிதா** அவர்களுக்கும் என் நன்றி.

பச்சையப்பன் கல்லூரித் தமிழ்ப் பேராசிரியர் பிறருக்கும் உலகத் தமிழ் ஆராய்ச்சி நிறுவனப் பேராசிரியர்களுக்கும் எனது நன்றியை உரித்தாக்குகிறேன்.

என்னை ஊக்கப்படுத்திய அனைத்துத் தமிழ்த்துறைப் பேராசிரியர்களுக்கும் எனது நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

ஆய்வு தொடர்பான நூல்களை வழங்கிய கல்லூரி நூலகருக்கும் கன்னிமாரா நூலகருக்கும் உலகத் தமிழாராய்ச்சி நிறுவன நூலகருக்கும் என் நன்றி உரித்தாகும்.

இவ்வாய்வேட்டினைச் சிறந்த முறையில் தட்டச்சு செய்து கொடுத்த அடையாறு மாணவர் நகலகத்தாருக்கு என் நன்றி உரியது.

# சுருக்கக் குறியீட்டு விளக்கம்

| | | |
|---|---|---|
| அகம். | - | அகநானூறு |
| ஐங். | - | ஐங்குறுநூறு |
| கலி. | - | கலித்தொகை |
| குறள் | - | திருக்குறள் |
| குறிஞ்சி. பா | - | குறிஞ்சிப்பாட்டு |
| குறுந். | - | குறுந்தொகை |
| சிறுபாண். | - | சிறுபாணாற்றுப்படை |
| திருமுரு. | - | திருமுருகாற்றுப்படை |
| தொல் | - | தொல்காப்பியம் |
| நற். | - | நற்றிணை |
| நெடுநல். | - | நெடுநல்வாடை |
| பட்டின. | - | பட்டினப்பாலை |
| பதிற்று. | - | பதிற்றுப்பத்து |
| பரி. | - | பரிபாடல் |
| புறம். | - | புறநானூறு |
| பெரும். | - | பெரும்பாணாற்றுப்படை |
| பொருநர். | - | பொருநராற்றுப்படை |
| மதுரை. | - | மதுரைக்காஞ்சி |
| மலைபடு. | - | மலைபடுகடாம் |
| முல்லை. பா. | - | முல்லைப்பாட்டு |
| மேற்படி | - | மேற்கண்டுள்ள நூலின்படி |

# பொருளடக்கம்

# முன்னுரை

இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முற்பட்ட காலம் சங்க காலம் எனக் குறிக்கப் பெறுகின்றது. சங்க காலத்தில் தோன்றிய பத்துப்பாட்டும் எட்டுத் தொகையும் சங்க இலக்கியம் என வகைப்படுத்தப்பட்டுள்ளன. இவற்றை மேற்கணக்கு நூல்கள் என வழங்குவர்.

சங்க இலக்கியத்தை முன்னோர்கள் அகத்திணை, புறத்திணை என இருவகைப்படுத்தியுள்ளனர். சங்க இலக்கியத்திலுள்ள *2381* பாடல்களுள் *1862* பாடல்கள் அகத்திணைப் பாடல்கள். சங்க இலக்கியங்கள் தமிழ் மொழியைச் 'செம்மொழி' என்ற சிறப்பைப் பெற உதவுகின்றன. இவ்விலக்கியங்கள் கிரேக்க இலக்கிய கருத்துகளுடன் ஒப்பிடும் தன்மையுடையவை என்றும் கூறுவர்.

ஐவகை நிலப் பிரிவுகளையும், அவற்றை சார்ந்த மக்கட் பிரிவுகளையும், திணை, துறை மூலமாக அறியப்படும் அக்கால மக்களின் ஒழுகலாறுகளையும் சங்க இலக்கியங்கள் வாயிலாக அறியலாம். வேளாண் துறையில் இரும்புக் கருவிகளின் பயன்பாடுகள் குறித்து சங்க இலக்கியத்தில் துல்லியமாகக் குறிப்பிட்டுள்ளது அறியத்தக்கது.

தொன்மம் (Myth) என்ற சொல் 'தொன்மவியல்' (Mythology) என்ற சொல்லுக்கு இணையாகப் பயன்படுத்தப்படுகிறது. தொன்மம் என்பதற்குப் பழமை என்று பொருள்.

தொல்காப்பியர் எண் வகை வனப்புகளை விளக்கும்போது "தொன்மை தானே உரையோடு புணர்ந்த பழமை மேற்றே" என்று

குறிப்பிட்டுள்ளார். ''புகழ்வாய்ந்த பழங்கதைகள்'' பற்றியது என்று உரையாசிரியர்களும் அதற்கு விளக்கம் கூறுவர். இதனால் ''புராணவியல் கூறுகளைத்'' தொன்மை என்றழைத்தனர். தொன்மை என்ற சொல் தற்காலத்தில் '' தொன்மம்'' என்ற கலைச்சொல்லாக வழங்கப்படுகிறது.

## ஆய்வுப் பொருள்

'சங்க இலக்கியத்தில் தொன்மங்கள்' என்பது ஆய்வின் பொருளாகும். சங்க இலக்கியம் பற்றி பல்வேறு பரிமாணங்களில், பன்முக நோக்கங்களில், கொள்கைகள் அடிப்படையில் பலரும் ஆய்வு செய்துள்ளனர்.

இரா.இராகவையங்கார் (1941), மு. இராகவையங்கார் (1947), சு.அ.இராமசாமிப் புலவர் (1950), மா.இராசமாணிக்கனார் (1957), கா. அப்பாதுரை (1971), புலவர் கா.கோவிந்தன் (1989) போன்றோர் சங்க மரபுக் கதைகளை உண்மை நிகழ்வுகளாய்க் கொண்டே ஆய்ந்துள்ளனர்.

1. பி.டி.சீனிவாசஐயங்கார், 'History of Tamils', 1929,
2. கே.என்.சிவராஜபிள்ளை, 'The Chronology of the Early Tamils', 1932.
3. க.பஞ்சாங்கம், 'இலக்கியத்தில் தொல் படிவங்கள்', 1988.
4. கதிர் மகாதேவன் 'தொன்மம்', 1989.
5. பெ.மாதையன், 'வரலாற்று நோக்கில் சங்க இலக்கிய பழமரபுக் கதைகளும் தொன்மங்களும்', 2001.

சங்க இலக்கியத்தில் தொன்மங்கள் பற்றி ஆய்வு செய்யப் படவில்லை என்பதால் இங்கு ஆய்வுக்கு உள்ளாக்கப்படுகின்றன.

## ஆய்வின் நோக்கம்

தொன்மம் என்பது மிகப் பழைய மரபு வழிவந்த கதை என்றும், அக்கதைகள் தரும் செய்திகள் உண்மைகள் என்றும் கூறுவர். சங்க இலக்கியத்தில் கையாளப்பட்டுள்ள தொன்மங்கள் கதைகளாக வழங்கி, கருத்துக்களை விளங்க வைக்கின்றன. மேலும் உவமையாகவும், விளக்க உத்தியாகவும், ஒப்பீட்டுக் குறியீடாகவும் பயன்படுத்தப்பட்டுள்ளன. புராணங்கள், பழக்கவழக்கங்கள், சங்க காலப் புலவர்கள் அறிந்த அறிவியல் செய்திகள் முதலானவை தொன்மங்களாக எவ்வாறு பயன்படுத்தப்பட்டுள்ளன என்பதை ஆயும் நோக்கில் இவ்வாய்வு இயங்கியுள்ளது.

## ஆய்வு எல்லை

'சங்க இலக்கியத்தில் தொன்மங்கள் - ஓர் ஆய்வு' என்ற தலைப்பைக் கொண்ட இவ்வாய்வு சங்க இலக்கியங்களுள் புராணம், முருகன் அவதாரம், பழக்க வழக்கம், தோற்றம்சார், அறிவியல் முதலான தொன்மங்கள் அடங்கிய பாடல்களை மட்டுமே ஆய்விற்கு கொண்டுள்ளது.

## ஆய்வு முறைகள்

சான்று மூலங்களின் மூலம் தக்க முடிவை அடையும் முறையில் விளக்க முறை ஆய்வை மேற்கொள்ளப்பட்டுள்ளது. மேலும் ஒப்பீட்டு ஆய்வு முறையும், தேவையான இடங்களில் கருத்து விளக்க ஆய்வு முறையும் பின்பற்றப்பட்டுள்ளன.

## ஆய்வேட்டின் கட்டமைப்பு

முன்னுரை, முடிவுரை நீங்கலாக ஆறு இயல்களாக பகுக்கப் பட்டுள்ளது.

**இயல் ஒன்று - தொன்மங்களும் தமிழிலக்கியமும்**

இவ்வியலில் "Myth" என்னும் சொற்பொருள் விளக்கம், அதன் வகைகள், பற்றிய செய்திகள், சிலப்பதிகாரம், மணிமேகலை முதலான தமிழ் இலக்கியங்களில் எடுத்தாளப்பட்டுள்ள இராமாயண, பாரத, புராணத் தொன்மங்கள் சுருக்கமாக இவ்வியலில் விளக்கப்பட்டுள்ளன.

**இயல் இரண்டு - புராணத் தொன்மங்கள்**

புராணம் என்ற சொற்பொருள் விளக்கம், புராணமும் அடங்கும். பெருஞ்சோற்று உதியன் சேரலாதன், பாரதப் போர், பாண்டவர்களின் வெற்றிச் சிறப்பு, நூற்றுவர் துணைவன் அக்குரன், வீமன் துச்சாதனின் நெஞ்சைப் பிளத்தல், அர்ச்சுனன் காண்டவ வனத்தை எரியூட்டல், வீமன் எழுதிய மடை நூல், யயாதி அரசனைத் துறக்கம் அடையச் செய்தல் முதலான பாரதத் தொன்மங்களும், இராவணன் இமய மலையைப் பெயர்த்தல், இராமன் பறவை ஒலியை அடக்குதல், அகலிகை சாபம் முதலான இராமாயணத் தொன்மங்களும், சகரர் கடலைத் தோண்டுதல், திருமாவுண்ணி (கண்ணகி), வாணாசூரனின் பெஞ்செல்வம், தூங்கெயில் எறிந்த தொடிதோட் செம்பியன் முதலான தொன்மங்கள் பற்றியும், தமிழ் வள்ளல், சிவன், கங்கையைத் தலையில் தாங்குதல், முக்கண் உடையவன், ஆலமர் கடவுள், பிறை சூடல், தக்கன் வேள்வி, உமையொரு பாகன் முதலான தொன்மங்கள் இவ்வியலில் ஆராயப் பட்டுள்ளன.

**இயல் மூன்று - முருகன் பற்றிய தொன்மங்கள்**

முருகன் எனும் சொற்பொருள் பயன்பாடு, முருகனின் பிறப்பு, தாய் தந்தையர், இந்திரனை வெல்லுதல், சூரபன்மனை வெல்லுதல், முருகன் மால்

மருகன், கற்பு மணமும் களவு மணமும், வள்ளி தோழியர் போர் புரிதல், தேவசேனையின் தோழியர் உருமாறி முருகனைச் சூழ்தல், கிரௌஞ்ச மலையைப் பிளத்தல், சேயோன், ஆறெழுத்து மந்திரம் ஓதும் முறை, முருகனின் பேரருட் சிறப்பு, ஆறுமுகங்களின் இயல்புகள், நக்கீரரும் ஆற்றுப்படையும், முருகனை வழிபடுதல், இறை முருகன், முருகனின் அடிமுடிச் சிறப்பு, அடி சேர்பவர் சேராதவர், முருகனின் ஆடை, ஊர்தி, முருகனின் படைக்கருவிகள், முருகவேல், குறிஞ்சி நிலக்கடவுள், மருத நிலத்தில் முருகன் வழிபாடு, முருகனின் சிறப்பு, பன்னிரு கைகள், குரவைக் கூத்து, அணங்கு, முருகன் இருப்பிடங்கள், திருவாவினன்குடி, திருஏரகம், திருப்பரங்குன்றத்தின் சிறப்புகள், முருகன் குன்றுதோறும் ஆடல் புரிதல், பழமுதிர்ச்சோலையில் முருகன் வீற்றிருத்தல், முருகன் விரும்புவன, முருகன் அருள்புரிதல், வரம் வேண்டுதல், குறமகளின் வெறியாட்டு ஆகியவை இவ்வியலில் ஆராயப்பட்டுள்ளன.

## இயல் நான்கு – தோற்றம் சார் தொன்மங்கள்

மாயோன் என்ற சொல்லாட்சி, வராகம், கூர்மாவதாரம், மோகினி வடிவு, நரசிம்ம அவதாரம், பரசுராம அவதாரம், பலராமன், கிருஷ்ணன், மல்லரை வெல்லுதல், மழைநீரை வற்றச் செய்தல், ஞாயிற்றை மீட்டல், துவாரகாபதி, தாயின் துயர் துடைத்த கருடன், கருடன் செருக்கை அடக்குதல், அவுணர்களை வெல்லுதல், அன்பர் வேண்டுதல், ஆல் இலையில் அமருங் கதை, திருமால் திருமேனியின் சிறப்புகள், திருமாலின் உருவமும் உணவும், திருமாலின் சங்கு சக்கர சிறப்புகள் முதலான தொன்மங்கள் பற்றி இவ்வியலில் ஆராயப்பட்டுள்ளன.

## இயல் ஐந்து - பழக்க வழக்கத் தொன்மங்கள்

பழக்கம், வழக்கம் என்னும் சொற்களின் விளக்கம், வழிபாடு, கொல்லிப் பாவை, தைநீராடல், வருண வழிபாடு, திருவாதிரை விழா, இந்திர விழா, கார்த்திகை விழா, உறந்தையில் நடைபெறும் பங்குனி உத்திர விழா, உள்ளி விழா, அந்தி விழா, சிறுசோற்று விழா, துணங்கை கூத்தாடும் விழா, அம்பு தொடுக்கும் விழா, வாள் விழா, முந்நீர் விழா, புதுப்புனல் விழா, பலபூ விழா, போர் விழா, பெருந்துறை விழா, திருமண விழா, பேதை மகளிர் விழா, ஞாயிறு வழிபாடு, முருகன் வழிபாடு, கொற்றவை வழிபாடு, கொல்லிப் பாவை, தைநீராடல், தெய்வச் சீற்றம் தணிதல், கடவுட் பலி, காக்கைக்குப் பலியிடுதல், நாட்பலி இடுதல், குருதிப் பலி கொடுத்தல், முருகனுக்கு இடும் பலி, இடுகாட்டில் இடும் பலி, மலைவாழ் தெய்வத்திற்கு இட்ட பலி, வெண்சோற்றுப்பலி, ஆட்டினை பலி கொடுத்தல், தேக்கிலையில் இடும் பலி, மலர்ப்பலி, தினை அரிசியைப் பிரப்பங் கூடையில் நிரப்பி பலி கொடுத்தல், வணிகர்களின் வாழ்க்கை, பண்டமாற்று வாணிபம், உப்பு வாணிகம், உணவு வகைகள், விருந்தோம்பல், அந்தணரது பழக்க வழக்கங்கள், பாணர்களுக்கு மலர் சூட்டுதல், வேட்டையாடுதல், இடையர்கள், பட்டினத்து மக்களின் உபசரிப்பு, உழவர்கள், மருதநிலத்து உணவுகள், சிறுவர் விளையாட்டுக்கள், மள்ளர்ப் போர், கோழிப் போர், பாவை விளையாட்டு, சிற்றிலிழைத்தல், சிறு தேராட்டல், பந்தாடல், கவண் விளையாட்டு, ஓரை விளையாட்டு, சுனை விளையாட்டு, பௌத்த பள்ளி, சமணப் பள்ளி, பொழுதறிதல், கடமைகள், தந்தையின் பெயரை மகனுக்கு வைத்தல், தன் மகனுக்கு தன் பெயரை வைத்தல், புலிப்பல் தாலி அணிதல், நெற்றியில் பொட்டு வைத்தல், நீராடுதல், காதில் தளிர்களைச் சூடுதல், சுவற்றில் கோடிடுதல், சுவற்றில் வட்டமிடுதல், மன்னனைத் துயில் எழுப்புதல், காவல் மரத்தை

வெட்டுதல், சகுனம், அந்தணர்களுக்குப் பசு கொடுத்தல், மாலை வழிபாடு, ஏழடி பின் சென்று வழியனுப்புதல், அருந்ததி காணல், சிலம்பு கழி நோன்பு, பார்ப்பார்க்கு நீர் வார்த்துக் கொடுத்தல், காப்பு நூல் கட்டுதல், யானைக்கு மொழி பயிற்றுவித்தல், கல்தூண் நடுதல், அறச்சாலையில் இலவச உணவு வழங்குதல், அறம் கூறும் அவையம், சிற்பக் கட்டிடக் கலை, பாசறையில் முரசு முழங்கல், பறையறைந்து செய்தியை தெரிவித்தல், வீரக்கழல் அணிதல், வாதிடும் பட்டிமன்றங்கள், வீரச் சுவர்க்கம் அடையச் செய்தல், ஒப்பனைப் பழக்கம், குடவோலை முறை, ஊகம் புல்லை முடிந்து வைத்தல், மகளிர் இயல்பு, மகளிர் வழிபாடு, மகளிர் கலந்தொடாமை, கோவிலை வலம் வருதல், கஞ்சி ஆடைகள், வாத்தியக் கருவிகளின் பயன்பாடு, காட்டாற்றை கடக்கும் வழிமுறைகள், பாசி படிந்த குளங்களைக் கடக்கும் முறை, பன்றிப் பொறியுள்ள வழிகளில் பகலில் செல்லுதல், கவண் கற்களிலிருந்து தப்பிச் செல்லுதல், குன்றுகளைக் கடக்கும் முறை என்பன பற்றி இவ்வியலில் விளக்கப்பட்டுள்ளன.

**இயல் ஆறு - அறிவியல் தொன்மங்கள்**

அறிவியல் என்பதன் விளக்கம், ஐம்பூதங்களின் தோற்றம், புவியியல் சிந்தனைகள், புவிமையக் கொள்கை, ஞாயிறு மையக் கொள்கை, ஞாயிற்றின் வெம்மை, கிரகண நிகழ்வுகள், சந்திர கிரகணம், வளர்பிறை - தேய்பிறை செய்திகள், பௌர்ணமி, வானியல் செய்திகள், வெள்ளி பற்றிய செய்தி, சுக்கிரன் - மழைக்கோள், செவ்வாய் சென்ற வழி வெள்ளி செல்லாமை, ஞாயிறு பற்றிய செய்திகள், நாள் மீனும் கோள் மீனும், வெப்ப மாற்றம், கடல் மாற்றம், நீரோட்டம் பற்றிய செய்திகள், தாவரங்களின் அமைப்பும் உணவும், ஒளிச்சேர்க்கை, பயிரியல் செய்திகள், நீர்ப்பாசன முறை, மருந்துப் பொருட்கள் பற்றிய செய்திகள், வேளாண்

செய்திகள், கலப்பையின் பயன்பாடு, நீர் வாழ்வன, மணல், சங்குகள், இப்பிகள், முத்துச் சிப்பிகள், நீர் நாய், நீர் ஆவியாதல், கடின நீர், வானிலைச் செய்திகள், காற்றின் வேகம், நீரின் பயன்பாடுகள், ஈசல், புலியின் முன்னங்கால் சிறிது, இரும்பின் பயன்பாடு, கரும்பு ஆலைகள் குறித்த செய்தி, கள் தயாரிக்கும் முறை, தோல் பதனிடுதல், நாழிகை அளந்தறிதல், மரக்கலம் செலுத்தும் முறை ஆகிய அறிவியல் தொடர்பான தொன்மச் செய்திகள் சங்க இலக்கியத்தில் இடம்பெற்ற தன்மை இவ்வியலில் ஆராயப்பட்டுள்ளது.

ஒவ்வோர் இயலின் முடிவிலும் அவ்வவ்வியலின் கருத்துச் சுருக்கம் தரப்பட்டுள்ளன.

இவ்வாய்வின் மூலமாகக் கண்டறியப்பட்ட கருத்துக்கள் முடிவுரையில் தொகுத்துத் தரப்பட்டுள்ளன. மேலாய்வுக்குரிய களங்களும் சுட்டப்பட்டுள்ளன.

துணைநூற் பட்டியலில் ஆய்வுக்குத் துணை நின்ற முதன்மை, துணைமை ஆதாரங்களாகிய நூல்கள் அகர வரிசைப்படுத்தப்பட்டுப் பட்டியலாக இணைக்கப்பட்டுள்ளன.

# இயல் - 1

# தொன்மமும் தமிழிலக்கியமும்

நெய்தலும், குவளையும், ஆம்பலும், சங்கமும்,

மைஇல் கமலமும், வெள்ளமும், நுதலிய

செய் குறி ஈட்டம் கழிப்பிய வழிமுறை

கேழல் திகழ்வரக் கோலமொடு பெயரிய

ஊழி ஒருவினை உணர்த்தலின், முதுமைக்கு

ஊழி யாவரும் உணரா;

ஆழி முதல்வ! நிற் பேணுதும், தொழுது.

பரிபாடல் 2:13 -19

# 1. தொன்மங்களும் தமிழிலக்கியமும்

தொன்மம் என்பது தொன்மையான புராண நிகழ்வுகளைத் தொகுத்துக் காட்டும் ஒருகலைச் சொல்.

தொன்மம் இயற்கை இகந்த உண்மையற்ற கற்பனை நிகழ்வுகளைச் குறித்தாலும் வாழ்க்கை சிறப்பதற்கு உகந்த உண்மைகளை வெளிப்படுத்தி ஆன்மாக்களின் உள்ளொளி பெருக்கும் முறையைக் கற்பனை வழியாகக் கற்பிப்பது.

வீரர்க்கு எடுத்த வீரவழிபாடு உலக உயிர்களிடம் காட்டும் ஈரவழிபாட்டிற்கு வித்திட்டது.

இளங்கோ சேரன் செங்குட்டுவன் கனகவிசயரைப் பதினெட்டு நாழிகையில் வென்ற செய்தியைப் பிற தொன்மச் செய்திகளோடு ஒப்பிட்டுச் செங்குட்டுவன் சிறப்பை விளக்குவர்.

முருகன் சூரனை வென்றமை, சிவனார் திரிபுரம் அழித்தமை, காட்டில் சீதையை இராமன் பிரிந்தமை, வீமன் தீப்பற்றிய அரக்குமாளிகையிலிருந்து உடன் பிறந்தாரையும் தாயையும் காத்தமை, அயனும் அரியும் சிவனார் அடி முடி தேடியமை, கண்ணபிரான் மாவாய் பிறந்தமை, சிவனார் பாற்கடல் நஞ்சுண்டு மூவுலகும் காத்தமை போன்ற தொன்மச் செய்திகளைத் தமிழிலக்கியங்கள் மெய்ப்பொருளோடு உணர்த்தும் பாங்கினை இவ்வியல் இனிது விளக்கும்.

தொன்மை என்பது பழமை என்று பொருள்படும். தொல்காப்பியர் எண் வகை வனப்புகளை விளக்கும்போது, ‘‘தொன்மை தானே உரையோடு புணர்ந்த பழமை மேற்றே’’ என்று குறிப்பிட்டுள்ளதைக் காணலாம். தொன்மை என்பது புகழ் வாய்ந்த பழங்கதைகள் பற்றியது என்றும் கூறுவர். இதனால் புராணவியல் கூறுகளைத் தொன்மை என்று அழைத்தனர். தொன்மை என்ற சொல் தற்காலத்தில் ‘தொன்மம்’ என்ற கலைச் சொல்லாக வழங்கப்படுகிறது.

தொன்மத்தை ஆங்கிலத்தில் Myth என்ற சொல்லால் குறிப்பிடுவர். Myth என்ற சொல் Mythos என்னும் கிரேக்கச் சொல்லின் திரிபு சொல். Myth என்னும் சொல் தொன்மவியல் - Mythology என்னும் சொல்லுக்கு இணையாகப் பயன்படுத்தப்படுகிறது.

தொன்மம் என்பது மிகப் பழைய மரபு வழிவந்த கதை என்றும், அக்கதைகள் தரும் செய்திகள் உண்மை என்றும் நம்பினர். உலகம் இயற்கை இகந்த ஆற்றல்களுக்கு உட்பட்டு (Supernatural Power) எவ்வாறு இயங்குகிறது என்றும் உலகில் நடக்கும் நிகழ்வுகள் ஏன் இவ்வாறு நடக்கின்றன என்பதையும் தொன்மம் விளக்குகின்றது.

பழங்காலத்தில் மேலைநாடுகளில் தொன்மங்கள் சிறப்புற்று விளங்கின. தொன்மங்களை ஒழுங்குபடுத்தி வகைப்படுத்தியுள்ளனர். உலகத்தின் தோற்றம் பற்றிய தொன்மங்களை காஸ்மாகனீஸ் (Cosmogonies) என்றும், முதல் மனிதன் பிறப்பு பற்றியதை ஆந்திரோபோகனீஸ் (Anthropoganies) என்றும், மனிதனின் ஏற்றத்தாழ்வு பற்றியன பொற்காலத் தொன்மங்கள் (Myths of the Golden Age) என்றும், மனிதன் பாவம் செய்து தாழ்நிலைக்குச் செல்வதை மாறுபாட்ட தொன்மங்கள் (Transformation Myths) என்றும்,

உலகைப் பாதுகாப்பவன் இறைவன் என்பதை சோடிரியாலாஜிக்கல் தொன்மங்கள் என்றும் ஊழிக்காலம் பற்றிய எஸ்கடலாஜிக்கல் தொன்மங்கள் (Eschatological Myths) என்றும் வகைப்படுத்தியுள்ளதைக் காணலாம்.

''எஸ்.எச்.ஹீக் என்பார் தொன்மங்களை சடங்குத் தொன்மங்கள் (Ritual myths) என்றும், மூலத் தொன்மங்கள் (Origin myths) என்றும், மரபுத் தொன்மங்கள் (Cult myths) என்றும், பெருமிதத் தொன்மங்கள் (Prestige myths) என்றும், அழிவுத் தொன்மங்கள் (Eschatological myths) என்று ஐந்து வகையாகப் பிரிப்பர்''[1] தொன்மங்கள் பெரும்பாலும் உயிரினங்களின் தோற்றம் பற்றியும், மனிதனின் பல்வேறு நிலைகளையும் விளக்குவதாக உள்ளன.

நார்த்ராப் ஃப்ரை தொன்மங்கள் நான்கு அடிப்படைத் தளத்திலிருந்து பிறக்கின்றன என்று வகைப்படுத்தியுள்ளார். 1. விடியல், வசந்தம், பிறப்பு 2. செழிப்புப் பருவம், கோடைக்காலம், திருமணம் அல்லது வெற்றி 3. மாலை, இலையுதிர் காலம், இறப்பு 4. இருள், குளிர்காலம், மணவிலங்கு என இத்தளங்களிலிருந்து தோன்றுபவை என்று பிரித்துள்ளார். இந்நான்கு பிரிவுகளும் இயற்கையின் நான்கு பருவங்களோடு ஒற்றுமையுடையன என்று குறிப்பிட்டுள்ளதை அறியலாம்.

''தொன்மம் பல உட்கருத்துக்களை வெளிப்படுத்துவதற்கு உண்டாக்கப்பட்ட ஒரு மொழியே என்ற கருத்து ஐரோப்பிய அறிஞர்களுள் கட்டமைப்பாளர்களால் (Structuralists) ஒப்புக் கொள்ளப்பட்ட தொன்றாகும்.''[2] மனித இயக்கங்களின் அடிப்படையில் தொன்மங்களை நால்வகைப் பிரிவுகளாகப் பகுத்துள்ளனர். 1. மெய்ப்பொருள் இயக்கம்

(Mystical Function). பரவெளி தரும் உருவளவை (Cosmological Dimension) 3. சமூகவியல் சார்புத் தொன்மம் (Socialogical Basis) அறிவு கொளுத்தும் தொன்மம் (Pedagogical) என பகுத்துள்ளதை அறியலாம். சங்க காலத்தில் பலவிதமான வழிபாட்டு முறைகள் நிறைந்திருந்தன. குறிஞ்சி முதலான நிலப் பாகுபாட்டிற்கும் அந்நில மக்களின் சமூக வாழ்விற்கும் ஏற்றவாறு வழிபாட்டு முறைகளும், கடவுள்களும் இருந்துள்ளதை அறியலாம். பழமையான சடங்கு நெறிகள் நிலவிய வேளையில், வைதீக நெறிகளும், யாகங்களும் சூரிய கடவுட் கூறுகளும் வளம் பெறத் துவங்கின. மருத நிலத்தில், சமூக மாற்றத்தால் 'அரசுகள்' உருவாயின. இவ்விருவகை நெறிகளுடன் இணைந்து தமிழ்க் கடவுள்களை வைதீக நெறிக்கு ஆட்படுத்தின.

சமுதாய நலத்திற்காக, நிரை மீட்கச் சென்று இறந்துபோன வீரர்களுக்கு, நினைவுச் சின்னமாக நடுகற்கள் நட்டனர். இச்சமுதாயங்கள் அழிவுண்டு போனதால், அவ்வீரக் கற்கள், நெடுவழிகளில் நிற்கும் வெறுங் கற்களாகின்றன. சமண சமயத்தில், வேந்தர் வடக்கிருந்து உயிர் நீத்தவர் களுக்குக் கல் நட்டப்பட்டது. இவ்வாறு நடுகல் சமயச் சார்புடையதாய் மாறியது. இதைப் போலவே தமிழகத்தே நிலமக்களோடு தொடர்புடைய திணைத் தெய்வங்கள், வடமரபுத் தெய்வங்களின் புராணக் கூறுகளோடு இணைக்கப்பட்டு விண்ணுலகத் தெய்வங்களாய் மாறின. இவ்வாறு திணைத் தெய்வங்கள் சூரியக் கடவுளோடு தொடர்புடைய பல கதைகள் தமிழ்க் கடவுளோடு இணைத்துப் பேசப்பட்டன. இப்புராணக் கதைக் கூறுகளின் வளர்ச்சிப் போக்கினை சங்க இலக்கியங்கள் வெளிப்படுத்தி யிருக்கின்றன. இவ்வாறு இடம்பெற்ற புராணக்கதைக் கூறுகளே தொன்மங்கள் என்று ஆராயப்பட்டுள்ளன.

இப்புராணக் கதைக்கூறுகள் (தொன்மங்கள்) அன்றைய சமூக மாற்றங்களுக்கு ஏற்ற வகையில் முக்கியத்துவத்தைப் பெற்று விளங்கி யிருந்ததை அறிய முடிகிறது.

தமிழிலக்கியத்தில் இடம்பெற்றுள்ள தொன்மங்களைத் திரட்டும் பகுதி இதுவாகும். தமிழிலக்கியங்களாகச் சிலப்பதிகாரம், நான்மணிக் கடிகை, திரிகடுகம், பழமொழி, சீவக சிந்தாமணி ஆகியவற்றில் காணப்படும் இராமாயண, பாரதத் தொன்மங்கள், திருமால் பற்றிய செய்திகள், முருகன் அசுரனை வென்ற கதை, கிரௌஞ்ச மலையைப் பிளத்தல், திருமால் உலகளந்த கதை, பாற்கடல் கடைதல் ஆகியவை இவ்வியலில் ஆராயப்பட்டுள்ளன.

சிலப்பதிகாரத்தில் இராமாயணத் தொன்ம நிகழ்வு குறிப்பிட்டுள்ளதைக் காணலாம்.

**'' பெருமகன் ஏவல் அல்லது யாங்கணும்**
**அரசே தஞ்சம் என்று அருங்கான் அடைந்த**
**அருந்திறல் பிரிந்த அயோத்தி போலப்**
**பெரும் பெயர் மூதூர் பெரும்பேது உற்றதும்;**[3]

என இப்பாடலில் கோவலனும் கண்ணகியும் புகார் நகரை விட்டுப் புறப்பட்டு விட்டனர் என்றும், தசரதன் வாக்கிற்கிணங்கி இராமன் கானகம் சென்றபோது அயோத்தி மக்கள் வருந்தியதைப் போல, கோவலன் பிரிவால் புகார் நகர மக்கள் துன்புற்றனர் என்பதை இராமாயணத் தொன்ம நிகழ்வுடன் இளங்கோவடிகள் ஒப்பிட்டுக் கூறியுள்ளதால் அறிய முடிகிறது.

சிலப்பதிகாரத்திலுள்ள வஞ்சிக் காண்டத்தில் இந்தியத் தொன்மங்களை வரிசையாகக் குறிப்பிட்டுள்ளதைக் காணமுடிகிறது.

'' செறிகழல் வேந்தன் தென் தமிழ் ஆற்றல்
அறியாது மலைந்த ஆரிய மன்னரைச்
செயிர்த் தொழில் முதியோன் செய்தொழில் பெருக
உயிர்த் தொகை உண்ட ஒன்பதிற்கு இரட்டியென்று
யாண்டும் மதியும், நாளும், கடிகையும்,
ஈண்டு நீர் ஞாலம் கூட்டி எண் கொள;
வரு பெருந் தானை மறக்கள மருங்கின்
ஒரு பகல் எல்லை, உயிர்த்தொகை உண்ட
செங்குட் டுவன்தன்''[4]

என இப்பாடலில் சேரன் செங்குட்டுவன் வடநாட்டுப் போரில் வெற்றி வாகை சூடினான் என்றும், தேவாசுரப் போர் 18 ஆண்டுகளும், இராம இராவணப் போர் 18 மாதங்களும், மகாபாரதப் போர் 18 நாட்களிலும் நடந்ததைப் போல செங்குட்டுவன் கனகவிசயர் போர் 18 நாழிகைகளில், செங்குட்டுவன் வெற்றி பெற்றான் என ஒப்பிட்டுக் கூறியுள்ளதைக் காண முடிகிறது. இந்தியப் போர்கள் நடந்த கால அளவுகள் பற்றிய செய்திகள் இப்பாடலில் இடம்பெற்றிருப்பதை அறியலாம்.

குன்றக் குரவையில் முருகன் சூரனை வென்றதையும், கிரௌஞ்ச மலையைப் பிளந்த செய்தியைப் பற்றிய குறிப்புகள் இடம்பெற்றுள்ளதைக் காணலாம்.

'' பாரிரும் பௌவத்தின் உள்புக்குப் பண்டொரு நாள்;
சூர்மா தடிந்த சுடரிலைய வெள்வேலே''[5]

'' பிணிமுகம் மேற் கொண்டு அவுணர் பீடழியும் வண்ணம்
மணி விசும்பிற் கோனேத்த மாறட்ட வெள்வேலே''[6]

‘‘ வருதிகிரி கோலவுணன் மார்பம் பிளந்து

குருகு பெயர்க் குன்றன் கொன்ற நெடுவேலே’’[7]

என சிலப்பதிகாரப் பாடலில் முருகன் சிறப்புக்கள் பற்றி இடம்பெற்றுள்ளது. முருகன் மாமரமாக விளங்கிய சூரனை வென்ற தொன்மமும்; அடுத்தபடியாக அவுணர்களை அழித்த செயலும் குறிப்பிடப்பட்டுள்ளது. கிரௌஞ்ச மலையைப் பிளந்ததையும் அறிய முடிகிறது.

வானத்தில் உள்ள கோட்டையை அழித்தல் பற்றிய செய்தி சோழனுக்குரிய மரபாய் இலக்கியங்களில் குறிப்பிடப்பட்டுள்ளது.

‘‘ வெயில் விளங்கு மணிப்பூண் விண்ணவர் வியப்ப

எயில் மூன்றெறிந்த விகல் வேற் கொற்றமும்’’[8]

‘‘ தூங்கெயில் மூன்றெறிந்த சோழன்கா ணம்மானை’’[9]

‘‘ தூங்கெயி லெறிந்த தொடித்தோட் செம்பியன்’’[10]

‘‘ வீங்கு தோட் செம்பியன் சீற்றம் விறல் விசும்பின்

தூங்கும் எயிலும் தொலைத்தலால்’’[11]

‘‘ தூங்கு மூன்று எயில் எறிந்த அவனும்’’[12]

‘‘ தூங்கு புரிசை துணிந்த கோன்’’[13]

என இலக்கியங்களில் இச்செய்தி குறிப்பிடப்பட்டுள்ளது. சோழ மன்னன் வானத்தில் அமைந்த மூன்று கோட்டைகளை அழித்தான் என்பதன் மூலம் சோழ மன்னனின் பேராற்றல் குறிப்பிடப்பட்டுள்ளது.

‘‘ ................ அடியினால்

முக்கால் கடந்தான் முழுநிலம்’’[14]

‘‘ கண்ணகல் ஞாலம் அளந்ததூஉம்’’[15]

‘‘ ஊர்ந்து உலகம் தாவின அண்ணலே ஆயினும்’’[16]

என இப்பாடல்களில் விரோத நன்மகனை திருமால் அழித்த செய்தி குறிப்பிடப்பட்டுள்ளது. ''.......... பிரகலாதன் புத்திரனாகிய விரோத நன்மகன், இவன் மகாபராக்கிரமசாலி, விஷ்ணு இவனைக் கொல்வதற்காக வாமநா வதாரம் எடுத்து, அவனிடம் சென்று மூன்றடிமண் தருக என்று இரக்க, அவன் சம்மதித்தும் விசுவரூபம் கொண்டு, பூமியை ஓரடியால் அளந்து, ஆகாயத்தை மற்றோர் அடியால் அளந்து, மூன்றாம் அடிக்கு இடம் இன்மை யால் அவன் சிரத்தில் அடி வைத்து, அவனை பாதலத்து அழித்திவிட்டார்'' என கதிரைவேற்பிள்ளை குறிப்பிட்டுள்ளார். திருமால் வாமநாவதாரம் எடுத்து உலகையளந்தது குறிப்பிடத்தக்கது.

சிலப்பதிகாரத்தில் இளங்கோவடிகள் இராமாயணத் தொன்மச் செய்தியைக் குறிப்பிட்டுள்ளார்.

**'' தாதை ஏவலின் மாதுடன் போகிக்**
**காதலி நீங்கக் கடுந்துயர் உழந்தோன்**
**வேத முதல்வற் பயந்தோன் என்பது**
**நீ அறிந்திலையோ? நெடுமொழி அன்றே''**[17]

என இப்பாடலில் கோவலன் மதுரையை நோக்கி செல்லும் வழியில் கவுந்தியடிகளை கண்டு தனக்கு நேர்ந்த துன்பங்களை எடுத்துரைத்தான் என்றும், அவ்வமயம் கவுந்தியடிகள், இராமாயணத் தொன்ம நிகழ்வை ஒப்பிட்டுக் கூறுவதாக இளங்கோவடிகள் கூறுவதை அறிய முடிகிறது. இராமன் தந்தையின் கட்டளைப்படி கானகம் சென்று அங்கு இராவணன் சூழ்ச்சியால் இன்னல்கள் ஏற்பட்ட செய்தி குறிப்பிடப்பட்டுள்ளது.

திருமால் நீலமேனி உடையவன். ஆதலால் ''நீனிற உருவின் நெடியோன்'' எனப்பட்டான் என்பதை இளங்கோவடிகள்,

“ நீலமேகம் நெடும்பொற் குன்றத்துப்

பால் விரிந் தகலாது படிந்தது போல

......... ........ ........... ..........

திருவமர் மார்பன் கிடந்த வண்ணமும்”[18]

எனத் திருமாலை நீலமேகத்துடன் ஒப்பிட்டுக் கூறியுள்ளதைக் காணலாம்.

திருமால் மாவலியிடம் சென்று மூவடி மண் இன்று பெற்று, இவ்வுலகை ஓர் அடியாலும் விண்ணுலகை மற்றோர் அடியாலும் அளந்து கொண்டான் என்பதை,

“ மூவுலகும் ஈரடியான் முறைநிரம்பா வகைமுடியத்

தாவிய சேவடி சேப்ப”[19]

என இப்பாடல் குறிப்பிட்டு விளக்குகின்றது.

திருமாலின் திருமேனி, கண், திருவடி ஆகியன சிவந்து தோன்றும் கரியவன் என்பதை,

“ ......................... கண்ணும்

திருவடியும் கையும் திருவாயும் செய்ய

கரியவனைக் காணாத கண்ணென்ன கண்ணே”[20]

என்பதால் உணர்த்தினார்.

உலகம் மூன்றையும் தன் திருவடியினால் அளந்த முதல்வனாகிய திருமால் என்பதை,

“ ஞாலம் மூன்றடித் தாய முதல்வன்” - மூவுலகும்

ஈரடியான் முறை நிரம்பா வகை முடியத் தாவிய சேவடி”[21]

என இப்பாடல் மூலம் அறியலாம்.

தருமன், தன் குடிலை நிலைநாட்ட அசுவத்தாமன் இறந்தான் என்று பொய் கூறினான் என்பதை,

**'' நிரம்ப நிரையத்தைக் கண்டு அந் நிரையம்**

**வரம்பில் பெரியானும் புக்கான்''[22]**

இப்பாடல் வரிகள் விளக்குகின்றது.

ஆயர்ப்பாடி தெருவில் குழந்தைகள் போல் மண் தின்றதைக் கண்ட, தாய் யசோதை பயமுற, அவளுக்கு தமது வாயத் திறந்து, அண்டங்கள் அனைத்தையும் தம்மில் அடக்கிக் காட்டியவர் என்பதைப் பின்வரும் பாடல் கூறுகின்றது.

**''படியை மடியாகத் திட்டான்''[23]**

பாண்டவர்களை அழிப்பதற்காகத் துரியோதனன் அமைத்த அரக்கு மாளிகை நிகழ்ச்சி பற்றி பின்வரும் பாடலில் கூறப்பட்டுள்ளது.

**'' ஐவர் கதழ் எரிசூழ் ந்தாங்கு''- கூர் எரி வளைக்**

**கட்டப்பட்ட பஞ்சவர் போல நின்ற பகட்டினப் பரிவு தீர்த்தான்''[24]**

பாண்டவர்கள் அரக்கு மாளிகையில் இருந்து தப்பினர் என்பதை,

**'' ................ அரக்கில்லுள்**

**பொய்யற்ற ஐவரும் போயினர்''[25]**

## அருட்பெருஞ்சோதி

திருமாலும் நான்முகனும் காண முடியாத ஆதியும் அந்தமும் இல்லா அரும் பெருஞ் சோதியான சிவபெருமான் பெருமையை மாணிக்கவாசகர் திருவாசகத்தில் சிறப்பிப்பர்.

சிவபெருமான் சோதி வடிவாக நின்றார். திருமால் பன்றயாக வடிவெடுத்து சிவன் திருவடி மலரைக் காணமுடியவில்லை. நான்முகன் அன்னத்தின் உருக்கொண்டு சிவபெருமான் திருமுடியைக் காணமுடியவில்லை.

நான்முகன் கல்வித் தலைவியாகிய கலைமகளைத் துணையாகப் பெற்றவன். திருமால் செல்வத்தின் தலைவியாகிய பொன்மகள் துணை பெற்றவர். பொன்னம்பலமாகியவன் திருமால். வெள்ளையம்மாள் துணைவன் வெள்ளையப்பன் பிரமன். கல்விச் செருக்காலும் செல்வச் செருக்காலும் இறைவனைக் காணமுடியாது என்ற மெய்ப்பொருளை மணிவாசகர் பின்வரும் திருவெம்பாவைப் பாடலடி உணர்த்தும்.

**'' மாவறியா நான்முகனும் காணாமலையினை''**[26]

**மாவாய் பிறந்தகேசவன்**

கேசியாகிய குதிரை வடிவில் வந்த அரக்கனை அழித்ததால் திருமால் கேசவன் என்று அழைக்கப்பெற்றார். கம்சன் அனுப்பிய சாணூரன் முட்டிகன் என்ற மல்லலைக் கண்ணன் அவதாரத்தில் வென்று அவர்கட்கு வீடு கொடுத்தார். ஆத்மாவின் இராட்சம் தாமசம் என்ற தீய பண்புகளை அழித்தலே இரு மல்லரை அழித்ததன் தத்துவம். மாவாய் பிளந்த திருமாலை தன் சிறுவாயால் பாடுகிறான் திருப்பாவை பாடிய திருப்பாவை,

**'' மாவாய் பிளந்தானை மல்லரைமாட்டிய**

**தேவாதி தேவனை''**[27]

**மூவுலகக் கண்டம் தீர்த்த நீலகண்டம்**

பாற்கடலில் தோன்றிய நஞ்சும் வாசுகி கக்கிய நஞ்சும் விண்ணையும் மண்ணையும் அழிக்கும் வெம்மை கக்கியது. சுந்தரனைக் கொண்டு பாற்கடல் நஞ்சுதிரட்டிக் கொணரச் செய்து சிவனார் அந்த ஆல கால நஞ்சுண்டார். உமை நஞ்சு சீவான்மாக்கள் அடங்கிய மெய் பரவாது நஞ்சைச் சிவனார் கண்டத்தில் நிறுத்த அந்தச் சிவனார் கண்டம் நீல கண்டம் ஆனது. விண்ணும் மண்ணும் காத்த சிவனார் தன்னைத் தியாகம் செய்ய வந்த தியாகராசன் ஆனார். திருஞானசம்பந்தர் சிவனார் நஞ்சுண்டு மூவுலகும் காத்த பெருமையினைத் திருநீற்றுப் பதிகத்தில் பாடினார்.

**'' ஆலம துண்ட டுடற்றன்எம் ஆலவாயான் திருநீறே''**[28]

**தொகுப்புரை**

தொன்மம் என்பது தொன்மையான புராணச் செய்திகளைக் குறிக்கும் கலைச்சொல். ஆங்கிலத்தில் Mythology என்ற கலைச்சொல்லைத் தமிழில் தொன்மம் என்ற சொல்லால் சான்றோர் குறிக்கின்றனர்.

மேலை நாடுகளில் தொன்மங்கள் நம் நாட்டிலிருப்பது போன்றே சிறப்புற்று விளங்கின.

தொன்மங்கள் பல உண்மை நிகழ்வுகள் அல்லன எனினும் வாழ்க்கையில் தெரிந்துகொள்ள வேண்டிய பல உண்மைகளைத் தமக்குள் கொண்டவை.

சமூக நலத்திற்காகப் பசுக்கூட்டம் மீட்கச் சென்று விண்ணகம் சென்ற வீரர்கட்கு நடுகல் நட்டு வழிபட்டனர். நடுநல்வழிபாடு உருவ வழிபாட்டிற்கு வழிவகுத்தது.

சிலப்பதிகாரம் சிவன், முருகன், திருமால் ஆகியோர் சிறப்புகளை விளக்கியுள்ளதைக் காணலாம்.

தேவாசுரப் போர் பதினெட்டாண்டுகளும், இராமராவணப் போர் பதினெட்டு மாதங்களும், பாண்டவர் போர் பதினெட்டு நாட்களும், செங்குட்டுவன் கனகவிசயர் போர் பதினெட்டு நாழிகையிலும் முடிவுற்றது எனத் தொன்மச் செய்திகளை ஒப்பிட்டுப் பேசி இளங்கோ செங்குட்டுவன் சிறப்பை இலக்கிய உலகில் பதிய வைத்துள்ளார்.

குன்றக் குரவையில் முருகன் சூரனை வென்ற செய்தியைச் சிலப்பதிகாரம் விளக்கும்.

சிவபெருமான் திரிபுரம் அழித்த செய்தியைச் சிலம்பு, மணிமேகலை, கலிங்கத்துப் பரணி, பழமொழி நானூறு, இராசராசசோழன் உலா போன்ற இலக்கியங்கள் அனைத்தும், ஆணவம், கன்மம், மாயை என்ற மும்மலங்களை அழிக்க வேண்டும் என்ற மெய்ப்பொருளை அனைவரும் உணர உணர்த்துகின்றன.

பிரகலாதன் மகன் மாபலியை அடக்கத் திருமால் கொண்ட வாமன அவதாரம் பற்றிச் சிலப்பதிகாரம் குறிப்பிடுகிறது. மூன்றடி மண் மாபலியை வீழ்த்தியது. ஒரு சிலம்பு கோவலனை வீழ்த்தியது.

சீதையைக் காட்டில் பிரிந்த இராமனைச் சிலம்பு சுருக்கிப் பேசிக் கோவலன் கண்ணகியை நாட்டில் பிரியப் போவதை விரித்துப் பேசும்.

அரக்கு மாளிகையிலிருந்து தாயையும் உடன் பிறந்தாரையும் காத்த வீமனைப் போல ஐம்பொறியானையிடமிருந்து நம்மைக் காத்தல் வேண்டும் என்ற கருத்தைப் பழமொழி ஆசிரியர் மூன்றுரையரையனார் கூறியிருக்கக் காணலாம்.

சிவபெருமான் அடிமுடி தேடிய தொன்மத்தால் மாணிக்கவாசகர் கல்விச் செருக்கும் செல்வச் செருக்கும் இறைவனைக் காணத் தடையாம் என்ற மெய்ப்பொருளை அறிய முடிகிறது.

திருப்பாவை பாடிய திருப்பாவை மாவாய் பிறந்தானை ஒரு வாயால் பாடி உணரவேண்டுமென்ற கருத்தை உணர்த்துவர்.

திருஞானசம்பந்தர் பாற்கடல் நஞ்சுண்டு மூவுலகும் காத்த தியாகராசனாகிய சிவனாரைத் திருநீற்றுப்பதிகத்தில் குழைந்து குழைத்துப் பாடுவார்.

## அடிக்குறிப்புகள்

1. க. பஞ்சாங்கம், இலக்கியத்தில் தொல்படிவங்கள் (நார்த்ராப் ஃப்ரை) ப.6.

2. பேராசிரியர் டாக்டர் கதிர்மகாதேவன், தொன்மம் (Myth), ப.26.

3. சிலப்பதிகாரம் 13:63-66.

4. மேற்படி 27:2.

5. மேற்படி 24:7.

6. மேற்படி 24:7-9.

7. மேற்படி 24:7-10.

8. மேற்படி 27:164-165.

9. மேற்படி 29:16.

10. மணிமேகலை 1:4.

11. பழமொழி நானூறு 49:1-2.

12. கலிங்கத்துப்பரணி 195.

13. இராச இராச சோழன் உலா 26.

14. நான்மணிக்கடிகை 2.

15. திரிகடுகம் காப்பு.

16. பழமொழி 183.

17. சிலப்பதிகாரம் 14:46-49.

18. மேற்படி 11:35-40.

19. மேற்படி 17:35-36.

20. மேற்படி 17:37-39.

21. மேற்படி 17.

22. பழமொழி 288.

23. நான்மணிக்கடிகை 2.

24. சீவகசிந்தாமணி 1237.

25. பழமொழி 234.

26. திருவெம்பாவை 4:1.

27. திருப்பாவை 8:6.

28. திருஞானசம்பந்தர் திருநீற்றுப்பதிகம் 9:4.

# இயல் - 2

## புராணத் தொன்மங்கள்

வென் வேற் கவுரியர் தொல் முது கோடி
முழங்கும் இரும் பௌவம் இரங்கும் முன் துறை,
வெல்போர் இராமன் அருமறைக்கு அவித்த
பல்வீழ் ஆலம் போல,
ஒலி அவிந்தன்று, இவ் அழுங்கல் ஊரே

அகநானூறு 70:13-17

# 2. புராணத் தொன்மங்கள்

புராணம் என்னும் வடசொல், ''புர - நவ'' என்ற இரு வேர்ச் சொற்களிலிருந்து தோன்றியது என்பர். இதன் பொருள் பழமைக்குப் பழமையாயும், புதுமைக்குப் புதுமை சேர்ப்பதாயும் உள்ளது என்றும் கூறுவர். ''பழமையான எந்த வரலாறுகளும் இன்றும் கூட மக்களிடையே சொல்லப் பெற்று வருகின்றனவோ அவை புராணம்''[1] என்னும் கருத்து ஈண்டு எண்ணத்தக்கது.

புராணம், பழைய மரபு வழிக் கருத்துக்களோடு நெருங்கிய தொடர்பு கொண்டிருந்தாலும் புதுமையை வரவேற்பதாகவே இருப்பதை அறியலாம். ''எது தொன்று தொட்டு இன்றுவரைக்கும் பரவியிருக்கிறதோ அதுவே புராணம்''[2] என்னும் கருத்து அதை உறுதி செய்யக் காணலாம்.

''உலகமும் மனிதனும் தற்போதைய வடிவில் எப்படி வந்து சேர்ந்தனர் என்பதை விளக்குவதாகப் புனிதமாக எடுத்துரைக்கப்படுவது புராணம்''[3] என்பர். அக்கால மக்களின் வாழ்க்கை முறை, அனுபவங்கள் தாம் இக்கால மக்களின் சிந்தனை முதிர்ச்சி நிலைக்குக் காரணம் எனத் தெளிவாகிறது.

**புராணமும் சடங்கும்**

பிரேசர் (Frazer) என்னும் ஸ்காட்டிஷ் நாட்டு மானுடவியல் அறிஞர் புராணங்களைச் சடங்குகளுடன் தொடர்புபடுத்திச் சிந்திக்க வேண்டும் என்ற கருத்தை வலியுறுத்தியுள்ளார். புராணக் கதைகள் பிறப்பு, வளர்ச்சி,

அழிவு, மறுபிறப்பு ஆகியவற்றோடு நெருங்கிய தொடர்பு கொண்டது என்றும் கூறியுள்ளார்.

சங்க இலக்கியத்தில் இராமாயணம் மற்றும் மகாபாரதக் கதைக் கூறுகள் இடம் பெற்றிருக்கக் காணலாம். இந்தக் கதைத் தொன்மங்கள் இயல்பாக எடுத்தாளப்படாமல் உவமைகளாக எடுத்துக் கூறப்பட்டுள்ளமை அறியத்தக்கது. இந்த உவமைகள் உவமிக்கப்படும் பொருளின் வினை, பயன், வடிவம், நிறம் முதலானவற்றை எளிதில் விளங்கும் வகையில் ஒரு உத்தியாகக் கையாளப்பட்டிருக்கக் காணலாம். சில தொன்மங்கள் விளக்க உத்தியாகவும் கூறப்பட்டுள்ளன. பாரத இராமாயணக் கதைகள் உவமைகளாய் கையாளப்பட்டிருப்பதால் அவை அன்றைய மக்கட் சமூகத்தில் மிகுந்த செல்வாக்குப் பெற்றவைகளாய் இருந்திருந்ததை அறிய முடிகிறது.

சங்க இலக்கியத்தில் இடம்பெற்றுள்ள புராண (பாரத இராமாயண) தொன்மங்களைப் பற்றியும் மற்றும் பிற கதைத் தொன்மங்களைப் பற்றிய செய்திகளையும் திரட்டும் பகுதி இதுவாகும்.

**பாரதத் தொன்மங்கள்**

சங்கப் புலவர்கள் வியாசரின் மகாபாரதக் காலத்தோடும், அக்கதைப் பாத்திரங்களோடும் அரசர்களை இணைத்துக் கூறுவதில் பெருமை கண்டவர்கள். மகாபாரதக் கதை மாந்தர்களான பாண்டவர்கள், கௌரவர்கள் குறித்த செய்திகள் சங்கப் பாடல்களில் இடம் பெற்றிருக்கக் காணலாம்.

**பெருஞ்சோற்று உதியன் சேரலாதன்**

சங்க இலக்கியத்திலுள்ள புறநானூற்றுப் பாடலில் பெருஞ்சோறு வழங்கிய தொன்ம நிகழ்வு குறிப்பிட்டுள்ளதைக் காணலாம்.

> ''அலங்கு உளைப் புரவி ஐவரொடு சினைஇ
> நிலம் தலைக் கொண்ட பொலம் பூந் தும்பை
> ஈர் ஐம்பதின்மரும் பொருது, களத்து ஒழிய
> பெருஞ்சோற்று மிகு பதம் வரையாது கொடுத்தோய்''[4]

எனப் பாடாண் திணைப் பாடலில் சேரலாதனின் வீரம் மற்றும் கொடைச் சிறப்புகள் பற்றிய செய்திகள் கூறப்பட்டுள்ளன. ஐம்பெரும்பூதத்தின் பண்புகளுடன் சேரலாதனின் வீரக்குணங்களை ஒப்பிட்டும் கூறப்பட்டுள்ளது. சேரலாதனின் கொடைச் சிறப்பை விளக்க எண்ணும்போது பாரதத் தொன்ம நிகழ்வைக் கூறி விளக்கப்பட்டிருப்பதைக் காணலாம். பாண்டவர்கள் ஐவரும், நூறு கௌரவர்களுடன் போர்க்களத்தில் போரிட்டபோது, இரு படையினர்க்கும், சேரலாதன் பெருஞ்சோறாகிய உணவை அளவில்லாது அளித்தான் என்றும், எனவே இவன் 'பெருஞ்சோற்று உதியன் சேரலாதன்' எனப் பெயர் பெற்றான் என்பதையும் அறியலாம். இவ்வாறு, பெருஞ்சோறு வழங்கிய தொன்ம நிகழ்வு உத்தியாகக் கூறப்பட்டுள்ளது அறியத்தக்கது. உதியன் சேரலாதன் நிலத்தின் பொறுமையும், வானம் போன்ற அகன்ற அறிவும், காற்றின் வளமையும், தீப்போன்ற வீரமும் நீர் போன்ற ஈசமும் பெற்றவன்.

**பாரதப் போர்**

கலித்தொகைச் செய்யுளொன்றில் பாரதத் தொன்ம நிகழ்வு குறிப்பிட்டுள்ளதைக் காணலாம்.

**“ மறுத்து மறுத்து மைந்தர் சார**
**தடி குறை இறுபு இறுபு தாயின கிடப்ப**
**இடி உறழ் இசையின் இயம் எழுந்து ஆர்ப்ப**
**பாடு ஏற்றுக் கொள்பவர், பாய்ந்து மேல் ஊர்பவர்,**
**கோடு இழை நுழைபவர் கோள் சாற்று பவரொடு**
**புரிபு மேல் சென்ற நூற்றுவர் மடங்க**
**வரிபுனை வல்வில் ஐவர் அட்ட**
**பொருகளம் போலும், தொழூஉ ”**[5]

என்னும் இப்பாடலில் பாண்டவரும் கௌரவரும் போரிட்ட போர்க் களத்தின் தோற்றம் பற்றிக் குறிப்பிடப்பட்டுள்ளது. எருதுகள் விடப்பட்ட தொழுவினுள் விலக்குபவரை மறுத்து மைந்தர்கள் தழுவுவதினால் அவர்களின் எலும்புகள் சிதறிக் கிடக்கின்றன என்றும், அந்த இடம் போர்க்களம் போலக் காட்சியளிக்கின்றது என்றும் உவமை கூறி விளக்கியுள்ளமையை அறியலாம்.

**பாண்டவர்களின் வெற்றிச் சிறப்பு**

பாரதப் போரில் பாண்டவர்களின் வெற்றிச் சிறப்பைப் பற்றி பெரும்பாணாற்றுப்பாடலில் குறிப்பிட்டுள்ளதை அறியப் பெறலாம்.

" வெண் கோட்டு இருப்பிணம் குருதி ஈர்ப்ப
ஈர்ஜம் பதின்மரும், பொருது களத்து அவிய
பேர் அமர்க் கடந்த கொடுஞ்சி நெடுந்தேர்
ஆராச் செருவின் ஐவர் போல
அடங்காத் தானையோடு உடன்றுமேல் வந்த
ஒன்னாத் தெவ்வர் உலைவிடத்து ஆர்த்து"[6]

எனும் இச்செய்யுளில் காஞ்சியின் தலைவனான தொண்டைமான் இளந்திரையன் தனது நாட்டின் மேல் படையெடுத்து வந்த பகைவரைத் தோற்று ஓடச் செய்து, வெற்றிக் களிப்புடன் திகழுகின்றான் என்ற செய்தி குறிப்பிடப்பட்டுள்ளது. தருமன் முதலிய பாண்டவர்கள் நூற்றுவர்களாகிய துரியோதனன் முதலிய கௌரவர்களைப் போர்க்களத்தில் பட்டு ஒழியும்படி, பெரிய போரை வென்று ஆரவாரித்தனர் என்பதையும், அதுபோல எண்ணிலடங்காத பெரும் படையோடும் சினத்தோடும் வந்த தன் பகைவர்களைத் தோற்கடித்து வெற்றிக் களிப்புடன் ஆரவாரித்தான் இளந்திரையன் என்றும் குறிப்பிடப்பட்டுள்ளது. பாண்டவர் பகைவர்களை வென்றதைப் போல இளந்திரையன் பகைவர்களை வென்றான் என்று பாரதத் தொன்மத்தை உவமையாகப் பயன்படுத்திக் குறிப்பிட்டுள்ளதை அறியலாம்.

பாலைத் திணையில் அமைந்த கலித்தொகைப் பாடலில் பாரத நிகழ்வு குறிப்பிடப்பட்டுள்ளது.

" வயக்குறு மண்டிலம் வடமொழிப் பெயர் பெற்ற
முகத்தவன் மக்களுள் முதியவன் புணர்ப்பினால்,
'ஐவர்' என்று உலகு ஏத்தும் அரசர்கள் அகத்தரா
கைபுனை அரக்கு இல்லைக் கதழ் எரி சூழ்ந்தாங்கு

**களி திகழ் கடா அத்த கடுங்களிறு அகத்தவா**

**முளி கழை உயர்மலை முற்றிய முழங்கு அழல்**

**ஒள் உரு அரக்கு இல்லை வளிமகன் உடைத்துத் தன்**

**உள்ளத்துக் கிளைகளோடு உயப்போகுவான் போல,**

**எழு உறழ் தடக்கையின் இனம் காக்கும் எழில் வேழம்,**

**அழுவம் சூழ், புகை அழல் அதர்பட மிதித்துத் தம்**

**குழுவொடு புணர்ந்து போம், குன்று அழல் வெஞ்சுரம்**

**இறத்திரால், ஐய! மற்று இவள் நிலைமை கேட்டீமின்;**

**மணக்குங்கால் மலர்அன்ன தகையவாய், சிறிதுநீர்,**

**தணங்குங்கால் கலுழ்பு ஆனாக் கண் எனவும் உள அன்றோ''**[7]

இச்செய்யுளில் துரியோதனன் அமைத்த அரக்கு மாளிகை எரியூட்டப் பட்டதும், அதிலுள்ளவர்களை வீமன் காப்பாற்றிய செய்தியும் கூறியிருக்கக் காணலாம். ஒளிமிக்க ஆதித்த மண்டிலத்திற்கு வடமொழியில், 'பகன்' என்றொரு பெயர் உண்டு. அந்தப் பகன் கண்ணில்லாதவன்; அவனைப் போன்று கண்ணற்ற முகத்தினை உடையவன் திருதராட்டிரன் என்றும், அவனுடைய மூத்த மகன் துரியோதனன்; அவனுடைய சூழ்ச்சியாலே, தருமபுத்திரர் முதலான அரசர்களாகிய பாண்டவர்கள் உள்ளே இருக்க, வேலைப்பாடுமிக்க அரக்கு மாளிகையைத் தீயூட்டினர் என்றும் கூறப்பட்டுள்ளது. தீ அம்மாளிகையைச் சூழ்ந்தது, அரக்கு மாளிகை எரிவதைப் போல களிறுகள், மூங்கில் மரங்கள் நிறைந்த மலையில் நெருப்பு சூழ்ந்து காணப்படுகின்றன என்றும், புகையும், அழலும் சூழ்ந்த மாளிகையை, காற்றின் மகனாகிய வீமன் அழித்துத் தன் சுற்றத்தோடே உயர்ந்து சென்றான் என்பது அறியத்தக்கது. பாண்டவர்களை அழிப்பதற்காகத் துரியோதனன் அமைத்த அரக்கு மாளிகை நிகழ்ச்சி உவமையாகப்

பயன்படுத்தப்பட்டுள்ளது. வீமன் பாண்டவர்களுக்குக் கேடு நினைத்த வேடுவர், புரோசர் முதலானவர்கள் அழியும்படி விட்டுவிட்டு, தன்னைச் சார்ந்தவர்களைக் காப்பாற்றியதைப் போல, வேழம் தன் இனத்தாரைப் பாதுகாப்பாக அழைத்துச் சென்றது என்று உவமையாகக் கூறப்பட்டுள்ளதை அறியலாம்.

**நூற்றுவர் துணைவன் அக்குரன்**

பதிற்றுப்பத்துப் பாடலில் அக்குரன் பற்றிய தொன்மச் செய்தியைக் குறிப்பிட்டிருப்பதைக் காணலாம்.

> **'' போர் தலைமிகுத்த ஈர் ஐம்பதின்மரொடு**
> **துப்புத் துறைபோகிய, துணிவுடைய ஆண்மை,**
> **அக்குரன் அனைய கைவண்மையையே''**[8]

எனும் இச்செய்யுள் வாயிலாக, துரியோதனன் முதலிய கௌரவர் நூற்றுவரும் போர் செய்வதிலே வல்லவர் என்பதையும், அவர்களுக்கு துணை வலியாகும் வகையில் இறுதி வரையில் உதவியாக இருந்தவன் அக்குரன் என்பதையும், அஞ்சாமையுடையவனுமாகிய அக்குரனையொத்த பெருங்கொடைச் சிறப்பினை உடையவன் என்று சேரலாதனின் கொடைச் சிறப்பை வாழ்த்திக் கூறியிருக்கக் காணலாம். ''அதியமான், சிசுபாலன், அக்குரன், வக்கிரன், சந்திமான், கன்னன், சந்தனிடை வள்ளல்'' என இடை வள்ளல் எழுவரில் ஒருவன் அக்குரன் என்ற செய்தியும், கன்னனின் வேறாகவும் பிங்கலந்தை நிகண்டில் குறிப்பிடப்பட்டுள்ளது அறியத்தக்கது.

சேரலாதனின் கொடைச் சிறப்பை விளக்க, அக்குரன் கௌவர்களுக்கு உதவிய கொடைக்கு உவமையாகக் கூறியமை இவற்றால் புலனாகின்றது.

“அக்குரன் பாரதத்தில் கூறப்படுபவனும் தலையேழு வள்ளல்களில் ஒருவனுமாகிய அக்குரன் போலும்; கர்ணனென்றும் நினைத்தற்கு இடமுண்டு ஆதாரம் கிடைக்கவில்லை”[9] என்றுரைக்கும் உ.வே.சாமிநாதையர் அவர்களின் குறிப்புரை இங்கு எண்ணத்தக்கது.

**வீமன் துச்சாதனின் நெஞ்சைப் பிளத்தல்**

கலித்தொகைப் பாடலில் பாரதத் தொன்மச் செய்தி இடம் பெற்றிருப்பதைக் காணலாம். அதனை,

**“ மேற்பாட்டு உலண்டின் நிறம் ஒக்கும்புன் குருக்கண்**
**நோக்கு அஞ்சான் பாய்ந்த பொதுவனைச் சாக்குத்தி**
**கோட்டிடைக் கொண்டு, குலைப்பதன் தோற்றம் காண்,**
**சமச்சீர் அசை இயல் கூந்தற் கை நீட்டியான்**
**நெஞ்சம் பிளந்து இட்டு நேரார் நடுவண்தன்,**
**வஞ்சினம் வாய்த்தானும் போன்ம்”**[10]

என்னும் இப்பாடல் வாயிலாக அறியலாம். மேலும் இப்பாடலில் ஏறு தழுவும் களம் பற்றிக் குறிப்பிட்டுள்ளதைக் காண இயலும். தொழுவினுள் பாய்ந்த ஆயர் இளைஞனை, எருது சாவக்குத்தி, அவனது உடலைக் குலைக்கின்றது. அத்தோற்றம், திரௌபதியின் கூந்தலைக் கை நீட்டிய துச்சாதனின் நெஞ்சைப் பிளந்து, பகைவர் நடுவே தன் வஞ்சினத்தை நிறைவேற்றிய வீமனைப் போன்றிருந்தது எருது என்பதாகப்

புனைந்துள்ளமையைக் காணலாம். எருது இளைஞனைக் கொன்றதைப் போல வீமன் துச்சாதனின் நெஞ்சைப் பிளந்தான் என்று உவமையாகக் கூறப்பட்டுள்ளது. இச்செய்தியின்வழி வீமனின் வஞ்சினம் நிறைவேறிய தன்மை விளங்கக் காணலாம். மேலும்,

**“ செவி மறை நேர் மின்னும் நுண் பொறி வெள்ளைக்**
**கதன் அஞ்சான், பாய்ந்த பொதுவளைச் சாடி**
**நுதி நுனைக் கோட்டால் குலைப்பதன் தோற்றம் காண்**
**ஆர் இருள் என்னான் அருங் கங்குல் வந்து, தன்**
**தாளில் கடந்து அட்டு, தந்தையைக் கொன்றானைத்**
**தோளில் திருகுவான் போன்ம்”**[11]

என்னும் இச்செய்யுளடிகள் வாயிலாகத் துரோணாச்சாரியாரைக் கொன்ற செய்தி குறிப்பிட்டுள்ளதைக் காணலாம். “அரிய இருள் என்றும் கருதானாய், நடு இரவிலே வந்து தன் தந்தையைக் கொன்றவனைத் தன் ஆற்றலின் வலிமையினால் தலையைத் திருகிய அசுவத்தாமனைப் போன்றிருந்தது” இக்காட்சி. எருது பொதுவனைக் குத்திக் குலைக்கின்ற தோற்றம், அசுவத்தாமன் சிகண்டியைக் கொன்றதைப் போல இருந்தது என்ற தொன்ம நிகழ்வு உவமையாகக் கூறப்பட்டுள்ளது அறியத்தக்கது.

**அர்ச்சுனன் காண்டவ வனத்தை எரியூட்டல்**

சிறுபாணாற்றுப்படையில், அர்ச்சுனன் அக்கினிக்கு உதவியதைக் குறிப்பிட்டிருப்பதைக் காணலாம்.

“பண்டொருகால் நெருப்புக் கடவுள் தனக்குற்ற நோய்த் தீர்வின் பொருட்டுக் காண்டவம் என்னும் காட்டை உண்ணப் புகுந்தான் என்றும்

அக்காடு இந்திரனுடையதாகலான், அவன் முகில்களை ஏவி அத்தீயை அவித்து விட்டான் என்றும் நெருப்புக் கடவுள் இவ்வாறு பன்முறை முயன்றும் இந்திரன் தடை செய்துவிடவே பாண்டவருள் ஒருவனான அர்ச்சுனனிடம் சென்று அக்காட்டை உண்ணும்படி தனக்கு உதவி புரிய வேண்டினான் என்றும் விற்றிறம் வல்ல காட்டை உண்ண தனது தீக்கணையின் வாயிலாய் அர்ச்சுனன் அக்காட்டை உண்ணும்படி நெருப்புக் கடவுளை ஏவ அவன் புகுந்து உண்ணத் தொடங்கிய உடன், இந்திரன் முகில்களை ஏவி மழை பெய்விக்க அர்ச்சுனன் கணைகளாலேயே பந்தரிட்டு அந்நெருப்பினை அவியாதே காத்தான் என்றும் இந்திரன் பின்னர் பெரிதும் முயன்றும் பயன்பெறாது போயினான் என்றும் பாரதத்தே கூறப்பட்ட கதை'' என அர்ச்சுனன் காண்டவ வனத்தை எரியூட்டிய பாரதத் தொன்மை வரலாற்றை விளக்க உத்தியாகப் பயன்படுத்தியுள்ளதைக் காணலாம்.

**'' காளரி யூட்டிய கவர்கணைத் தூணிப்**

**பூவிரி கச்சைப் புகழோன் தன்முன்''**[12]

இவ்வடிகளில் அர்ச்சுனன், இந்திரன் பெயர்கள் நேரிடையாகக் குறிப்பிடப் பெறவில்லை. கதையின் வழி கதை மாந்தர்கள் உணர்த்தப்பட்டுள்ளனர்.

### வீமன் எழுதிய மடைநூல்

வீமனின் சமையல் நூல் பற்றிய செய்தியைச் சிறுபாணாற்றுப்படை தெரிவிக்கக் காணலாம்.

**''பனி வரை மார்பன், பயந்த நுண்பொருட்**

**பனுவலின் வழா அப் பல்வேறு அடிசில்**

**வாள்நிற விசும்பின் கோள்மீன் சூழ்ந்த**

**இளங்கதிர் ஞாயிறு எள்ளும் தோற்றத்து**

**விளங்கு பொற் கலத்தில் விரும்புவன பேணி,**

**ஆன விரும்பின், தான் நின்று ஊட்டி''**[13]

என்னும் இப்பாடலில் வீமன் இயற்றிய மடைநூல் பற்றிய செய்தி குறிப்பிடப்பட்டுள்ளது. வீமன் சமையற் கலையில் வல்லவனாக விளங்கினான் என்பதையும், சுவையான அடிசிலைச் சுவைக்கும்பொழுது, நளபாகம் வீமபாகம் என்று குறிப்பிடும் வழக்கம் தொன்று தொட்டு வழங்கி வருகிறது என்றும் குறிப்பிடப்பட்டுள்ளது. அர்ச்சுனனுக்குத் தமையன் ஆகிய வீமன், எழுதி அருளிய மடைநூல் விதியின்படி தப்பாதவாறு சமைத்த பல்வேறு சுவையுடைய அடிசிலை, இளஞாயிற்றை இகழும் தோற்றமுடைய பொன்னால் இயன்ற உண்கலத்தில் இட்டு உண்பவர், விரும்புவனவற்றை அளித்து, மிக்க விருந்துடன் தானே முன்னின்று உண்ணச் செய்வான் என்று நல்லியங்கோடனின் விருந்தோம்பல் பண்புக்கு வீமன் எழுதிய மடைநூல் சிறப்பை உவமையாகக் கூறி விளக்கியுள்ளதைக் காணலாம்.

**யயாதி அரசன் துறக்கம் அடையச் செய்தல்**

யயாதி என்னும் அரசனைப் பற்றி,

**'' அறிந்தனிர் ஆயின், சான்றவிர்! தான் தவம்**

**ஒரீஇ, துறக்கத்தின் வழீஇ, ஆன்றோர்**

**உள் இடப்பட்ட அரசனைப் பெயர்த்து, அவர்**

**உயர் நிலை உலகம் உறீ இயாங்கு, என்**

**துயர் நிலை தீர்த்தல் நும்தலைக் கடனே''**[14]

எனும் பாடல் வாயிலாக அறியப் பெறலாம். யயாதி அரசனின் இன்னல் தீர்ந்த செய்தியை இதில் காண இயலும். சான்றோர் பிறர் துன்பத்தைத் தம் துன்பமாக எண்ணும் இயல்பினர் என்றும் யயாதி அரசன் தன் தவஞ் செய்தலினின்று நீங்கி, துறக்கத்திற் சேறலில் வழுந்தியபோது, சான்றோர்கள் அவ்வழுந்தலினின்று யயாதியை மீட்டுத் தவஞ் செய்வித்து, உயர்ந்த நிலைமையையுடைய சுவர்க்கத்தே போக விட்டுத் துயர் தீர்த்தாற் போல, என் துயரினது தன்மையைப் போக்குதலும் நம்மிடத்து முறைமை எனச் சான்றோரை நோக்கிக் கூறினான் என அறியலாம். சான்றோர் யயாதி அரசனின் துன்பத்தை நீக்கியதைப் போல, மடல் ஏறுகின்ற தலைவனின் துன்பத்தைச் சான்றோர் நீக்குதல் வேண்டும் என்று பாரதத் தொன்மச் செய்தியை ஒப்பிட்டுக் கூறியுள்ளமை அறியத்தக்கது.

**இராமாயணத் தொன்மங்கள்**

இராமாயணம் தொடர்பான சில கதை நிகழ்வுகள் சங்க இலக்கியங்களில் இடம் பெற்றுள்ளன. இராமன், சீதை, இராவணன் தொடர்பான கதைச் செய்திகளும், அகலிகை தொடர்பான செய்தியும் சங்க இலக்கியங்களில் இடம் பெற்றிருக்கக் காணலாம். ஊன்பொதி பசுங்குடையார் என்னும் புலவர் புறநானூற்றுப் பாடலில் இராமாயணத் தொன்ம நிகழ்வைக் குறிப்பிட்டுள்ளதைக் காணலாம்.

**“ மேம்படு சிறப்பின் அருங்கல வெறுக்கை**
**தாங்காது பொழிதந்தோனே; அது கண்டு**
**இலம்பாடு உழந்த என் இரும்பேர் ஒக்கல்,**
**விரற்செறி மரபின செவித் தொடக் குநரும்,**
**செவித்தொடர் மரபின விரற் செறிக் குநரும்,**

**அரைக்கு அமை மரபின மிடற்றுயாக் குநரும்**

**கடுந்தெறல் இராமனுடன் புணர் சீதையை**

**வலித்தகை அரக்கன் வெளவிய ஞான்றை**

**நிலம்சேர் மதர் அணி கண்ட குரங்கின்**

**செம்முகப் பெருங்கிளை இழைப் பொலிந் தாஅங்கு,**

**அறாஅ அருநகை இனிது பெற்றிகுமே''**[15]

என்னும் இப்பாடலில் இராவணன் சீதையைக் கவர்ந்து சென்ற செய்தி குறிப்பிடப்பட்டுள்ளது. மிக்க திறனுடைய இராமனுடன் காட்டிற்குச் சென்ற சீதையை, மிக்க வலிமை பெற்ற இராவணன் கவர்ந்து சென்ற போது சீதை கழற்றி எறிய நிலத்தே கிடந்த சிவந்த ஒளிவிடும் அணிகலன்களைக் கண்டெடுத்த சிவந்த முகத்தை உடைய மந்திகளாகிய பெரிய சுற்றம், அவ்வணிகலன்களைத் தாம் அணிந்து விளங்க, கண்டோர் சிரித்து மகிழ்ந்தனராம். ஊன்பொதி பசுங்குடையாரின் பாடலைக் கேட்டு வியந்த மன்னன் இளஞ்சேட் சென்னி, பொன் அணிகலன்களைத் தாராளமாக வழங்கினான் என்றும் புலவரின் சுற்றத்தினர் விரலில் அணியக் கூடியமோதிரத்தைக் காதிலும் காதில் செறிதற்கரிய குழை முதலியவற்றைக் கழுத்திலும் கழுத்தில் அணிவதை இடையிலும் அணிந்து கொண்டனர் என்றும் அத்தோற்றம் மந்திகள் அணிகலன்களை அணிந்து கொண்டன போல இருந்தன என்றும் நகைச்சுவை தோன்றக் கூறியுள்ள திறம் அறிந்து இன்புறத்தக்கது.

## இராவணன் இமயமலையைப் பெயர்த்தல்

கலித்தொகைப் பாடலில் இராமாயணத் தொன்ம நிகழ்வு குறிப்பிட்டுள்ளதைக் காணலாம்.

'' இமையவில் வாங்கிய ஈர்ஞ்சடை அந்தணன்

உமை அமர்ந்து உயர்மலை இருந்தனனாக

ஐ - இரு தலையின் அரக்கர் கோமான்

தொடிப்பொலி தடக்கையின் கீழ்புகுத்து, அம்மலை

எடுக்கல் செல்லாது உழப்பவன் போல,

உறுபுலி உரு ஏய்ப்பப் பூத்த வேங்கையைக்

கறுவு கொண்டு, அதன் முதல் குத்திய மதயானை

நீடு இருவிடர் அகம் சிலம்பக் கூய், தன்

கோடு புய்க்கல்லாது உழக்கும் நாட! கேள்''[16]

எனும் இப்பாடலில், மலையின் அடியில் இராவணனின் கைகள் அகப்பட்டு துன்புற்ற செய்தியைக் காணலாம். அபிதான சிந்தாமணி, ''இவன் (இராவணன்) தேவரை வருத்துதலைக் கேட்ட குபேரன், சகோதரன் என்ற உரிமை பற்றி, நான் தவத்தால் சிவமூர்த்தியிடம் தோழமை பெற்றேன். நீ தேவரை வருத்தாதே எனத் தூதனிடம் கூறியனுப்ப அத்தூதனை வெட்டி எறிந்து, குபேரனிடம் யுத்தம் செய்யப் போய் மணிபத்திரனைக் கொலை செய்து குபேரனை அடித்து, அவனிடம் இருந்த புட்பக விமானத்தைக் கவர்ந்து கொண்டு, அந்த விமானத்திலேறிச் சரவணத்தருகில் வருகையில் விமானம் நின்றுவிட, நந்திதேவர் இராவணனைப் பார்த்து இது சிவமூர்த்தியின் இருக்கை, நீ போதல் தகாது என, இராவணன் நந்தி தேவரைக் கண்டு குரங்கு முகன் எனப் பரிகசிக்க, நந்தி தேவர் கோபம் கொண்டு உன் பட்டணம் குரங்கால் அழிக எனச் சாபம் ஏற்றுக் கைலையை எடுக்க முயன்றனன். அதுகண்ட சிவமூர்த்தி தம் திருவடி விரலால் அழுத்த, மலையில் கைகள் அகப்பட்டு நசுக்குண்டு, ஆயிரம் பருவம் அழுததால், இராவணன் எனப் பெயரடைந்து அவ்வழியில் வந்த வாகீச முனிவர்

சொல்லால் சாமகானம் பாடிச் சிவானுக்கிரகம் பெற்றவன்.''[17] என்று இராவணன் பற்றிய செய்தியைக் கூறுகிறது.

இக்கருத்தை எடுத்துரைப்பதாகக் கலித்தொகைச் செய்யுள் அமைந்திருக்கக் காணலாம். வேங்கை மரத்தைப் புலியெனக் கருதி மரத்தின் அடிப்பகுதியில் தந்தங்களால் யானை குத்தியதாகவும் அத்தந்தங்களை எடுக்க இயலாமல் அகப்பட்டு யானை வருந்திய செயல், இராவணன் கைகள் இமயமலைக் கடியில் அகப்பட்டுத் துன்புற்ற செயலை ஒத்ததாக இருந்தது என உவமை நயம்படக் கூறியுள்ளதை அறியலாம்.

**இராமன் பறவை ஒலியை அடக்குதல்**

அகநானூற்றுப் பாடலொன்றில் இராமன் ஆலம் அவித்த செய்தி குறிப்பிட்டுள்ளதைக் காணலாம்.

**'' வென் வேற் கவுரியர் தொல் முது கோடி**
**முழங்கும் இரு பௌவம் இரங்கு முன் துறை**
**வெல்போர் இராமன் அருமறைக்கு அவித்த**
**பல்வீழ் ஆலம் போல,**
**ஒலி அவிந்தன்று, இவ் அழுங்கல் ஊரே''[18]**

எனும் இப்பாடல், இராமன் பறவைகளின் ஒலியை அடக்க முனைந்ததையும், இலங்கை மேல் போர் தொடுக்க வானர வீரர்களுடன் திட்டமிட்ட செய்தியையும் குறிப்பிடும் வண்ணம் அமையக் காணலாம். பாண்டிய மன்னருடைய மிகவும் பழமை வாய்ந்த திருவணைக் கரையருகே யிருந்த ஆலமரத்தின் கீழ் தமக்குத் துணையான வானர வீரருடன் இராமன் இலங்கை மேல் படையெடுத்துச் செல்லுவது பற்றிய மறைச் செய்திகளை

ஆராயும்பொழுது, மரத்திலிருந்த பறவைகள் ஒலியெழுப்பாதவாறு தன் ஆணையால் அடக்கினான் என்றதொரு இராம கதைச் செய்தி ஈண்டு கூறப்படுகிறது. இக்கதைச் செய்தி, தலைவன் தலைவியின் திருமண ஏற்பாடு கண்டு ஊராரின் அலர் ஒலி அடங்கியதற்கு உவமையாகக் கூறப்பட்டுள்ளது.

**அகலிகை சாபம்**

பரிபாடலில் அகலிகை சாபம் பெற்ற தொன்ம நிகழ்வு குறிப்பிட்டுள்ளதை அறியலாம். அபிதான சிந்தாமணி இத்தொன்மச் செய்தியை, ''அகலிகை கௌதம முனிவர் பத்தினி; முற்கல முனிவர் குமரி. இவளைக் கணவன் கங்கா தீர்த்தத்திற்கு நீங்கிய சமயம் கண்ட இந்திரன் கணவனைப் போல் உருக்கொண்டு புணர்ந்து கற்புக் குலைத்தனன். முனிவர்தம், வரவறிந்து பூனை உருக்கொண்டு செல்லும் இந்திரனை நோக்கி நீ ஆயிரம் பெண்களுக்குரிய குறியும், பீஜ மறுகையும் பெறுகவெனச் சபித்துப் பாரியையும் கல்லாகச் சபித்தனர். பின், அகலிகை வேண்ட முனிவர் மனதிரங்கி, இராமமூர்த்தி மிதிலைக்கு ஏகும் காலத்தில் அவரது திருவடிகளால் உருப்பெற, கருணை செய்தனர்''[19] என்று குறிப்பிடக் காணலாம்.

பூனை வடிவத்தில் உள்ள இந்திரன் அவனுடன் அகலிகை, கவுதம முனிவரின் உருவங்கள், அகலிகை, கவுதமரை விட்டுப் பிரிந்த நிலை, அகலிகை கல்லுருவான நிலை ஆகியன சித்திர மண்டபத்தில் ஓவியமாகத் தீட்டப்பட்டிருந்தன என்பதைப் பின்வரும் பாடல் வழி அறியலாம். அகலிகை சாபம் பெற்ற தொன்ம நிகழ்வு அக்காலக் கோயில்களில்

ஓவியமாகத் தீட்டப்பட்டு செல்வாக்கு அடைந்திருந்ததை இதனால் அறிய முடிகிறது.

**'' இரதி காமன், இவள் இவன் எனாஅ,**

**விரகியர் வினவ, வினா இறுப் போரும்;**

**இந்திரன், பூசை; இவள் அகலிகை; இவன்**

**சென்ற கவுதமன்; சினன் உறக் கல் உரு**

**ஒன்றிய படி இது என்று உரை செய்குவோரும்;**

**இன்ன பல பல எழுத்து நிலை மண்டபம்''**[20]

இப்பாடலில் கவுதமரின் சினத்தால் அகலிகை கல்லுருவடைந்த செய்தி குறிப்பிடப்பட்டுள்ளது.

**சகரர்**

புறநானூற்றுப் பாடலில் சகரர் பற்றிய தொன்மச் செய்தியைக் குறிப்பிட்டுள்ளதைக் காணலாம்.

**''வடா அது பனி படு நெடு வரை வடக்கும்,**

**தெனா அது உரு கெழுகுமரியின் தெற்கும்,**

**குணா அது கரை பொரு தொடு கடற் குணக்கும்''**[21]

என்னும் இப்பாடலில், பாண்டியன் பல்யாக சாலை முதுகுடுமி பெருவழுதியின் நாட்டெல்லையைக் குறிப்பிட்டிருக்கக் காணலாம். மேலும் கிழக்கு திசையில் அமைந்துள்ள கடல், சகரர் மற்றும் மைந்தர்களால் தோண்டப் பெற்றது என்ற செய்தியை இப்பாடல் வழி அறிய இயலும். ''இவன் கதிரவன் குலத்து மன்னன். இவனுடைய தந்தையின் பெயர் வாகுகன். தாய் வயிற்றில் இவன் கருவுற்றிருக்கையில் தந்தை மாண்டு

போனார். தாயும் தீப்பாய்ந்து உயிர்விடத் துணிந்தாள். அப்பொழுது ஊரு என்னும் முனிவர் ஒருவர் தோன்றி, 'உன் வயிற்றில் அரிய மகன் ஒருவன் இருக்கிறான். அவனால் உனக்கு எல்லா நன்மையும் உண்டாகும். ஆகவே உயிர் விடா தொழிக' என்று உரைத்தார். இவளும் உயிர் தாங்கியிருந்தாள். இவள் கருவுற்றிருத்தலையுணர்ந்த மாற்றாள் பொறாமை கொண்டாள். உண்ணும் உணவில் நஞ்சைக் கலந்து வைத்தாள். ஆயினும் இறைவன் அருளால் தீமை யொன்றும் உண்டாகவில்லை. உரிய காலத்தில் மகன் ஒருவன் பிறந்தான். நஞ்சு (கரம்) கலந்தும் ஊறின்றி பிறந்தபடியால் அவனுடைய பெயர் சகரன் என்று ஆகியது. கல்வி கற்றுத் திருமணம் புரிந்து உரிய காலத்தில் அரசாட்சியை மேற்கொண்டான். இவனுடைய ஆற்றல் தேவர்களும் வியந்து பாராட்டற்குரியதாகவிருந்தது. இந்திரனும் இவனெதிர் நின்று போர் புரிய முடியவில்லை. இவன் கொடை நலத்தினுஞ் சிறந்து விளங்கினான். ஆகையால் இவனை அனைவரும் முதல் வள்ளல் என்று போற்றலாயினர். இவனுடைய இரண்டாவது மனைவி பெற்ற அறுபதினாயிரம் பிள்ளைகட்கு ஒருசேரச் சகரர் என்ற பெயர் வழங்கலாகியது. முதல் மனைவி ஒரு மகனைப் பெற்றாள். அவனுக்கு அசமஞ்சதன் என்று பெயர். சகரன் தன்னுடைய மக்களையும் சுற்றத்தினரையும் உடன் வைத்து ஆதரித்துப் பேரும் புகழும் பெற்றான். இச்சகரர்களே கடலைத் தோண்டிக் கொண்டு பாதலஞ் சென்றவர்களென்றும் அதனால் கடல் சாகரம் என்று பெயர் பெற்றதென்றும் கூறுவர்''[22] எனச் சகரர் பற்றிய தொன்ம வரலாற்று அகராதியில் குறிப்பிடப்பட்டுள்ளது. இச்செய்தியைப் புறநானூற்றுப் பாடலில் புலவர் குறிப்பாகக் குறித்துள்ளார்.

**திருமாவுண்ணி**

"திருமாவுண்ணி என்பது கண்ணகி கதையைக் குறிக்கின்றது போலும்" என்று நற்றிணைக்கு உரை எழுதிய அ.நாராயணசாமி ஐயர் குறிப்பிட்டுள்ளார்.

மு.இராகவையங்கார், எஸ்.வையாபுரிப்பிள்ளை, பி.எல்.சாமி, ரகுநாதன் ஆகியோர் திருமாவுண்ணி கண்ணகியே என்றும் இக்கதை பின்னாளில் கதையாய் உருப்பெற்றிருக்கலாம் என்றும் கூறியுள்ளனர்.

நற்றிணையில் மருதத் திணையில் அமைந்துள்ள,

**" துனி தீர் கூட்டமொடு துன்னார் ஆயினும்**
**இனிதே, காணுநர்க் காண்புழி வாழ்தல்,**
**கண்ணுறு விழுமம் கை போல் உதவி,**
**நம்உறு துயரம் களையார் ஆயினும்,**
**இன்னாது அன்றே, அவர் இல் ஊரே,**
**எரி மருள் வேங்கைக் கடவுள் காக்கும்**
**குருகு ஆர் துழனியின் இதணத்து ஆங்கண்,**
**ஏதிலாளன் கவலை கவற்ற,**
**ஒரு முலை அறுத்த திருமாவுண்ணிக்**
**கேட்டோர் அனையர் ஆயினும்,**
**வேட்டோர் அல்லது, பிறர் இன்னாரே"**[23]

எனும் இச்செய்யுளுக்குத் 'தலைமகட்குப் பாங்காயினார் கேட்பத் தலைமகன், தலை நின்று ஒழுகப்படா நின்ற பரத்தை பாணற்காயினும்

விறலிக்காயினும் சொல்லுவாளாய் நெருங்கிச் சொல்லியது' எனக் கூற்று வகுக்கப்பட்டுள்ளது.

இப்பாடலில் திருமாவுண்ணி கதை உவமையாய் எடுத்தாளப் பட்டுள்ளது. ''குருகுகள் ஆரவாரம் செய்யும் வயற்கரையில் அமைந்ததும் கடவுள் நிலை பெற்றதும் நெருப்புப் போன்ற பூவை உடையது வேங்கைமரம்; அதன் மீது கட்டிய பரணருகில், அயலான் ஒருவன் செய்த செயலால் தோன்றிய கவலை வருத்திட, மார்பகம் ஒன்றனை அறுத்த திருமாவுண்ணி நின்றிருந்தனள். அவளைப் பற்றிக் கேட்டறிந்தவர்கள் கேட்ட அளவில் விட்டு விடுவர். அவளிடம் உண்மையான அன்புடையவர் மட்டுமே அவள் நிலைக்கு வருந்துவரேயன்றிப் பிறர் வருந்தார்'' என உரை கூறப்பட்டுள்ளதை அறியலாம்.

திருமாவுண்ணிக்குத் தலைவன் இல்லாத ஊர் பெருந்துன்பத்தைக் கொடுப்பதைப் போலத் தலைவன் இல்லாத ஊர் தலைவியைக் காட்டிலும் பரத்தைக்குப் பெருந் துயரத்தைத் தரக்கூடியது என்றும் திருமாவுண்ணி எனப்படும் கண்ணகியின் துயரத்தை, பரத்தையின் துயரத்துக்கு உவமையாகக் கூறப்பட்டுள்ளதை அறியலாம்.

பரத்தையின் துன்பம் பெரிது. தலைவன் உடன் இல்லை என்பதோடு, அவன் தலைவியும் உள்ளாள் என்பதும் சேர அவள் துன்பம் பெரிதாகிறது. திருமாவுண்ணியின் துன்பத்தை அறிந்தும் ஊரார் வாளா இருந்தனர். எனவே தான் பரத்தையின் பெருந்துன்பத்தினைத் திருமாவுண்ணிக்கு உவமையாக்கினார் புலவர். கண்ணகித் தொன்மம் சங்க இலக்கியவழி உருவாகியிருந்தமையை அறியலாம்.

**அகுதை**

புறநானூற்றுப் பாடலில் அகுதை பற்றிய தொன்மச் செய்தி குறிப்பிட்டுள்ளதைக் காணலாம்.

**'' சீர் கெழு நோன் தாள் அகுதை கண் தோன்றிய**
**பொன் புனை திகிரியின் பொய்யாகியரோ!**
**இரும் பாண் ஒக்கல் தலைவன், பெரும்பூண்,**
**போர் அடு தானை, எவ்வி மார்பின்''**[24]

என்னும் இப்பாடலில் அகுதையின் பொன் சக்கரம் பொய்யாகிப் போன செய்தி குறிப்பிடப்பட்டுள்ளது. அகுதை என்பவன் பெருவீரன் என்றும் அவனிடம் பொன்னால் ஆன சக்கரம் ஒன்று இருந்ததால் அவனை வெல்வது அரிது என்ற கருத்து எங்கும் பரவியிருந்தது என்றும் ஆனால் ஒரு போரில் அவன் இறந்ததால் அவன் சக்கரத்தின் புகழ் பொய்யானது என்றும் பழைய செய்திகளால் அறியலாம். அச்செய்தியைக் குறிப்பிட்டு, பொன் சக்கரம் பொய்யானது போல வேள் எவ்வியின் விழுப்புண் பல என்பதும் பொய்யாக வேண்டும் எனக் கூறப்பட்டுள்ளது. இப்பாடலில் எவ்வி விழுப்புண் பெற்றான் என்ற செய்தி மூலம் அவனது வீரச் சிறப்பைப் புலவர் உணர்த்தியுள்ளார். அகுதையுடன் வேள் எவ்வியை ஒப்பிட்டுப் புலவர் விளக்கியுள்ள திறம் அறிதற்பாலது. அகுதையின் சக்கரத்தையும் எவ்வியின் விழுப்புண் வடிவத்தையும் ஒப்பிட்ட புலவர், எவ்வி இறக்கவில்லை எனும் செய்தி வாராதா என ஏங்கியமை புலப்படுகிறது. அகுதையின் தோல்வியை ஏற்காத மனம் போலவே எவ்வியின் இறப்பினையும் ஏற்க மக்கள் மனம் துணியவில்லை என்று உணர்த்தி எவ்வியின் புகழை உயர்த்துகிறார் புலவர்.

**வாணா சூரன்**

வாணன் என்ற சொல்லுக்கு வாழ்நன்சூரன் என்பது பொருள். சோ என்னும் மதிலுக்குரியவன் வாணாசூரன். அவன் பெருஞ்செல்வனாக விளங்கினான். இதனை மாங்குடி மருதனார் மதுரைக் காஞ்சியில் பாடியுள்ளார்.

**'' தென்புல மருங்கின் விண்டு நிறைய**

**வாணன் வைத்த விழுநிதி பெறினும்**

**பழி நமக்கு எழுக என்னாய்''**[25]

எனும் பாடல் வாயிலாக வாணனின் பெருஞ்செல்வம் பற்றிக் குறிப்பிட்டுள்ளதை அறியலாம்.

பாண்டியன் நெடுஞ்செழியன் மெய்ம்மையை விரும்புபவன், பழி பாவங்களுக்கு அஞ்சுபவன் என்ற கருத்தை விளக்க வந்த புலவர், வாணாசூரன் அளவிற்குச் செல்வம் கிடைக்கும் என்றாலும் பழிச் செயலை அவன் செய்யான் எனப் போற்றுகின்றார். உலகுடன் பெறினும் கொள்ளலர் எனும் உயர் குறிக்கோளை உடையவர் நெடுஞ்செழியன் முதலிய தமிழ் மன்னர் என்பது மீண்டும் உறுதிப்படுத்தும் பாடல் இது.

**தூங்கெயிலழித்தல்**

ஆகாயத்தில் மூன்று கோட்டைகள் இருந்தனவாகவும், அவற்றைச் சோழ வேந்தன் அழித்ததாகவும் புறநானூறு, சிறுபாணாற்றுப்படை என்னும் சங்க நூல்கள் குறிப்பிடுகின்றன. அவற்றை,

'' ஒன்னார் உட்கும் துன் அரங் கடுந் திறல்
தூங்கு எயில் எறிந்த நின் ஊங்கணோர் நினைப்பின்,
அடுதல் நின் புகழும் அன்றே; கேடு இன்று''[26]

என்னும் புறநானூற்றுப் பாடல் வழியும்

'' ஓங்கு எயிற் கதவம் உருமுச் சுவல் சொறியும்
தூங்கு எயில் எறிந்த தொடி விளக்கு தடக்கை
நாடா நல் இசை, நல்தேர்ச் செம்பியன்
ஓடாப் பூட்கை உறந்தையும் வறிதே; அதாஅன்று''[27]

என்னும் சிறுபாணாற்றுச் செய்யுளடிகள் வாயிலாகவும் அறிய இயலும். ''பகைவர் உளம் நடுங்கி அஞ்சுவதும் அணுகுவதற்கு அரியதும் மிகுந்த வலிமையானதுமான தூங்கெயிலை அழித்த நின் முன்னோரை நினைப்பின் இன்று பகைவரை வெல்லுதல் நின் புகழ் அன்று'' என்று புறநானூற்றில் கிள்ளிவளவனின் முன்னோர் தூங்கெயில் அழித்த செய்தியைக் குறிப்பிட்டிருப்பதைக் காணலாம். சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளி வளவனின் வெற்றிச் சிறப்பை அவனது முன்னோர் தூங்கெயில் அழித்த செயலுடன் ஒப்பிட்டு கூறியுள்ள திறம் போற்றுதற்குரியதாகும்.

மேலும் சிறுபாணாற்றுப்படையின் வாயிலாக, ''சோழ மன்னனின் தொல் குடியில் தோன்றியவன்; பகைவருடைய தூங்கு எயிலை அழித்தவன்; தன்பால் வாழும் குடிகள் ஓடாமைக்குக் காரணமான ஓடாப்பூட்கை உறந்தை என்னும் ஊர் நல்கும் பரிசிலும் நல்லியக்கோடன் நல்கும் பரிசிலுக்கும் சிறியதாக இருக்கும்'' என்ற செய்தியை அறியலாம். இச்செய்திகளின் மூலம், சோழ மன்னனின் வீரத்தைச் சுட்டும்போது

தூங்கெயில் எறிந்த தொன்மத்தைப் புலவர் பயன்படுத்தியுள்ளார் என அறியலாம்.

ஆனால் பதிற்றுப்பத்தில் புலவர் காப்பியாற்றுக் காப்பியனார் தூங்கு எயில் அழித்த செயலைச் செய்ததாகக் கூறுவர். இதனை ‘கடவுளஞ்சி வானத்திழைத்த’ என்னும் தொடரால் விளக்கியுள்ளதை,

**“ கடவுள் அஞ்சி வானத்து இழைத்த**
**தூங்கு எயிற் கதவம் காவல் கொண்ட**
**எழூஉ நிவந்தன்ன, பரேர் எறுழ் முழவுத் தோள்”**[28]

எனும் செய்யுளடிகள் வாயிலாக அறியலாம்.

“அவுணர் தமக்குப் பகைவராகிய தேவர்கட்கு அஞ்சி வானத்திலே தாம் செல்லுமிடந்தோறும் உடன் வருமாறு அமைத்திருந்த மதிலைச் சோழனொருவன் தேவர் பொருட்டு வென்றழித்தானென்பது கதை” என்ன ஔவை துரைசாமிப்பிள்ளை இதற்கான விளக்கத்தைத் தருகின்றார். இச்செய்தி சோழ மன்னன் ஒருவனுக்குரியதாய் தொடர்ந்து கூறப்பட்டு வருவதையும் குறிப்பிட்டுள்ளார். சேர மன்னனின் தோள், வானத்துக் கோட்டை கதவிற்கு இடைப்பட்ட கணையமரம் போலக் காணப்படுகிறது என இத்தொன்மச் செய்தியை உவமையாகக் கூறி விளக்கியுள்ளது அறியத்தக்கது. இப்பாடல்களின் வாயிலாக வானத்துக் கோட்டையைச் சோழன் அழித்தான் என்பதால் அவன் பேராற்றலை வெளிப்படுத்த இத்தொன்மத்தைச் சேரனுக்குப் பயன்படுத்தினர். தூங்கெயிலின் வலிமை போன்றது சேரனின் தோள் வலிமை என்று பாடியுள்ளனர்.

தூங்கெயிலெறிந்த தொடித்தோட் செம்பியன் அகத்தியர் சொற்படி முதலிற் காவிரிப் பூம்பட்டினத்தில் இந்திரவிழா எடுத்த சோழன்

மூக்கோட்டையையும் வாளால் எறிந்து அசுரரை வென்று தேவரைக் காத்தான்''[29] என்பதால் தொடித்தோட் செம்பியனே அந்தச் சோழன் என்பர். சிவனே தூங்கெயில் அழித்ததை, முப்புரம் எரித்ததாகவும் சங்க நூல்கள் பாடுகின்றன. கலித்தொகை, பரிபாடல், புறநானூறு, திருமுரு காற்றுப்படை, பதிற்றுப்பத்து ஆகிய நூல்களில் குறிப்பிடப்பட்டுள்ளன.

**'' ஆதி அந்தணன் அறிந்து பரி கொளுவ,**
**வேத மா பூண் வையத் தேர் ஊர்ந்து,**
**நாகம் நாணா, மலை வில்லாக,**
**மூவகை ஆர் எயில் ஓர் அழல் - அம்பின் முளிய**
**மாதிரம் அழல, எய்து அமரர் வேள்விப்**
**பாகம் உண்ட பைங்கட் பார்ப்பான்''**[30]

என்னும் இச்செய்யுள், பிரமன் தேர்ப்பாகனாதல், வேதம் குதிரைகளாதல், வையம் தேராதல், முப்புரம் அழிதல், தேவர்களின் வெற்றிக்கு அடையாளமாக யாகம் செய்தல், வேள்வியில் உள்ள அவியுணவினைச் சிவன் ஏற்றல் எனும் செய்திகளைத் தரக் காணலாம்.

மேலும் மருதன் இளநாகனாரின்,

**'' ஓங்கு மலைப் பெரு வில் பாம்பு ஞாண் கொளீஇ**
**ஒரு கணை கொண்டு மூஎயில் உடற்றி,**
**பெருவிறல் அமரர்க்கு வென்றி தந்த**
**கறை மிடற்று அண்ணல் காமர் சென்னிப்**
**பிறை நுதல் விளங்கும் ஒருகண் போல''**[31]

என்னும் புறநானூற்றுச் செய்யுள் மேரு மலையை வில்லாகவும், பாம்பினை நாணாகவும் பொருத்துதல், ஓர் அம்பால் மூன்று மதிலை

அழித்தல், தேவர்களுக்கு வெற்றி தருதல் என்னும் செய்திகளைக் குறிப்பிடக் காணலாம். இவை மட்டுமின்றி,

**'' தொடங்கற் கண் தோன்றிய முதியவன் முதலாக,**
**அடங்காதார் மிடல் சாய, அமரர் வந்து இரத்தலின்,**
**மடங்கல் போல், சினைஇ, மாயம் செய் அவுணரைக்**
**கடந்து அடு முன்பொடு, முக்கண்ணான் மூஎயிலும்**
**உடன்றக்கால், முகம்போல ஒண் கதிர் தெறுதலின்,**
**சீறு அருங் கணிச்சியோன் சினவலின் அவ்எயில்**
**ஏறு பெற்று உதிர்வன போல், வரை பிளந்து, இயங்குநர்**
**ஆறு கெட விலங்கிய அழல் அவர் ஆர் இடை''**[32]

என்னும் கலித்தொகைச் செய்யுள், அயன் படைப்புத் தொழில் புரிதல், அவுணர்கள் தேவர்களின் எதிரியாய் இருத்தல், சினம் கொண்டு மூன்று கோட்டைகளையும் அழித்தல் ஆகிய தொன்மச் செய்திகளைக் குறிப்பிடக் காணலாம்.

**'' அயம் திகழ் நறுங் கொன்றை அலங்கல் அம் தெரியலான்**
**இயங்கு எயில் எயப் பிறந்த எரிபோல, எவ்வாயும்**
**கனைகதிர் தெறுதலின், கடுத்து எழுந்த காம்புத் தீ''**[33]

எனும் இச்செய்யுள் அசைகின்ற மூன்று கோட்டைகளை அழித்தவன் சிவன் என்ற செய்தியைத் தரக் காணலாம். கலித்தொகையின் கடவுள் வாழ்த்துப் பாடல் ''தேறு நீர் சடைக் கரந்து திரிபுரம் தீமடுத்து'' எனும் அடிகளில் திரிபுரம் தீயால் அழித்த செய்தியைக் கூறக் காணலாம். பத்துப்பாட்டு நூல்களுள் ஒன்றான திருமுருகாற்றுப்படை, ''மூவெயில் முருகிய முரண்மிகு செல்வன்'' என்று சிவனைக் குறிப்பிடுகின்றது.

தூங்கெயில் எறிந்ததைச் சிவன் முப்புரம் எறித்தான் எனவும் சங்க இலக்கிய நூல்கள் குறிப்பிடுகின்றமையால் சோழன் புகழைப் பரப்ப இத்தொன்மம் அவன் பாலும் சார்த்தி கூறப்பட்டிருக்கலாம். சைவ சமய எழுச்சி காரணமாகச் சோழனுக்கு பொருந்தியிருக்கலாம் எனக் கருதலாம்.

**தமிழ் வள்ளல்**

'' கான மஞ்ஞைக்குக் கலிங்கம் நல்கிய
அருந்திறல் அணங்கின் ஆவியர் பெருமகன்,
பெருங்கல் நாடன், பேகனும்; சுரும்பு உண
நறுவீ உறைக்கும் நாக நெடுவழிச்
சிறுவீ முல்லைக்குப் பெருந்தேர் நல்கிய,
பிறங்கு வெள் அருவி வீழும் சாரல்
பறம்பின் கோமான், பாரியும், கறங்குமணி
வால் உளைப் புரவியொடு வையகம், மருள,
ஈர நல்மொழி இரவலர்க்கு ஈந்த
அழல் திகழ்ந்து இமைக்கும் அஞ்சுவரு நெடுவேல்,
கழல் தொடித் தடக்கை, காரியும்; நிழல்திகழ்,
நீல, நாகம்நல்கிய, கலிங்கம்
ஆலமர் செல்வற்கு அமர்ந்தனன் கொடுத்த
சாவம் தாங்கிய சாந்துபுலர் திணிதோள்,
ஆர்வ நன்மொழி, ஆயும்; மால் வரைக்
கமழ்பூஞ் சாரல் கவினிய நெல்லி
அமிழ்து விளை தீம்கனி ஔவைக்கு ஈந்த,
உரவுச்சினம் கனலும் ஒளிதிகழ் நெடுவேல்

அரவக் கடல் தானை, அதிகனும், கரவாது

நட்டோர் உவப்ப, நடைப்பரி காரம்

முட்டாது கொடுத்த, முனை விளங்கு தடக்கை,

துளி மழை பொழியும் வளிதுஞ்சு நெடுங்கோட்டு

நளி மலை நாடன், நள்ளியும்; நளிசினை

நறும் போது கஞலிய நாகு முதிர் நாகத்து,

குறும் பொறை, நல்நாடு கோடியர்க்கு ஈந்த,

காரிக் குதிரைக் காரியொடு மலைந்த

ஓரிக் குதிரை, ஓரியும்; என ஆங்கு

எழுசமம் கடந்த எழுஉறழ் திணிதோள்

எழுவர் பூண்ட ஈகைச் செந்நுகம்''[34]

என்னும் சிறுபாணாற்றுப்படைச் செய்யுளடிகள், ஒவ்வொரு நான்கு அடிகளிலும் முதல் இரண்டு அடிகளில் வள்ளல்களின் கொடைச் சிறப்பையும் அடுத்த இரண்டு அடிகளில் அவர்தம் நாட்டு வளம், வெற்றிச் சிறப்பையும் குறிப்பிடக் காணலாம். கார் மேகத்தைக் கண்டு ஆடிய மயிலைக் குளிரால் நடுங்குகிறது எனக் கருதி ஆடை நல்கிய பேகனைப் போலவும் பாரியைப் போன்று அஃறிணைப் பொருட்களிடத்து இரக்கம் கொண்டு காத்தமை போன்றும் இரவலர்க்கு நன்மொழி அளித்த காரியைப் போன்றும் ஆய் அண்டிரன் போல இறைவனைப் போற்றியும் அதியமானைப் போல புலவரைப் பாதுகாத்தும் நள்ளியைப் போன்று இரவலரைப் பாதுகாத்தும் நல்ல நாடுகளைக் கூத்தாடுவோர்க்குக் கொடுத்த ஓரி முதலான கடையெழு வள்ளல்கள் செய்த அனைத்துக் கொடைச் சிறப்புக்களையும் தான் ஒருவனே செய்யும் சிறப்புடையவன் நல்லியக் கோடன் என்று குறிப்பிட்டுள்ளதை அறியலாம்.

மேலும் பேகனின் கொடைச் சிறப்பு பின்வரும் புறநானூற்றுப் பாடலில் குறிப்பிட்டிருக்கக் காணலாம்.

**''மடத் தகை மா மயில் பனிக்கும் என்று அருளி,**

**படா அம் ஈத்த கெடாஅ நல் இசை,**

**கடாஅ யானைக் கலிமான் பேக''**[35]

என்னும் இச்செய்யுள் பேகனிடம் பரிசில் பெற்ற பாணன் ஒருவன் பேகனின் கொடைச் சிறப்பை மற்றொரு பாணனிடம் கூறுவதாக அமைந்துள்ளதைக் காணலாம். மெல்லிய தகைமை பொருந்திய கரிய மயில் குளிரால் நடுங்குமென்று அருள் செய்து போர்வை கொடுத்த, அழியாத நற்புகழினையும், மதமுடைய யானையையும், மனம் செருக்கிய குதிரையையும் உடைய பேகன் இரவலரின் வறுமையறிந்து பொருள் கொடுத்து அவர்களது துன்பத்தைப் போக்குபவன் என்று குறிப்பிட்டுள்ள திறம் எண்ணுதற்குரியது. மேலும்,

**''உடாஅ, போரா ஆகுதல் அறிந்தும்,**

**படாஅம் மஞ்ஞைக்கு ஈத்த எம் கோ**

**கடாஅ யானைக் கலிமான் பேகன்''**[36]

எந்நாளும் போர்த்துத் திரியாதென அறிந்தும் மயிலுக்குப் போர்வை அளித்த அருளாளன் பேகன். அவன் அளவில்லாமல் கொடுத்தல் மறுமைப் பயன் நோக்கியது அன்று; அவனது கைவண்மை (வள்ளல் தன்மை) பிறரது வறுமைத் துன்பத்தைப் போக்குவதை மட்டுமே நோக்கியது. மேலே கூறப்பட்டுள்ள இரு பாடல்களிலும் புலவர் பரணர் பேகனின் கொடைச் சிறப்பு திறம்பட விளக்கப்பட்டுள்ளது.

தெய்வங்களின் நிறங்கள் பற்றிய செய்தி கலித்தொகைப் பாடலில் குறிப்பிடப்பட்டுள்ளது.

**'' ஒரு குழை ஒருவன் போல்; இணர் சேர்ந்த மராஅமும்,**
**பருதி அம் செல்வன் போல், நனை ஊழ்த்த செருந்தியும்,**
**மீன் ஏற்றுக் கொடியோன் போல் மிஞிறு ஆர்க்கும் காஞ்சியும்,**
**ஏனோன் போல், நிறம் கிளர்பு கஞலிய ஞாழலும்**
**ஆன் ஏற்றுக் கொடியோன் போல், எதிரிய இலவமும், ஆங்கு**
**தீது தீர் சிறப்பின் ஐவர்கள் நிலை போல''**[37]

என்னும் இப்பகுதி ஐந்து தெய்வங்களின் நிறங்களையும், தன்மைகளையும் குறிப்பிடக் காணலாம். ''நீர் பெருகுகின்ற கரையிடத்தே அழகுற நின்ற ஒரு பூங்குழையை உடைய பலதேவனைப் போலப் பூங்கொத்துக்கள் உடைய வெண்கடம்பும்; பருதியஞ்செல்வனான கதிரவனைப் போல அரும்பு மலர்ந்து இதழ் விரிந்தவாய் இருக்கும் செருந்தியும்; சுறா மீனைக் கொடியாகக் கொண்ட மன்மதனைப் போலக் கரிய வண்டுகள் ஆர்த்துக் கொண்டிருக்கும் காஞ்சியும்; காமனின் தம்பியான சாமனைப் போல் நிறம் மாறுபட்டு விளங்கிய பூக்களை உடைய ஞாழலும்; இடபத்தினைக் கொடியாகவுடைய இறைவனைப் போல் பூக்கும் காலத்தை எதிர்கொண்ட இலவமும் குற்றமற்ற சிறப்பினை உடைய ஐவர்களின் நிறத்தின் தன்மை போல, கரையிடத்துப் பூக்கள் விரிந்து பிற மரங்களோடே அழகு பெற நின்றன. ஐந்து கடவுளரின் நிறங்களைப் புலவர் மலர்களுக்கு உவமையாகக் கூறியுள்ளார். இதன் மூலம் புலவர் இயற்கைக்கும் கடவுளர்க்கும் உள்ள ஒற்றுமையைப் புலப்படுத்தக் காணலாம். சங்க காலத் தமிழகத்தில் பலராமன், சூரியன், மன்மதன், சாமன், சிவன் முதலிய இறை வழிபாடுகள் இருந்து வந்தமையும் அறியலாம்.

**சிவன்**

சங்க இலக்கியத்தில் சிவன் எனும் சொல்லாட்சி காணப் பெறவில்லை. முதுமுதல்வன் (புறம். *166*), கறைமிடற்றண்ணல் (புறம். *55*), மணி மிடற்றோன் (புறம். *56*), நீலமணி மிடற்றொருவன் (புறம். *91*), ஆலமர் கடவுள் (புறம். *198*), பைங்கட் பார்ப்பான் (பரி. *5*), முக்கட் செல்வர் (புறம். *6*), மிடற்றண்ணல் (பரி. *9*), முக்கண்ணான் (கலி. *2*), கணிச்சியோன் (கலி. *105*), ஆலமர் செல்வன் (கலி. *81*), ஈர்ஞ்சடை அந்தணன் (கலி. *38*), பசுங்கட் கடவுள் (கலி. *101*), ஆதிரையன் (கலி. *150*), புதுத்திங்கட் கண்ணியான் (கலி. *150*) எனப் பல பெயர்களால் சிவன் குறிப்பிடப் பட்டுள்ளான்.

''சிவன் என்னும் பெயர் இவ்விந்திய நாட்டின் வடமேற்கேயிருந்த பண்டைத் தமிழ் மக்களால் ஐயாயிரம் ஆண்டுகட்கு முன்னமே ஆக்கப்பட்டு எல்லாம் வல்ல முழுமுதற் கடவுளுக்குரிய சிறப்புப் பெயராக வழங்கப்பட்ட பான்மை தெளியற் பாற்று''[38] என மறைமலையடிகள் சிவனைத் தமிழ்த் தெய்வமாகக் குறிப்பிட்டுள்ளது இவண் எண்ணத்தக்கது.

மேலும் ஔவையார் அதிகனை,

**'' நீலமணி மிடற்று ஒருவன் போல**
**மன்னுக பெரும நீயே, தொல் நிலைப்**
**பெருமலை விடரகத்து அருமிசை கொண்ட**
**சிறியிலை நெல்லித் தீங்கனி குறியாது**
**ஆதல் நின் அகத்து அடக்கி**
**சாதல் நீங்க எமக்கு ஈத்தனையே''**[39]

என்று பாராட்டியுள்ளார் சிவபெருமான் விடமுண்ட செய்தியை இங்கு குறிப்பிட்டுள்ளார் ஔவையார். முதல் ஐந்து அடிகளில் அதியமானின் சிறப்புகள் குறிப்பிடப்பட்டுள்ளன. சிவபெருமான் கடிய விடமுண்டு பிறருக்கு அருள் செய்கின்ற நிலையினை அதியமானுக்கு உவமையாகக் கூறியிருக்கக் காணலாம். பெறலரிய கனியை அரிதின் முயன்று பெற்றுத் தானுண்ணாது ஔவைக்கு ஈந்தனன் அதியமான் தன்னுடைய ஆக்கம் கருதாமல் விடத்தை உண்டு பல்லுயிர்களையும் காத்தருளிய பண்பினால் நீலமணி மிடற்று ஒருவனை உவமை கூறினார் என்பர் உ.வே.சா. அதியமான் தன் நலம் கருதாப் பண்பாளன் என்பதற்குச் சிவபெருமானை உவம உத்தியாகக் கையாண்டு புலவர் விளக்கியுள்ள திறம் பாராட்டுதற்குரியது.

**கங்கையைத் தலையில் தாங்குதல்**

சிவன் கங்கையைத் தன் தலையில் தாங்கிய தொன்மக் குறிப்பு கலித்தொகை, பரிபாடல் ஆகியவற்றில் காணலாம். கலித்தொகையில்,

**''இமையவில் வாங்கிய ஈர்ஞ்சடை அந்தணன்''** (38.1)

எனும் குறிப்பு வருகிறது. ஈர்ஞ்சடை அந்தணன் என்பதற்குக் 'கங்கை ஈரத்தையுடையதான சடையினையுடைய இறைவன்' என்று பொருள். இக்குறிப்பு மட்டுமே இப்பாடலில் இடம்பெற்றுள்ளது. இக்கருத்து பரிபாடலில் சற்று விரிவாய் பாடப்பட்டுள்ளது.

**'' எரி மலர்த் தாமரை இறை வீழ்த்த பெருவாரி**
**விரி சடைப் பொறை ஊழ்த்து வழுநிகர் மலரேய்ப்பத்**
**தணிவுறத் தாங்கிய தனி நிலைச் சலதாரி''**[40]

எனும் பாடலடிகளில் பிரமன் ஆகாய கங்கையை விழச் செய்தல், சிவன் தன் சடையிலே மிக எளிதாய் கங்கையின் வேகம் தணியத் தாங்குதல் எனும் கூறுகள் குறிப்பிடப்பட்டுள்ளன.

கலித்தொகை கடவுள் வாழ்த்திலும் இத்தொன்மக் குறிப்பு இடம்பெற்றுள்ளது. 'தேறு நீர் சடைக் கரந்து' (2) எனும் தொடரில் இச்செய்தியைக் காணலாம். இதற்கு உரை வகுத்த உரையாசிரியர் 'பகை யென்ற தெளிகின்ற கங்கையின் வேகத்தைச் சடையில் ஒரு கூற்றிலே அடக்கி' என உரை கூறியுள்ளார்.

**முக்கண் உடையவன்**

சிவன் மூன்று கண்களை உடையவன் எனும் குறிப்பு சங்கப் பாடல்களில் இடம்பெற்றுள்ளது. 'முக்கட் செல்வர்' (புறம். 6), 'முக்கண் செல்வன்' (அகம். 181), 'முக்கண்ணான்' (கலி. 2 : 104) என்று சிவனது முக்கண் பற்றிய செய்தி குறிப்பிடப்பட்டுள்ளன. 'நெற்றி.. நாட்டம்' (பரி. 5), 'பிறை நுதல் விளங்கு மொரு கண்' (புறம். 55) என மூன்றாவது கண் நெற்றியில் அமைந்துள்ளதையும், 'இமையா முக்கண்' (திருமுரு. 153), 'இமையா நாட்டம்' (பரி. 5) என அக்கண்கள் இமைக்காத இயல்பு பற்றிக் குறிப்பிடப்பட்டுள்ளன.

**ஆலமர் கடவுள்**

ஆலின் அடியில் அமர்ந்த தெய்வமாகச் சிவன் காட்டப்பட்டுள்ளான். ஆலமர் செல்வன் (கலி. 81 : 9, 83 : 14, சிறுபாண். 97), ஆல் கெழு கடவுள் (திருமுரு. 256), ஆலமர் கடவுள் (புறம். 198) எனும் பெயர்களால் சிவன் குறிப்பிடப்பட்டுள்ளான். இது சிவபெருமானின் வேதமரபல்லா இயல்பைக் காட்டுகிறது. ஆலமரத்தின் கீழ் இருந்து

முனிவர்களுக்கு வேதப் பொருளை கூறிய தட்சிணாமூர்த்தியாய் பின்னாளில் சிவன் உருப்பெற்ற தொன்மத்திற்கு அடிப்படை என்றும் கூறுவர்.

### பிறை சூடல்

சிவன் பிறையைத் தலையில் சூடியவன் என்பதைச் சங்கப் பாடல்கள் காட்டுகின்றன. 'கொலைவன் சூடிய குழவித் திங்கள்' (கலி. *103:15*), 'எரிதிகழ் கணிச்சியோன் சூடிய பிறைக்கண்' (கலி. *103:25*) எனச் சிவன் பிறைசூடுதல் பற்றிக் குறிப்பிடப்பட்டுள்ளது. மேலும் 'சூடிய காணான் திரிதரும் கொல்லோ' (கலி. *142 : 26 - 27*), 'புதுத் திங்கட் கண்ணியான்' (கலி. *150 : 17*), அகநானூற்று கடவுள் வாழ்த்துப் பாடலிலும், 'முதிராத் திங்களொடு சுடரும் சென்னி' ஆகியனவும் சிவன் பிறையைச் சடாமுடியில் அணிந்தமையைக் குறிப்பிடுகின்றன.

### தக்கன் வேள்வி

தக்கனது வேள்வி பற்றிய செய்தியும் சங்க இலக்கியத்துள் காணலாம். ''தக்கன் - பிரமன் மானச புத்திரர்களில் ஒருவன், பரமனது கட்டை விரலில் பிறந்தவன் என்றும் கூறுவர். இவன் சிவமூர்த்தியை எண்ணித் தவம் செய்து, அம்மூர்த்தி பிரத்தியக்ஷமாகத்தான் உமையைக் குமரியாகப் பெறவும், சிவமூர்த்தி மருமகனாகவும் வரம் வேண்டிப் பெற்று, உமாதேவியைப் புத்திரியாகப் பெற்றுத் தாக்ஷாயணி எனப் பெயரிட்டு வளர்த்துச் சிவமூர்த்திக்குத் திருமணம் செய்வித்தனன். ஒருநாள் தன் குமரியைக் காண வேண்டித் திருக்கைலைக்குச் செல்லப் பூதகணங்களால் தடைப்பட்டுத் திரும்பிக் கோபாவேசனாய் விஷ்ணுவாதி தேவர்களை யாகத் தலைவர்களாக்கி ஒரு வேள்வி செய்யத் தேவர், இருடியர் முதலியோர்க்குத்

திருமுகம் அனுப்பினான். யாகத்திற்கு வந்த இருடிகளில் ததீசி முனிவர் சிவமூர்த்திக்கு அவி கொடுக்கும்படி பலமுறை கூறியும் கேளாது யாகம் தொடங்கினன். இந்த யாகக் காட்சியைக் காணத் தாக்ஷாயணி வந்தனள். தக்கன் உபசரிக்காதிருந்த உமாதேவியார் இது சுடுகாடாக எனச் சபித்து நீங்கிச் சிவமூர்த்தியை அடைந்து நடந்தவை கூறி யாகமழிய வேண்டினள். சிவமூர்த்தி வீரபத்திரரைச் சிருட்டிக்க உமாதேவியார் மாகாளியைச் சிருட்டித்து யாகத்தை அழித்து வர அனுப்பினார்''[41] என்று அபிதான சிந்தாமணி குறிப்பிடுகிறது. இச்செய்தியை கடுவன் இளவெயினனார்,

**'' ...................... அமரர் வேள்விப்**
**பாகம் உண்ட பைங்கட் பார்ப்பான்''**[42]

என்னும் பரிபாடல் செய்யுளடிகள் குறிப்பாகக் காட்டும். தக்கன் அமரர்க்குச் செய்த வேள்வி, அவ்வேள்வியில் இடப்பட்ட அவியுணவினைச் சிவன் உண்ணுதல் ஆகிய செய்திகளையும் இச்செய்யுளால் அறியலாம்.

**உமையொரு பாகன்**

சிவன் ஆண், பெண் கூறுகளாக இருந்த நிலை பற்றிப் புறநானூறு, அகநானூறு, ஐங்குறுநூறு ஆகிய நூல்களில் காணலாம்.

**'' பெண் உரு ஒரு திறன் ஆகின்று; அவ் உருத்**
**தன்னுள் அடக்கிக் கரக்கினும் கரக்கும்''**[43]

என்று புறநானூறும்,

**'' ............... சேர்ந்தோள் உமையே''**[44]

என்று அகநானூறும்,

**" நீல மேனி வாலிழை பாகத்து**

**ஒருவன் இருதாள் நிழற் கீழ்**

**மூவனா உலகும் முகிழ்ந்தன முறையே"[45]**

என ஐங்குறுநூறும் சிவன் உடம்பின் ஒரு பாதி ஆணாகவும் ஒரு பாதி பெண்ணாகவும் இருந்ததை எண்ணுவண்ணம் அமையக் குறிப்பிடுகின்றன.

**"உமை அமர்ந்து விளங்கும், இமையா முக்கண்"[46]**

என்ற திருமுருகாற்றுப்படைச் செய்யுட் தொடருக்கும்

**" இமையவில் வாங்கிய ஈர்ஞ்சடை அந்தணன்**

**உமை அமர்ந்து உயர்மலை இருந்தனனாக"[47]**

என்னும் கலித்தொகை தொடருக்கும் இறைவியாகிய உமையம்மையை ஒரு பாகத்தே கொண்ட இறைவன் என்பது பொருளாகும்.

சிவன் கூற்றுவனின் நெஞ்சைப் பிளந்த செய்தி கலித்தொகையில் குறிப்பிடப்பட்டுள்ளது.

**" படர் அணி அந்தி, பசுங் கட் கடவுள்**

**இடரிய ஏற்று, எருமை நெஞ்சு இடந்து இட்டு**

**குடர் கூளிக்கு ஆர்த்துவான் போன்ம்"[48]**

**"ஏற்றெருமை நெஞ்சம் வடிம்பின் இடந்து இட்டு,**

**சீற்றமோடு ஆர்உயிர் கொண்ட ஞான்று, இன்னன் கொல்**

**கூற்று என; உட்கிற்று, என் நெஞ்சு"[49]**

என்னும் இவ்விரு பாடல்களிலும் சிவன் கூற்றுவனின் நெஞ்சைக் கால் விளிம்பால் பிளந்த செய்தி குறிப்பிடப்பட்டுள்ளதைக் காணலாம். மிருகண்டு முனிவருக்கு மருத்துவதியிடம் பிறந்த குமரர் மார்கண்டேயன்.

இவருடைய தாய் தந்தையர், தமக்குப் பதினாறு வயதில் ஆயுளின் கால அளவு எனக் கூறக் கேட்டுச் சிவமூர்த்தியை எண்ணிப் பூசித்து வருகையில் ஆயுளின் முடிவில் யமன் வந்து சிவபூசை செய்திருக்கும் காலையில் பாசம் வீச இவர் சிவ பூசையினின்று நிலை தவறாதவராய் இருந்தார். சிவமூர்த்தி சிவலிங்கத் திடமாக உக்கிரமூர்த்தியாய்த் தோன்றி யமனை விழ உதைத்து இவருக்குச் சிரஞ்சீவி, இவ்வயதுடன் இருக்க அருளிச் செய்து, பூமிதேவி வேண்ட யமனை எழுப்பி அநுக்கிரகித்து அனுப்பினார்''[50] என்று அபிதான சிந்தாமணி குறிப்பிடக் காணலாம். இக்கருத்தையே கலித்தொகைப் பாடலில் குறிப்பிட்டிருக்கக் காணலாம்.

கலித்தொகையில் பலராமன், திருமால், சிவபெருமான், முருகன் முதலான கடவுளர் பற்றிய செய்திகள் கூறப்பட்டுள்ளது.

'' வான் உற ஓங்கிய வயங்கு ஒளிர் பனைக் கொடிப்,
பால் நிற வண்ணன் போல் பழி தீர்ந்த வெள்ளையும்,
பொரு முரண் மேம்பட்ட பொலம் புனை புகழ் நேமித்
திருமறு மார்பன் போல் திறன் சான்ற காரியும்,
மிக்கு ஒளிர் தாழ்சடை மேவரும் பிறைநுதல்
முக்கணான் உருவே போல் முரண் மிகு குராலும்,
மாகடல் கலக்குற மாகொன்ற மடங்காப் போர்
வேல்வலான் நிறனே போல் வெரு வந்த சேயும் ஆங்கு அப்
பொருவரும் பண்பினவ்வையும், பிறவும்
உருவப் பல் கொண் மூக் குழீ இயவை போல,
புரிபு புரிபு புகுந்தனர் தொழூஉ''[51]

என்னும் இச்செய்யுளில் பலராமன், மாயோன், சிவபெருமான், முருகன் முதலான கடவுளரின் நிறம் மற்றும் வலிமைப் பண்புகள் குறிப்பிடப் பட்டுள்ளன. ''வானத்தைப் பொருந்தும்படி ஓங்கிய ஒளிவீசும் பனைக் கொடியினை உடைய, பால் போன்ற நிறமுடைய பலராமனைப் போன்ற, குற்றம் நீங்கிய வெள்ளை எருது; மாறுபாட்டினால் ஏனையவற்றின் மேலான, பொன்னாலாகிய புகழ் பெற்ற சக்கரப் படையை உடையவனும் திருமகளை மறுவாக மார்பிலே கொண்டவனும் ஆகிய மாயோனின் நிறமுடைய கரிய எருது; ஒளிமிக்கு விளங்குகின்ற தாழ்ந்த சடையினையும் ஒரு பக்கத்தே பொருந்திய, பிறை போன்ற நுதலை உடையானையும் கொண்ட முக்கண்ணனாகிய சிவபெருமானின் உருவினை ஒத்த வலிமை யுடைய கபிலை நிற எருது; கரிய கடல் கலங்கும்படி, மாமரத்தின் வடிவில் நின்று அசுரனைக் கொன்று, புறங்கொடாத வேலினை உடைய வல்லனாய முருகனின் நிறம் போன்ற சிவந்த எருது'' என ஏறுகள் பலராமன், திருமால், சிவபெருமான், முருகன் முதலான கடவுளரோடு ஒப்புமைப்படுத்திக் காட்டப்பட்டுள்ளன. இக்கடவுளரின் நிறப் பண்பும் வலிமைப் பண்பும் ஏறுகளுக்கு உவமையாகக் கூறப்பட்டுள்ள திறமும் தொன்மம் தக்கவாறு பயன்படுத்தப்பட்டிருப்பதும் எண்ணற்குரியன.

பாரத, இராமாயணத் தொன்மங்களே மிகுதியாகச் சங்க நூல்களில் இடம்பெற்றுள்ளன. சிவன், முருகன், உமை, திருமால், பலராமன் பற்றிய செய்திகளும் திருமாவுண்ணி பற்றிய செய்தியும் இடம்பெற்றுள்ளன. இத்தொன்மங்கள் உத்திகளாகப் பயன்படுத்தப்பட்டுள்ளமையை அறிய முடிகின்றது.

## தொகுப்புரை

மக்களிடையே வழங்கப் பெற்று வரும் பழஞ் செய்திகள் புராணங்கள் ஆகும். தற்போதைய சமுதாயம் வரவேற்றும் புதுமைகளையும் புராணங்கள் தாங்கி நிற்கும். புராணங்கள் உலகத்தில் சமுதாயப் பரிணாம வளர்ச்சியைக் காட்டுவனவாக விளங்கும். ஈரமும் வீரமும் கொண்ட உதியன் சேரலாதன் பாண்டவர் கௌரவப் போர்க்களத்தில் வேறுபாடின்றி இருபடை வீரர்கட்கும் பெருஞ்சோறு வழங்கினான். பாண்டவர் கௌரவர் பொருத போர்க்களத்தைப் போல் எருதுகள் பொருத களத்தில் எலும்புகள் சிதறிக் கிடந்தன. பாண்டவர்கள் துரியனாதியரை வென்று ஆரவாரம் எழுப்பியதுபோல இளந்திரையன் பகைவரை வென்ற போர்க்களத்தில் வெற்றி ஆர்ப்பு எழுந்தது. அரக்கு மாளிகை தீப்பற்றிய போது வீமன் தாய் தனயர் தமையரைப் பாதுகாத்துக் கொண்டுசென்றது போலக் காடு தீப்பற்றியபோது யானை தன் இனத்தைப் பாதுகாப்பாக அழைத்துச் சென்றது.

துரியனுக்கு அக்குரன் என்பவன் இறுதி வரை கர்ணன் போன்று துணை நின்ற செய்தியைப் பதிற்றுப்பத்து உணர்த்துகிறது.

காண்டவவனத்தை உண்ண தீக்கடவுட்கு உதவிய கொடை வள்ளல் அர்ச்சுனன் தமையனாகிய வீமன் மடை நூலில் கூறிய வண்ணம் சிறப்பாகச் சமைத்த உணவை நல்லியக்கோடன் இரவலர்க் களித்தான் என்று சிறுபாணாற்றுப்படை வீமன் எழுதிய சமையல் கலை நூலைச் சிறப்பிக்கிறது.

இராவணன் சீதையைக் கவர்ந்து சென்ற போது அவள் எறிந்த அணிகலன்களை எடுத்த சுக்ரிவன் குரங்குப் படைகள் கையில் அணிவனவற்றைக் கழுத்திலும் காதில் அணிவனவற்றை மூக்கிலும் காலி அணிவனவற்றைக் கழுத்திலும் அணிந்தன. அதுபோல செருப்பாழி வென்ற இளஞ்சேட்சென்னி காலிலும், கழுத்திலும், காதிலும் கைகளிலும் மாற்றி மாற்றி அணிந்தசெய்தியை நகைச்சுவை தோன்றப்பாடி சோழனின் வள்ளன்மையைச் சிறப்பிக்கிறார்.

கைலையைப் பெயர்த்தெடுக்க முயன்ற இராவணன் கைகளைப் பெயர்க்க முடியாது வருந்தியதுபோல வேங்கை போலப் பூத்த வேங்கை மரத்தை வேங்கை எனக் குத்திய கொம்புகளைப் பெயர்க்க முடியாது வருந்திய செய்தியைக் கலித்தொகை விளக்கும்.

இராமன் ஆலமரத்தடியில் இலங்கைப் போரைப் பற்றிப் பேசுகையில் பறவை ஒலி இராமன் அம்பால் அடங்கியது போலத் தலைவன் திருமணப் பேச்சால் ஊரில் அலர் அடங்கிற்று.

வீமன் திரௌபதியின் துகில் உரிந்த துச்சாதனன் மார்பைப் பிளந்தது போல வீரம்மிக்க காளை தன்னை எதிர்த்த இளைஞன் மார்பைக் கொம்பால் குத்திப் பிளந்தது.

அசுவத்தாமன் தன் தந்தை துரோணரின் இறப்புக் காரணமாய் இருந்த சிகண்டியைக் கொன்றது போல வீரமிக்க எருது தன்னை எதிர்த்த இளைஞனைக் குத்திக் கொன்றது.

யயாதி மன்னனுக்கு மாமனார் சுக்கிராச்சாரியார் சாபம் கொடுத்தார். சான்றோர் யயாதிக்காகச் சுக்கிராச்சாரியாரிடம் சென்று பிழைபொறுக்க வேண்டினார். யயதாதி சாப விடைபெற்று வீடுபேறு அடைந்தான். யயாதிக்கு உதவிய சான்றோர் போல மடலேறும் தனக்குச் சான்றோர் துணை செய்து தலைவியை அடைய த் துணைபுரிய வேண்டும். தலைவன் விரும்பிய செய்தியை கலித்தொகை விளக்கும்.

முருகப்பெருமான் எழுந்தருளிய திருப்பரங்குன்றக் கோயில் மண்டபத்தில் அகலிகையும் இந்திரனும் கௌதம முனிவன் சாபம் பெற்ற வரலாறு சிற்பமாக வடிக்கப் பெற்றிருந்த செய்தியைப் பரிபாடல் விரித்துரைக்கும். இந்திரன், பூனை, அகலிகை, கௌதமன் ஆகியோர் திருவுருவங்கள் திருப்பரங்குன்றத் திருக்கோயில் மண்டபத்தில் செதுக்கப் பெற்றுள்ளன. கௌதமன் சாபம் பெற்றுக் கல்லான அகலிகை உருவம் கல் சிற்பமாக்கப் பெற்றுள்ளது.

வாகுகன் மகன் சகரன் தோண்டிய சாகரம் (கடல்) எல்லையாகக் கொண்ட பாண்டிய நாட்டைப் பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதி ஆண்டான்.

வேங்கைமரத்தடியில் ஒரு முலை இழந்த திருமாவுண்ணியைப் பற்றி அறிந்தார் இரக்கமுற்றார். அதுபோலத் தன்னைப் பற்றியறியாதார் தன்மேல் இரக்கமுறார் எனப் பரத்தை பாணனிடம் கூறும் கூற்றாய் நற்றிணைப் பாடல் கூறும் திருமாஉண்ணியின் கதையே கண்ணகி கதையாகப் பின்பு இலக்கியங்களில் இடம் பெற்றிருக்கலாம்.

அகுதை என்பான் பொன் சக்கரம் பொய்யானதுபோல் எவ்வி என்ற வள்ளல் புண்பட்டான் என்ற செய்தி பொய்யாதல் வேண்டும் என புறநானூறு எவ்வியின் மறச் சிறப்பை உயர்த்திப் புகழும்.

வாணன் என்பான் வைத்த பெருஞ்செல்வம் பெறினும் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன் பழிச் செயல் செய்யான் என்று மாங்குடிமருதனார் மதுரைக் காஞ்சியில் பாண்டியனைப் புகழ்வர்.

தூங்கெயில் வென்ற சோழ மன்னனைவிட நல்லியக்கோடன் கொடையில் சிறந்தவன் எனச் சிறுபாணாற்றுப்படை நல்லியக்கோடன் கொடைச்சிறப்பை விரித்துக் கூறும். முப்புரம் எரித்த சிவனார் அந்தணர் வேள்வியின் அவியுணவை ஏற்ற செய்தியைப் பரிபாடல் விளக்கும். சிவனார் எரித்த முப்புரம் வெம்மை தாங்காமல் வெடித்ததுபோல் பாலை நிலம் வெம்மை தாங்காமல் வெடித்துச் சிதறிய கற்கள் பரவிய வழியைப் பெற்றிருந்தது எனக் கலித்தொகை சிவனாரின் திரிபுரத்தைக் குறிப்பிடும்.

நாகம் நல்கிய ஆடையைச் சிவனார்க்கீந்த ஆயின் சிறப்பைச் சிறுபாணாற்றுப்படை விளக்குகிறது. சிறுபாணாற்றுப்படை கடைஎழு வள்ளல்களின் கொடைச் சிறப்பினும் நல்லியக்கோடன் கொடைச் சிறப்புப் பெருமை பெற்றது என்று நல்லியக்கோடனின் கொடை வீரத்தைப் புகழும்.

பலதேவனைப் போல் வெண்ணிறம் கொண்ட வெண்கடம்ப மலர்களும், மன்மதன்போல் உள்ள கருவண்டு மொய்க்கும்

காஞ்சிமலர்களும் மன்மதன் தம்பி சாமனைப்போல் ஞாழல் மரங்களின் வெண்மலர்களும் மலர்ந்திருந்த காட்சியைக் கலித்தொகை விரித்துரைக்கும்.

அரிய நெல்லிக்கனி ஈந்த அதியமானை அவ்வையார் நஞ்சுண்ட நீலகண்டனாகிய சிவன் போல் வாழ்க என வாழ்த்துப்பாடலில் சிவன் நஞ்சுண்ட தொன்மம் இடம் பெற்றுள்ளது.

# அடிக்குறிப்புகள்

1. மு.அருணாசலம், இலக்கிய வரலாறு, ப.6.

2. கலைக்களஞ்சியம், தொகுதி - 7, ப.436.

3. தே. லூர்து, நாட்டார் வழக்காறுகள், ப.136.

4. புறம். 2 : 13 - 16.

5. கலி. 104 : 52 - 59.

6. பெரும். 414 - 419.

7. கலி. 25 : 1 - 14.

8. பதிற்று. 14 : 5 - 7.

9. ஆலீஸ் (உரையாசிரியர்) பதிற்றுப்பத்து, ப.17.

10. கலி. 101 : 15 - 20.

11. மேற்படி 101 : 27 - 31.

12. சிறுபாண். 238 - 239.

13. மேற்படி 240 - 245.

14. கலி. 139 : 33 - 37.

15. புறம். 378 : 11 - 22.

16. கலி. 38 : 1 - 9.

17. ஆ.சிங்காரவேலு முதலியார், அபிதான சிந்தாமணி, ப.190.

18. அகம். 70 : 13 - 17.

19. ஆ.சிங்காரவேலு முதலியார், அபிதான சிந்தாமணி, ப.6.

20. பரி. 19 : 48 - 53.

21. புறம். 6 : 1 - 3.

22. சு.அ.இராமசாமிப் புலவர், சிறப்புப் பெயர் அகராதி, ப.184.

23. நற். 216.

24. புறம். 233 : 3 - 6.

25. மதுரை. 202 - 204.

26. புறம். 39 : 5 - 7.

27. சிறுபாண். 80 - 83.

28. பதிற்று. 31 : 18 - 20.

29. ஆ.சிங்காரவேலு முதலியார், அபிதான சிந்தாமணி, ப.885.

30. பரி. 5 : 22 - 27.

31. புறம். 55 : 1 - 5

32. கலி. 85 - 113.

33. மேற்படி 141 : 10 - 12.

34. சிறுபாண். 85 - 113.

35. புறம். 145 : 1 - 3.

36. மேற்படி 141 : 10 - 12.

37. கலி. 26 : 1 - 6.

38. மறைமலையடிகள், தமிழர் மதம், ப.114.

39. புறம். 91 : 6 - 11.

40. பரி. 9 : 4 - 6.

41. ஆ.சிங்காரவேலு முதலியார், அபிதான சிந்தாமணி, ப.767 - 768.

42. பரி. 5 : 26 - 27.

43. புறம். 1 : 7 - 8.

44. அகநானூறு கடவுள் வாழ்த்து.

45. ஐங்குறு நூறு கடவுள் வாழ்த்து, 1 : 2.

46. திருமுரு. 153.

47. கலி. 38 : 1 - 2.

48. மேற்படி 101 : 24 - 26.

49. மேற்படி 103 : 43 - 45.

50. ஆ.சிங்காரவேலு முதலியார், அபிதான சிந்தாமணி, ப.1298.

51. கலி. 104 : 7 - 17.

# இயல் - 3

## முருகன் பற்றிய தொன்மங்கள்

நடும்பெருஞ் சிமையத்து நீலப்பைஞ்சுனை
ஐயவருள் ஒருவன் அங்கை ஏற்ப
அறுவர் பயந்த ஆறமர் செல்வ!
ஆல்கெழு கடவுள் புதல்வ! மால் வரை
மலைமகள் மகனே.

திருமுருகாற்றுப்படை 253-257

# 3. முருகன் பற்றிய தொன்மங்கள்

முருகன் என்ற சொல்லுக்கு 'அழகு' என்பது பொருள். செவ்வேள், நெடுவேள், விறல்வேள், செய்யோன், சேயோன், நெடியோன், முருகு, முருகன் என முருகனுக்குரிய சிறப்புப் பெயர்களாகப் பல பெயர்களைக் குறிப்பிடக் காணலாம். செந்நிறம் உடையவன் முருகன் எனக் கருதுவதால் சேயோன், செவ்வேள் என்றும் குறிப்பிடுவர். முருகன் தமிழ்க் கடவுளாய் உருவான வரலாறு தமிழ்ப் பண்பாட்டின் அடையாளமாகவும் தமிழர் நாகரிகச் சின்னமாகவும் விளங்குகிறது எனலாம்.

முருகனுடன் அணங்கும் சூரும் சேர்த்துக் கூறப்பட்டுள்ளதைக் காணலாம். அக்காலத்தில் கன்னிப் பெண்கள் உடல் வனப்பிழந்து நோய் ஏற்பட்டால் தீர்ப்பவன் முருகனே என்று மக்கள் நம்பியதை அறியலாம்.

'' அணங்கு அறி கழங்கின் கோட்டம் காட்டி,
வெறி என உணர்ந்த உள்ளமொடு மறி அறுத்து
அன்னை அயரும் முருகு நின்
பொன் நேர் பசலைக்கு உதவாமாறே?''[1]

'' கறி வளர் சிலம்பிற் கடவுட் பேணி
அறியா வேலன், 'வெறி' எனக் கூறும்''[2]

'' அறியாமையின், 'வெறி' என மயங்கி
அன்னையும் அருந் துயர் உழந்தனள்; ''[3]

'' பொய்யா மரபின் ஊர் முது வேலன்
கழங்கு மெய்ப் படுத்து, கன்னம் தூக்கி

‘முருகு’ என மொழியும் ஆயின்,

கெழுதகை கொல் - இவள் அணங்கியோற்கே’’[4]

‘‘ அருங்கடி வேலன் முருகொடு வளை இ

அரிக்கூடு இன்இயம் கறங்க நேர் நிறுத்து

கார் மலர்க் குறிஞ்சி சூடி, கடம்பின்

சீர் மிகு நெடுவேட் பேணி, தழூஉப் பிணையூஉ

மன்று தொறும் நின்ற குரவை’’[5]

‘‘ கள்ளும் கண்ணியும் கையுறை யாக

நிலைக்கோட்டு வெள்ளை நால்செவிக் கிடாஅய்

நிலைத்துறைக் கடவுட்கு உளப்பட ஓச்சி

தணி மருங்கு அறியாள், யாய் அழ

மணி மருள் மேனி பொன்நிறம் கொளலே’’[6]

எனும் செய்யுளடிகள் யாவும் பெண்டிரின் உடல் மாற்றத்தினைப் போக்குபவன் முருகனே என நம்பினர் என்பதை எடுத்துக்காட்டுகின்றன. பெண்டிருக்கு ஏற்பட்ட அந்நோயைப் போக்க வேலனைக் கொண்டு வெறியாட்டு நிகழ்வு நடத்தப்பட்டதை இவை யாவும் கூறக் காணலாம். தலைவிக்கு ஏற்பட்ட மாற்றம் தலைவன்பால் கொண்ட காதலே என்பதைத் தோழி கூற்றால் அறியலாம். தாய் தலைவியின் உடல் மாற்றத்தினைப் போக்க வெறியாட்டு நிகழ்வு நடத்த முனைவதைக் காணலாம்.

வெறியாட்டு நிகழ்வில் வேலினை ஏந்தி வழிபடும் வேலன் கழற்சிக் காய்களைக் கொண்டு குறி கூறுவான். வேலன் தலைவியின் இம்மாற்றத் திற்குக் காரணம் எது என்று குறி செல்லுவதையும் சங்க இலக்கியப் பாடல்கள் வழி அறிய இயலும். குறிஞ்சி நிலக் குரவைக் கூத்தில் வேலன் வழிபாடு நிகழ்ந்தமை கூறப்பட்டுள்ளது. மருத நிலத்திலும் முருகன்

வழிபாடு நடைபெற்றது என்பது அகநானூற்றுச் *(156:13-17)* செய்யுள் மூலமாகக் காணலாம்.

**முருகன் பிறப்பு**

கடவுள் வழிபாட்டு நெறிகள் மிகுதியாகக் கூறப்பட்டிருக்கும் பரிபாடலிலும், திருமுருகாற்றுப் படையிலும் முருகன் பிறப்புத் தொன்ம நிகழ்வுகள் குறிப்பிடப்பட்டுள்ளன. பரிபாடலில் விரிவான நிலையில் முருகன் பிறப்புச் செய்தி இடம்பெற்றுள்ளது.

பரிபாடலில் முருகன் பிறந்த இடம் பற்றி பின்வரும் பாடலில் குறிப்பிட்டுள்ளதைக் காணலாம்.

**'' இமயக் குன்றினில் சிறந்து**
**நின் ஈன்ற நிரை இதழ்த் தாமரை**
**மின் ஈன்ற விளங்கு இணர் ஊழா**
**ஒரு நிலைப் பொய்கையோடு ஒக்கும் நின் குன்றின்**
**அருவி தாழ் மலைச் சுனை''**[7]

என இப்பாடலில் இமயமலையிலுள்ள சுனைகளை ஒத்தது திருப்பரங் குன்றத்து மலை சுனை நீர் என்றும் இமயமலையில் உள்ள சரவணப் பொய்கையில் தாமரை மலரில் முருகன் பிறந்த நிகழ்வு இப்பாடலடிகளில் குறிப்பிடப்பட்டுள்ளது அறியத்தக்கது.

பரிபாடலில் முருகன் பிறப்புப் பற்றிய செய்தி குறிப்பிட்டுள்ளதைக் காணலாம்.

**'' இரு நிலம் துளங்காமை வடவயின் நிவந்து ஓங்கி,**
**அரு நிலை உயிர் தெய்வத்து அணங்கு சால் தலை காக்கும்,**

உருமுச் சூழ் சேண் சிமை - உயர்ந்தவர் உடம்பட
எரிமலர்த் தாமரை இறை வீழ்த்த பெரு வாரி
விரி சடைப் பொறை ஊழ்த்து, விழு நிகர் மலர் ஏய்ப்ப,
தணி வுறத் தாங்கிய தனி நிலைச் சலதாரி
மணிமிடற்று அண்ணற்கு, மதி ஆரல் பிறந்தோய்!''[8]

என இப்பாடலில் இமயமலையில் பிரமதேவன் ஆகாய கங்கையை விழச் செய்தான் என்றும் சிவபெருமான் அதன் வேகம் தணியுமாறு தன் தலையில் தாங்கியருளினான் என்றும் இப்பாடலில் கூறப்பட்டுள்ளது. கார்த்திகை பெண்கள் அறுவரிடத்தும் பிறந்தவன் முருகன் என்ற நிகழ்வு இங்கு குறிப்பிடப்பட்டுள்ளது.

பரிபாடலில் இடம்பெற்றுள்ள ஐந்தாம் பாடலில் முருகன் பிறந்த நிகழ்வு விரிவாகக் கூறப்பட்டுள்ளது.

''........அமரர் வேள்விப்
பாகம் உண்ட பைங்கட் பார்ப்பான்
உமையொடு புணர்ந்து, காம வதுவையுள்
அமையாப் புணர்ச்சி அமைய, நெற்றி
இமையா நாட்டத்து ஒருவாரம் கொண்டு,
'விலங்கு' என விண்ணோர் வேள்வி முதல்வன்
விரிகதிர் மணிப் பூணவற்குத் தான் ஈத்தது
அரிது என மாற்றான், வாய்மையன் ஆதலின்,
எரி கனன்று ஆனாக் குடாரி கொண்டு அவன் உருவு
திரித்திட்டோன், இவ்உலகு ஏழும் மருள
கருப் பெற்றுக் கொண்டோர், கழிந்த சேய் யாக்கை
நொசிப்பின், ஏழ் உறு முனிவர், நனி உணர்ந்து

**வசித்ததைக் கண்டம் ஆக மாதவர்,**

**'மனைவியர், நிறைவயின், வசி தடி சமைப்பின்,**

**சாலார், தானே தரிக்க' என, அவர் அவி**

**உடன் பெய்தோரே, அழல் வேட்டு; அவ் அவித்**

**தடவு நிமிர் முத் தீப் பேணிய மன் எச்சில்**

**வடவயின், விளங்கு ஆல் உறை எழு மகளிரும்**

**கடவுள் ஒரு மீன் சாலினி ஒழிய**

**அறுவர் மற்றையோரும் அந்நிலை அயின்றனர்**

**மறு அறு கற்பின் மாதவர் மனைவியர்**

**நிறைவயின் வழா அது நிற் சூலினரே;**

**நிவந்து ஓங்கு இமயத்து நீலப் பைஞ் சுனைப்**

**பயந்தோர் என்ப, பதுமத்துப் பாயல்,**

**பெரும்பெயர் முருக! நிற்பயந்த ஞான்றே**

**அரிது அமர் சிறப்பின் அமரர் செல்வன்**

**எரி உமிழ் வச்சிரம் கொண்டு, இகந்து வந்து எறிந்தென**

**அறுவேறு துணியும் அறுவர் ஆகி,**

**ஒருவனை; வாழி, ஓங்கு விறல் சேஎய்!''**[9]

அமரர் செய்த வேள்வியில் அவியுணவினை உண்ட சிவபெருமான் சினத்தால் சிவந்த நெற்றிக் கண்ணையுடையவன். அப்பெருமான் மலையரசன் மகளாகிய உமையம்மையை மணந்தவன். இந்திரன் வேண்டுகோளுக்கு ஏற்ப ஒருநாள் உமையின் கருவினைத் துண்டுகளாக்கிச் சிதைத்தான். அதனால் உலகம் மருண்டது. கருவினை ஏழு முனிவர்கள் பெற்றனர். இக்கரு ஆறுமுகனாகி அமர்படைத் தலைவனாகும் என்பதைத் தம் ஞான வலிமையால் உணர்ந்து கொண்டனர். கருத்துண்டுகளைத்

தங்கள் மனைவியர் உண்டு சூல் கொண்டால் அவர்களது கற்புடைமைக்குப் பொருந்தாது என்று எண்ணிய முனிவர்கள் அக்கருத் துண்டுகளை ஒன்றாகச் சேர்த்து வேள்வித் தீயிலிட்டனர்.

வேள்வியில் கிடைத்த அவிப்பாகத்துடன் சேர்ந்த எச்சிலாகிய அவற்றை வானின் வடதிசையில் உறையும் ஏழு மகளிருள் கடவுட் கற்பினையுடைய அருந்ததி நீங்கலாக பிறர் அறுவரும் அப்பொழுதே உண்டனர். தங்கள் கணவர் விரும்பியதாலேயே உண்டதால் குற்ற மற்றவராகிய கார்த்திகை மகளிர் அறுவரும் உன்னைத் தங்கள் வயிற்றில் கருவாகத் தாங்கி வளர்த்து இமயமலையில் சரவணப் பொய்கையில் தாமரைப் பாயலில் ஒரு சேர உன்னைப் பெற்றெடுத்தனர்; உன்னைப் பெற்ற பொழுதே இந்திரன் பகை கொண்டு முனிவர்கட்குத் தான் கருவினைக் கொடுத்ததையும் வரம் அளித்ததையும் மறந்து விட்டுத் தீயினைக் காக்கும் தனது வச்சிரப் படையினால் வெட்டினான். முன் ஆறு துண்டுகளாக இருந்தவை அறு வடிவமாகிப் பின் ஆறும் சேர்ந்து ஒரு உருவமாக நீ ஆயினை என்று முருகன் பிறப்புப் பற்றிய தொன்ம நிகழ்வை விளக்க உத்தியாகப் பயன்படுத்திக் கடுவன் இளவெயினனார் விரிவாக இப்பாடலில் விளக்கியுள்ளதை அறியலாம்.

திருமுருகாற்றுப்படையில் முருகன் பிறப்புப் பற்றிய செய்தி குறிப்பிடப்பட்டுள்ளது.

**'' நடும்பெருஞ் சிமையத்து நீலப் பைஞ்சுனை**
**ஐவருள் ஒருவன் அங்கை ஏற்ப**
**அறுவர் பயந்த ஆறுஅமர் செல்வ!**
**ஆல்கெழு கடவுள் புதல்வ! மால்வரை**
**மலைமகள் மகனே''**[10]

என இப்பாடலில் சிவபெருமானிடமிருந்து தீப்பொறிகளை அக்கினி தன் உள்ளங்கையில் பெற்றுக் கொண்டு, அதை வாயுவிடம் கொடுத்த குறிப்பும் தெளிவாக இடம்பெற்றுள்ளது. உமாதேவி ஆறு குழந்தைகளையும் எடுத்தணைக்கும் போது முருகன் தோன்றினான் என்பதை விளக்க உத்தியாகக் கூறக் காணலாம்.

நல்லந்துவனார் முருகன் பிறந்த இடம் சரவணப் பொய்கை என்றும் குன்றம்பூதனார் கார்த்திகைப் பெண்கள் அறுவரிடத்தும் பிறந்தவன் முருகன் என்றும் பரிபாடலில் குறிப்பிட்டிருக்கக் காணலாம். கடுவன் இளவெயினனார் முருகன் பிறப்புத் தொன்ம நிகழ்வை விரிவான நிலையில் கூறியுள்ளார். நக்கீரர் திருமுருகாற்றுப்படையில் அக்கினி தீப்பொறிகளை வாயுவிடம் கொடுத்த செய்தியைக் குறிப்பிட்டு விளக்கியுள்ளார். இவை யாவும் முருகனின் பிறப்பை உணர்த்துகின்றன.

**முருகன் தாய் - தந்தை**

முருகன் பிறப்புக் கதை வழி கார்த்திகைப் பெண்டிர் அறுவரே முருகனின் தாயராய்க் குறிப்பிடப்படுகின்றனர். சிவபெருமானின் மனைவி எனும் நிலையில் உமையம்மையும் முருகனின் தாயாகக் காணலாம்.

**''அமரர் வேள்விப்**
**பாகம் உண்ட பைங்கட் பார்ப்பான்**
**உமையொடு புணர்ந்த காம வதுவையுள்**
**அமையாப் புணர்ச்சி அமைய''**[11]

இப்பாடலில் சிவன் உமையம்மையை மணந்து கொண்ட கதை இடம் பெற்றுள்ளது. இப்பாடலடிகள் சிவனின் மனைவி உமை என்பதைக் குறிப்பிடுகின்றன.

**"கா அய் கடவுட் சேஎய்! செவ்வேள்!"[12]**

எனும் செய்யுளடி சிவனின் புதல்வன் முருகன் எனக் குறிப்பிடுகிறது.

திருமுருகாற்றுப்படையில்,

**" ஆல்கெழு கடவுட் புதல்வ! மால் வரை**

**மலைமகள் மகனே!"[13]**

என்பதன் வாயிலாக, முருகனைப் பார்வதியின் மகனாகவும் மலைமகள் மகனாகவும் குறிப்பிட்டிருப்பதை அறியலாம்.

**" கடம்பு அமர் செல்வன் கடி நகர் பேண -**

**மறுமிடற்று அண்ணற்கு மாசிலோள் தந்த**

**நெறிநீர் அருவி அசும்பு உறு செல்வம்"[14]**

என்னும் செய்யுளடிகளில் 'மாசிலோள்' என்பது உமையம்மையைக் குறிக்கக் காணலாம். முருகனைப் பெற்றவள் உமை என்று குறிப்பிடப் படுவது இதனால் அறியலாகிறது. உமை மட்டுமின்றி,

**"வெற்றி வெல்போர்க் கொற்றவை சிறுவ!"[15]**

என முருகனுக்குத் திராவிடத் தெய்வமான கொற்றவையும் தாயாகக் குறிப்பிடப்படுவதைக் காணலாம்.

**" வெண்திரைப் பரப்பின் கடுஞ்சூர் கொன்ற**

**பைம்பூண் சேஎய் பயந்த மாமோட்டு**

**துணங்கை அம் செல்விக்கு அணங்கு"[16]**

என்று பெரும்பாணாற்றுபடையும் கூறியுள்ளது.

முருகன் பிறப்புக் கதையின்படி சிவன், உமையம்மையின் மகனாகவும் முருகனின் தாயார் கார்த்திகைப் பெண்டிர் என்பதும்; வெற்றித் தெய்வமாகவும்

சக்தியின் வேறு வடிவமாகவும் விளங்குகின்ற கொற்றவை மகன் முருகன் என்பதும் சங்க நூல்கள் வழி தெரிய வருகின்றன.

**முருகன் இந்திரனை வெல்லுதல்**

பரிபாடலில் முருகன் இந்திரனை வென்ற தொன்ம நிகழ்வைக் குறிப்பிட்டுள்ளதைக் காணலாம்.

முருகனது சிறப்புக்களைப் போற்றிக் கூற வந்த புலவர், இந்திரனை வென்ற நிகழ்வைக் கூறி அதனை விளக்கியுள்ளார். சிவனிடமிருந்து கருவை இந்திரன் பெற்றுச் சென்றான் என்றும் முனிவர்களின் மனைவியர்களாகிய கார்த்திகை மகளிர் அறுவரின் வயிற்றில் வளரச் செய்தான் என்றும் சரவணப் பொய்கையில் முருகன் பிறந்தபொழுதே இந்திரன் பகை கொண்டு தீயினைக் கக்கும் வச்சிரப் படையினால் வெட்டினான் என்றும் ஆறு துண்டுகளாக இருந்தவை ஆறு வடிவமாக மாறி இந்திரனை வென்று முருகன் தோற்றத்திற்குக் காரணமாயின என்றும் குறிப்பிடப்பட்டுள்ளது.

**'' பிறந்த ஞான்றே, நின்னை உட்கிச்**
**சிறந்தோர் அஞ்சிய சீர் உடையோயே!''**[17]

எனும் இப்பாடலடிகள் இந்திரனை வென்ற தொன்ம நிகழ்வை எடுத்துரைக்கக் காணலாம்.

**சூரனை வெல்லுதல்**

சங்க இலக்கியங்களில் சூர் என்பது அச்சம், தெய்வம், கடுப்பு, சூரர மகளிர் எனும் பல பொருட்களைக் குறிப்பதுடன் சூரபன்மனைக் குறிக்கும் சொல்லாகவும் ஆளப்பட்டுள்ளது. சூர் என்னும் சொல்லுக்குப் பொதுவாக

'தெய்வம்' எனவும் 'தீண்டி வருத்தும் தெய்வம்', 'வருத்தந் தரும் தெய்வம்', 'மலையுறை தெய்வம்' எனப் பலவாறாக உரை கூறியுள்ளனர்.

பரிபாடலில் சூரனை வென்ற தொன்ம நிகழ்வு குறிப்பிடப்பட்டுள்ளது. முருகனது பல்வேறு வெற்றிச் சிறப்புகளைக் குறிப்பிட்டு முதற் சிறப்பாக சூரனை வென்ற நிகழ்வு கூறப்பட்டுள்ளது. முருகப் பெருமான் ஆறுமுகம், பன்னிரு கைகளை உடையவன் என்றும், பிறந்தபொழுதே இந்திரன் முதலான தேவர்களை அச்சம் கொள்ளச் செய்தவன் என்றும் கூறியிருக்கக் காணலாம். சூரபன்மனாகிய அசுரன் கடலில் மாமரமாக நின்றபோது கிளைகளோடு அவனை அறுத்தவன் முருகன் என்பதைப் பின்வரும் செய்யுளடிகள் குறிப்பிடுகின்றன.

**" .................. போர் மலிந்து**

**சூர் மருங்கு அறுத்த சுடர்ப் படையோயே"[18]**

இப்பாடலில் சூரனை வென்ற தொன்ம நிகழ்வு விளக்க உத்தியாகப் பயன்படுத்தி விளக்கப்பட்டுள்ளது.

கொடிய அரக்கனாகிய சூரபன்மன் மாயங்கள் செய்வதில் வல்லவன் என்பதையும் அவன் மாமரமாகி நின்றதையும் அம்மரத்தை வேருடன் வெட்டியெடுத்த வேற் படையினையுடைய போர்த்தொழிலில் வல்லவன் முருகன் என்பதையும் பின்வரும் பாடல் மூலம் அறியலாம்.

**" கடுஞ்சூர் மாமுதல் தடிந்து அறுத்த வேல்**

**அடும் போராள! நின் குன்றின் மிசை"[19]**

சங்க இலக்கியத்திலுள்ள பதிற்றுப்பத்து, புறநானூறு இரண்டிலும் முருகன் சூரனைக் கொன்ற தொன்ம நிகழ்வு மன்னரின் போர்ச் செயலுக்கு உவமையாகக் கூறப்பட்டுள்ளது அறியத்தக்கது.

புறநானூற்றில் தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியன் பகைவர்களை அழித்து வெற்றி கண்டான் என்ற கருத்தை முருகன் சூரனை வென்ற நிகழ்வுக்கு உவமையாகக் கூறி விளக்கியுள்ளதை,

**'' கார் நறுங் கடம்பின் பாசிலைத் தெரியல்**

**சூர் நவை, முருகன் சுற்றத்து அன்ன''**[20]

இப்பாடல் மூலம் அறிய முடிகிறது.

பதிற்றுப்பத்தின் இரண்டாம் பத்தில் இமயவரம்பன் நெடுஞ்சேரலாதனின் போர்ச் செயலுக்கு முருகன் சூரனை வென்ற நிகழ்வு உவம உத்தியாகக் கையாளப்பட்டுள்ளது.

**'' நளி இரும் பரப்பின் மாக் கடல் முன்னி,**

**அணங்குடை அவுணர் ஏமம் புணர்க்கும்**

**சூருடைய முழு முதல் தடிந்த பேர் இசை**

**கடுஞ்சின விறல் வேள் களிறு ஊர்ந்தாங்கு''**[21]

எனும் இச்செய்யுளடிகள், கடலின் நடுவே மரமாகி நின்ற சூரனை முருகன் வேருடன் வெட்டினான் என்பதை உணர்த்தும் வண்ணம் அமைந்துள்ளன.

முருகன் சூரனை வென்ற விரிவான செய்தி பரிபாடலில் இடம் பெற்றுள்ளது. சூரபன்மனை அழிப்பதற்காக முருகப் பெருமான் பிணிமுகம் என்னும் யானை மீதேறிப் போர் புரிந்தான் என்பதையும் அவன் விட்ட வேல் கடற் பாறைகளைத் தூள் தூளாக்கிக் கடலை வற்றச் செய்து, தீயையும் ஒலியையும் எழுப்பியது என்பதையும் மாமரமாகி நின்ற சூரனை அழித்து அவனது ஒரு பாதியை மயிலாகவும் மற்றொரு பாதியைக் குடக் கொடியாகவும் தன்னிடத்தே வைத்துக் கொண்டான் என்பதையும்

'' பாய் இரும் பனிக்கடல் பார்துகள் படப்புக்கு
சேய் உயர் பிணிமுகம் ஊர்ந்து, அமர் உழக்கி
தீ அழல் துவைப்பத் திரிய விட்டெறிந்து
நோயுடை நுடங்கு சூர் மா முதல் தடிந்து
வென்றியின் மக்களுள் ஒருமையொடு பெயரிய
கொன்று உணல் அஞ்சாக் கொடுவினைக் கொல்தகை
மாய அவுணர் மருங்கு அறத் தபுத்த வேல்''[22]

என இப்பாடலடிகளால் அறியலாம். ''காசிபர் மாயையிடத்துப் பிறந்த புத்திரருள் மூத்தோனும் மகாவரப் பிரசாதனங்கள் பெற்று ஆயிரத்தெட்டு அண்டங்களையும் நூற்றெட்டு யுகம் ஆண்டவனும் இந்திராதி தேவரைச் சிறையிட்டவனும் ஈற்றிலே குமரக் கடவுளாற் சங்கரிக்கப் பட்டழிந்து ஒரு பாதி மயிலாகவும் ஒரு பாதி குக்குடக் கொடியாகவும் பெற்றவனுமாகிய ஓர் அசுரன். இவன் பிறந்ததும் தவத்தால் இணையற்று உயர்ந்தது, செல்வம் அதிகார புஜபலம் முதலானவற்றை அளவின்றிப் பெற்றும் மயங்கித் தீ நெறியிற் சென்று உலகங்களுக் கெல்லாம் பயங்கர காரணனாயிருந்தும், தெய்வ சிந்தை சிறிதும் இன்றி அங்கரித்திருந்தும், ஈற்றிலே எல்லாம் இழந்து கதியற்றதும் பின்னர் பூர்வ ஜென்ம புண்ணிய வசத்தினாற், சுப்பிரமணியக் கடவுளுக்குச் சேவலும் மயிலு மாகிய சரித்திரங்களை எல்லாம் சங்கோபங்கமாக விரித்துத் தீ நெறிப்பயன் காட்டி அதனை விலக்கி முத்தி நெறி விதிப்பது கந்தபுராணம்''[23] எனும் தமிழ்மொழி அகராதியில் கூறப்படும் இக்கதை பரிபாடலில் உரைக்கப்பட்ட முருகன் சூரனை வென்ற செய்தியைக் குறிப்பதாகும்.

திருமுருகாற்றுப்படையில் சூரனின் இருவேறு உருவம் பற்றி,

**'' இருபே ருருவி னொருபே ரியாக்கை**
**யறுவேறு வகையி னஞ்சுவர மண்டி**
**யவுணர் நல்வல மடங்கக் கவிழிணர்**
**மாமுத றடிந்த மறுவில் கொற்றத்**
**தெய்யா நல்லிசைச் செவ்வேற் சேஎய்''**[24]

எனும் செய்யுளடிகளில் குறிப்பிட்டிருக்கக் காணலாம். சூரன் இருவேறு வடிவத்தில் ஒருருவாய் இருந்தான் என்பதைக் குதிரை முகமும் மானிடவுடலும் கொண்டிருந்தான் என்றும் முருகப் பெருமான் ஆறுமுகனாகச் சென்று அவனை வீழ்த்தினான் என்றும் மாமரம் கீழ்நோக்கிய பூங்கொத்துக்களை உடையதாய் இருந்த நிலையையும் இச்செய்யுள் எடுத்தியம்பக் காணலாம்.

இச்செய்தியைக் கலித்தொகையில்,

**'' ஈர் அணி ஏற்ற ஒடியாப் படிவத்துச்**
**சூர் கொன்ற செவ்வேலான்''**[25]

எனும் செய்யுளடிகளின் வழி கூறியுள்ளதை அறியலாம். இப்பாடலுக்கு, 'கெடாத விரதத்தாலே முகங் குதிரை முகமும் உடல் மானிடவுடலுமாகிய இரண்டு அழகும் பொருந்திய சூரபன்மனைக் கொன்ற சிவந்த வேலை யுடைய முருகன்' என்று உரை வரைந்துள்ளார் நச்சினார்க்கினியர்.

அத்தகு வன்மை பெற்றவனாகக் கருதப்படும் சூரனை, மேகம் கார்காலத்தில் மழை பொழிய கடலுள் நீரைப் பெறுவதற்கு எழுந்தாற்போல வலிமை கொண்டெழுந்து வேரோடு அழித்தான் முருகன் என்று பரிபாடலிலும் அக்கருத்தை உரைக்கக் காணலாம்.

'' போர் எதிர்ந்து ஏற்றார் மதுகை மதம் தபக்
கார் எதிர்ந்து ஏற்ற கமஞ் சூல் எழிலிபோல்
நீர் நிரந்து ஏற்ற நிலம் தாங்கு அழுவத்து
சூர் நிரந்து சுற்றிய மா தபுத்த வேலோய்!''[26]

எனும் செய்யுள் வழி அறிய இயலும். இப்பாடலில் அவுணர்கள் தம்முள் கூடிப் போர் புரிய முருகனுடன் எதிர்ப்பட்டனர் என்றும் அவர்களின் வலிமை காரணமாக உண்டான செருக்கை அழியுமாறு செய்தான் முருகன் என்றும் விளக்கியிருக்கக் காணலாம்.

**முருகன் மால் மருகன்**

முருகப்பெருமான் திருமாலுக்கு மருகனாகக் குறிக்கப் பெறுவதை யாவரும் அறிவர். அக்கருத்தை,

'' சோபன நிலையது - துணி பரங்குன்றத்து
மா அல் மருகன் மாட மருங்கு''[27]

எனும் பரிபாடல் செய்யுளால் அறிய இயலும். திருப்பரங்குன்றத்தில் உள்ள மாடங்கள் மற்றும் அவற்றில் தீட்டப்பெற்ற ஓவியங்களைக் கூறி 'முருகன் மால் மருகன்' என்று சிறப்பித்துக் கூறப்பட்டுள்ளது. 'அமுதவல்லியும் சுந்தரியும் திருமாலின் இரு பெண்கள். இவ்விருவரும் முருகப்பெருமானின் ஆணைப்படி முறையே இந்திரன் மகள் தேவசேனையாகவும் சிவ முனிவரிடத்து மான் வயிற்றில் வள்ளியாகவும் பிறந்தனர். இவர்களை முருகக் கடவுள் மணந்தமையால் மால் மருகன் ஆனான்.

**கற்பு மணமும் களவு மணமும்**

முருகன் வள்ளியைத் திருமணம் செய்து கொண்ட செயல் தேவசேனையின் மணத்திற்கு மாறுபட்ட செயல் என்று கூறி, இருவர் திருமணம் பற்றிய செய்தி பரிபாடலில் குறிப்பிடப்பட்டுள்ளது.

தேவசேனை திருமாலின் மகளாய்ப் பிறந்து சரவணப் பொய்கையில் அமர்ந்து குமரக் கடவுளை மணக்கத் தவம் மேற்கொண்டாள் என்றும் அவன் எதிரில் முருகக் கடவுள் தோன்றி நீ! இந்திரனிடம் வளர்ந்து வர உரிய காலத்தில் மணம் புரிந்து கொள்வேன் எனக் கூறியதாகவும் பரிபாடல் குறிப்பிடுகிறது. மேலும் அன்று முதல் குழந்தையாக உருக் கொண்ட அவளை, ஐராவதம் என்னும் வெள்ளை யானை வளர்த்து இந்திரனிடம் கொடுத்ததாகவும் முருகன் அச்செய்தியைப் பின்னாளில் கூறுவதாகவும் படைத்துள்ளதை அறிய இயலும். சூரபன்மனை வென்று அத்தெய்வ சேனையைக் கற்புமணம் செய்து கொண்டமையால் இந்திரனுக்கு மருகனானான் என்பதையும் அறிந்து கொள்ளலாம்.

வள்ளிமலைப் பகுதியில், வள்ளிக் கிழங்கு தோண்டி எடுக்கும் குழியில் கண்டு எடுக்கப்பட்டதால் வள்ளி எனப் பெயர் பெற்றாள் என்னும் செய்தியையும் பரிபாடல் வழி அறியலாம். மண்ணுலகம் வந்து அங்குள்ள மக்களுள் குன்றத்தியாகிய வள்ளியைக் களவு மணம் செய்து கொண்டான் முருகன் என்பதும் வள்ளியை மணம் செய்து கொண்டு மண்ணுலக மக்களுக்கு மருமகனானான் என்பதும் இவற்றால் தெரிய வருகிறது. வள்ளியை மணம் செய்த செயலைக் கூறி முருகன் தேவசேனையை மணம் புரிந்ததற்கு எதிரானது என்று குறிப்பிட்டு இரு திருமணத்தையும் நினைவு கூறப்பட்டுள்ளது. முருகன் தேவசேனையைக் கற்பு மணமும் வள்ளியைக் களவு மணமும் புரிந்து கொண்ட அச்செயலை,

**'' நில வரை அழுவத்தான் வான் உறை புகல் தந்து,**
**புல வரை அறியாத புகழ் பூத்த கடம்பு அமர்ந்து**
**'அரு முனி மரபின் ஆன்றவர் நுகர்ச்சி மன்**
**இரு நிலத்தோரும் இயைக!' என ஈத்த நின்**

**தண் பரங்குன்றத்து, இயல் அணி, நின் மருங்கு**

**சாறு கொள் துறக்கத்தவளொடு**

**மாறு கொள்வது போலும், மயிற் கொடி வதுவை''**[28]

என்னும் செய்யுளடிகள் வாயிலாகக் குறிப்பிடப்பட்டுள்ளது.

**வள்ளி தோழியர் போர் புரிதல்**

தேவசேனையின் தோழியர் போர் மேற்கொண்டதைக் கண்ட வள்ளியின் தோழியர் ஆண் யானையின் வலிமை கொண்டு மோதத் தொடங்கினர். குதிரைகள் போல விரைந்து வந்தனர். அம்புகள் கொண்ட வில்லினை நன்கு வளைத்தனர். வாள் வீரர்கள் தன்மை தம்மிடம் தோன்றியது போலச் சீறி நின்றனர். அம்மகளிர் தோள்களில் அணியப்பட்ட தோள் வளையங்களை சக்கராயுதமாகக் கொண்டு சுழற்றிச் சண்டையிட்டனர் என்பதை,

**'' கயம்படு கமழ்சென்னிக் களிற்றியல்கைம் மாறுவார்**

**வயம்படு பரிப்புரவி மார்க்கம் வருவார்**

**தேரணி அணிகயிறு தெரிபு வருவார்**

**வரிசிலை வளைய மார்புற வாங்குவார்**

**வாளி வாளிகள் நிலைபெற மறலுவார்**

**தோள்வளை ஆழி சுழற்றுவார்**

**மென் சீர் மயில் இய லவர்''**[29]

என்னும் பாடல் அடிகள் விளக்குகின்றன.

**தேவசேனையின் தோழியர் உருமாறி முருகனைச் சூழ்தல்**

வள்ளி தேவசேனை மணத்தால் இருவரின் தோழியர் போர் புரிந்தனர் என்றும் வள்ளியின் தோழியர் வலிமையுடன் போர் புரிந்ததைக் கண்ட

தேவசேனையின் தோழியர் அவர்களுக்கு அஞ்சினர் என்றும் வீரமும் வெற்றியும் தருபவனான முருகப்பெருமானைத் தேவசேனையின் தோழியர் பல்வேறு வடிவமாக உருமாறிச் சூழ்ந்து கொண்டனர் என்றும் குறிப்பிடப் பட்டுள்ளது. உருமாறிய அப்பெண்டிருள் சிலர் சுனை நீரில் மலர்கள் பூத்து மணம் கமழ்கின்ற நீரில் குளித்து ஆடிப்பாடி மகிழ்ந்தனர் என்பதையும் சிலர் சுனையில் தேனை உண்ணும் வண்டுகளாக மாறி யாழ் நரம்பின் இசை இன்பத்திற்கு மாறாக இசை எழுப்பினர் என்பதையும் சிலர் மயில்களாக மாறி தோகை விரித்து ஆடினர் என்பதையும்

**‘‘ வரை அகலத்தவனை - வானவன் மகள்**
**மாண் எழில் மலர் உண்கண்**
**மட மொழியவர் - உடன் சுற்றி,**
**கடி சுனையுள் குளித்து ஆடுநரும்,**
**அறை அணிந்த அருஞ் சுனையான்**
**நற உண் வண்டாய் நரம்பு உளர்நரும்**
**சிகை மயிலாய்த் தோகை விரித்து ஆடுநரும்;**
**கோகுலமாய்க் கூவுநரும்,**
**ஆகுலம் ஆகுநரும்’’**[30]

என்னும் பரிபாடல் அடிகள் எடுத்தியம்புகின்றன.

**கிரௌஞ்ச மலையைப் பிளத்தல்**

சூரனை வென்ற கதையோடு முருகன் குன்றைப் பிளந்த கதையும் பரிபாடலிலும் திருமுருகாற்றுப்படையிலும் குறிப்பிடப்பட்டுள்ளன.

திருப்பரங்குன்றத்தின் கீழ்ப்பகுதியில் உள்ள இடைநிலம் யானை, குதிரை, தேரையும் கொண்ட பாண்டியனின் பாசறை போன்று இருந்ததாகக்

கூறப்பட்டுள்ளது. திருப்பரங்குன்றத்தின் பெருமையைக் கூற வந்த புலவர் நப்பண்ணனார், முருகன் கிரௌஞ்ச மலையைப் பிளந்த சிறப்பை உடையவன் என்று பின்வரும் பரிபாடல் அடிகளில் குறிப்பிட்டுள்ளதைக் காணலாம்.

**'' குருகு எறி வேலோய்! நின் குன்றக் கீழ் நின்ற**
**இடைநிலம்; யாம் ஏத்தும் ஆறு''[31]**

கிரவுஞ்சன் என்னும் அரக்கன் மாயையில் வல்லவன். இவன் மலையுருவத்தை எடுப்பான். தன்னிடத்தில் ஒரு வழியைக் காட்டுவான். அவ்வழியில் உள்ளே நுழைந்தவர்களை மயக்கிக் கொன்று விடுவான். இவன் ஒருகால் அகத்தியர் வருதலைக் கண்டான். அவரையும் கொல்ல எண்ணினான். மலைவடிவாக நின்று கொண்டு, தன்னிடத்தே ஒரு வழியைக் காட்டினான். அவர் உள்ளே வந்ததும் வழி தடுமாறும் வண்ணம் செய்தான். இஃது அசுரனுடைய மாயை என்று அகத்தியர் அறிந்தார். தம்முடைய கைத்தண்டினால் அடித்தார். கொடியவனே நீ உனக்குரிய உருவத்தை இழந்து இந்த மலையாகவே இருக்கக் கடவாய். முருகக்கடவுள் இங்கு வரும்பொழுது அவருடைய கைவேலால் இறந்தொழிவாய் என்று சாபமிட்டு அங்கிருந்து நீங்கிச் சென்றார் என்ற செய்தியைப் புலவர் உணருமாறு உரைத்துள்ளார். முருகன் தன் கைவேலால் மலையைப் பிளந்து அழித்தான் என்று பாடியுள்ளார்.

**'' எவ்வத்து ஒவ்வா மா முதல் தடிந்து,**
**தெவ்வுக் குன்றத்துத் திருந்து வேல் அழுத்தி**
**அவ்வரை உடைத்தோய்! நீ இவ்வரை மருங்கில்**
**கடம்பு அமர் அணி நிலை பகர்ந்தேம்''[32]**

கிரௌஞ்சம் என்ற குன்றின் நடு இடம் பிளக்குமாறு எறிந்த செந்நிறம் பொருந்திய ஒளி வீசும் நீண்ட வேல் கொண்டவன் என்பதை,

**“ ..................குன்றின்**

**நெஞ்சு பக எறிந்த அம்சுடர் நெடுவேல்”**[33]

எனும் அடிகள் மூலம் அறிய முடிகிறது. மேலும் “குன்றம் கொன்ற குன்றாக் கொற்றத்து’ (திருமுருகு 266), ‘குன்றம் எரிந்தாய்’ (திருமுரு. வெண்பா 1), ‘குன்றம் எறிந்ததும்...’ (திருமுரு. வெண்பா 2), ‘குன்றும் துளைத்தவேல்’ (திருமுரு. வெண்பா 3), ‘பனி வேய் நெடுங்குன்றம் பட்டுருவத் தொட்ட’ (திருமுரு. வெண்பா 4) எனும் தொடர்கள் குன்றை பிளந்ததை குறிப்பிட்டிருக்கக் காணலாம்.

நப்பண்ணனார் மட்டுமின்றி, கடுவன் இளவெயினனாரும் நல்லச்சுதனாரும் முருகன் கிரௌஞ்ச மலையைப் பிளந்த செய்தியைப் பரிபாடலில் குறிப்பிட்டிருக்கக் காணலாம்.

**“ நாவல் அம் தண் பொழில் வடபொழில் ஆயிடை**

**குருகொடு பெயர் பெற்ற மால் வரை உடைத்து**

**மலை ஆற்றுப் படுத்த மூ - இரு கயந்தலை!”**[34]

**“ புள்ளொடு பெயரிய பொருப்புப் புடை திறந்த வேல்”**[35]

என்று நல்லச்சுதனாரும் கூறியிருப்பதை அறியலாம். இப்பாடல் அடிகளுக்கு முருகப் பெருமான் நாவலந்தீவின் வடபகுதியில் இருந்த கிரௌஞ்சம் என்று கூறப்படும் பறவையினது பெயரைப் பெற்ற பெரிய மலையினைக் குடைந்து அம்மலையின் உள்ளே வழியுண்டாக்கிய ஆறு மென்மையான தலைகளையுடையவன் எனவும் பறவையின் பெயரை உடைய மலையைப்

பிளந்த சிறப்புடையவன் முருகன் எனவும் உரையாசிரியர்கள் உரை வகுத்துள்ளனர்.

குருகு - அன்றில் என்பதற்கு வடமொழியில் கிரௌஞ்சம் என்று பெயராகும். அப்பறவையின் பெயர் பெற்ற மலை என்று குறிப்பிடக் காணலாம்.

**சேயோன்**

**''சேயோன் மேய மைவரை உலகமும்''**[36]

என்னும் தொடரில் வரும் சேயோன் முருகனைக் குறிப்பதாகும். சங்க கால அரசு உருவாக்கச் சூழலில் முருகன் வெற்றித் தெய்வமாகக் கருதப்பட்டதை அறியலாம். இதைச் 'செருமிகு சேஎய்' எனும் அகநானூற்றுச் செய்யுளடி களாலும் 'வெல்போர்ச் சேஎய்' எனும் மலைபடுகடாம் செய்யுள் தொடராலும் அறிய இயலும். சேயோனை வேந்தர்களின் வீரத்தை விளக்க இணைத்துக் கூறியதையும் காணலாம்.

**'' செங்களம் படக் கொன்று அவுணர்த் தேய்த்த**
**செங்கோ லம்பிற் செங்கோட்டி யானை**
**கழல் தொடிச் சேஎய் குன்றம்**
**குருதிப் பூவின் குலைக்காந் தட்டே''**[37]

**'' திருமணி விளக்கின் அலைவாய்ச்**
**செருமிகு சேஎயொடு உற்ற சூளே''**[38]

**'' கா அய் கடவுட் சேஎய்! செவ்வேள்!''**[39]

**'' ஒருவனை; வாழி, ஓங்குவிறல் சேஎய்!''**[40]

'' நீரின் துவண்ட சேஎய் குன்றம்''[41]

'' பசும்பூண்-சே எய்! நின் குன்றம் நன்கு உடைத்து''[42]

'' இன்னிசை முரசிற் சுடர்ப்பூண் சேஎய்
ஒன்னார்க்கு ஏந்திய இலங்கிலை எஃகின்
மின் மயங் கருவிய கன்மிசைப் பொழிந்தென''[43]

'' அலர்ந்தோர்க்கு அளிக்கும் பொலம்பூண் சேஎய்''[44]

'' செருமிகு சேஎய்! - நிற் பாடுநர் கையே''[45]

'' வேழ நோக்கின் விறல்வெஞ் சேஎய்!''[46]

'' மணிமயில் உயரிய மாறா வென்றி
பிணிமுக ஊர்தி ஒண்செய் யோனும்''[47]

'' செருவெஞ் சேஎய் பெருவிறல் நாடே''[48]

'' ................உயர்மலைத்
திருத் தகு சேஎய்! நிற் பெற்றிசி னோர்க்கே''[49]

'' செருவெஞ் சேஎய்! நின் மகிழிருக் கையே''[50]

'' வெண்டிரைப் பரப்பின் கடுஞ்சூர்க் கொன்ற
பைம்பூண் சேஎய்....''[51]

'' வெல்போர்ச் சேஎய்ப் பெருவிறல் உள்ளி''[52]

இச்செய்யுட்கள் யாவற்றிலும் முருகன் என்ற சொல்லுக்கு இணையாகச் சேயோன் என்ற தொல்காப்பியர் குறிப்பிட்ட சொல் கையாளப்பட்டுள்ளதை அறியலாம். 'செருமிகு சேயொடு' என்னும் அகநானூற்றுப் பாடலில் உழவர்கள் எழுப்பும் ஓசைக்கு அஞ்சி வயல்வெளியில் உள்ள மயில் சேயோன் வீற்றிருக்கும் திருச்சீரலைவாயிற்கு வந்து சேரும் என்றும்

சேயோன் போர் புரிவதில் வல்லவன் என்றும் புலவர் குறிப்பிட்டுள்ளதைக் காண இயலும்.

புறநானூறு, பெரும்பாணாற்றுப்படை, மலைபடுகடாம் ஆகிய நூல்களில் மன்னர்களின் வீரத்திற்கு ஒப்ப சேயோனின் வீரம் கூறப்பட்டுள்ளது. செல்வக்கடுங்கோ, சேரமான் யானைக்கட்சேய், மாந்தரஞ்சேரல் இரும்பொறை, நன்மாறன், வேள்பாரி, தேர்வண் மலையான், மூவன், தொண்டைமான் இளந்திரையன், நன்னன் சேய் நன்னன் முதலான மன்னர் பலரின் வீரத்திற்குச் சேயோனின் வீரம் உவம உத்தியாகக் கையாளப்பட்டுள்ளதைக் காணலாம். மன்னர்கள் செருமிகு சேஎய், விறல்வெஞ் சேய், செருவெஞ் சேஎய், திருத்தகு சேய் என்றெல்லாம் அழைக்கப்பட்டனர் என்பதையும் இவற்றால் அறியலாம்.

**ஆறெழுத்து மந்திரம் ஓதுமுறை**

திருமுருகாற்றுப்படையில் ஆறெழுத்து மந்திரம் ஓதி முருகனை வழிபடும் முறையை விளக்கமாகக் கூறியிருக்கக் காணலாம்.

திருவேரகத்தில் வீற்றிருக்கும் முருகப்பெருமானை வழிபடும் முறையாக ஆறெழுத்து மந்திரம் ஓதும் முறை விளக்கப்பட்டுள்ளது. அஃதாவது ஓதல், ஓதுவித்தல், வேட்டல், வேட்பித்தல், ஈதல், ஏற்றல் முதலிய ஆறு தொழில்களையும் செவ்வனே செய்தவர்கள்; எப்பிறப் பாயினும் நாற்பத்தெட்டு ஆண்டு வேதம் கூறும் வழியில் பிரமச்சரியத்தை மேற்கொண்டு அதன் பின்னர் இல்லற வாழ்க்கைக் கோட்பாட்டினை உடையவர்கள்; சதுரம், முக்கோணம், வில்வடிவம் ஆகிய மூன்று வடிவமாகக் கூறப்படுகின்ற, ஹோமகுண்டத்தில் ஆகவணீயம், தட்சிணாக்கினி, காருக

பத்தியம் என்ற மூன்று வகை நெருப்பால் உண்டான செல்வத்தையும் பூணூல் அணிந்த பின் ஒரு பிறப்பு, அதற்கு முன் ஒரு பிறப்பு என இரு பிறப்பினையும் உடையோர் எவரும் முக்காலமும் ஈரமான ஆடையை உடுத்திக் கொண்டு, கையைத் தலைக்கு மேலே உயர்த்தி ஆறெழுத்து மந்திரமான 'சரவணபவ' என்னும் வேத மந்திரத்தை மனமாரக் கூறி வாசமுள்ள மலர்களால் வழிபட்டால் திருவேரத்தில் எழுந்தருளியுள்ள முருகப் பெருமானின் அருளைப் பெறுவர் என்று குறிப்பிடப்பட்டுள்ளது. இதனை,

''ஒன்பது கொண்ட மூன்று புரி நுண் ஞாண்,
புலராக் காழகம் புலர உடீஇ
உச்சிக் கூப்பிய கையினர் தற்புகழ்ந்து
ஆறுஎழுத்து அடக்கிய அருமறைக் கேள்வி
நா இயல் மருங்கில் நவிலப் பாடி
விரை உறு நறுமலர் ஏற்றிப் பெரிது உவந்து
ஏரகத்து உறைதலும் உரியன் அதா அன்று''[53]

எனும் செய்யுள்வழி அறியலாம். ஆறெழுத்து மந்திரம் ஓதும் முறையை இச்செய்யுளில் விளக்கியுள்ளதைக் காணலாம்.

திருமுருகாற்றுப்படையில் முருகன் நான்முகனைச் சிறைப்படுத்திய நிகழ்வு குறிப்பிடப்பட்டுள்ளது.

''நாற்பெருந் தெய்வத்து நல்நகர் நிலைஇய
உலகம் காக்கும் ஒன்றுபுரி கொள்கைப்
பலர்புகழ் மூவரும் தலைவர் ஆக
ஏமுறு ஞாலம் தன்னில் தோன்றி

**தாமரை பயந்த தாஇல் ஊழி**

**நான்முக ஒருவற் சுட்டி காண்வர''[54]**

இப்பாடலில் 'நாற்பெருந் தெய்வத்து மூவர்' என்றது அயன், அரி, அரன், இந்திரன் ஆகிய நான்கு பெருந்தெய்வங்களுள் அயன் ஒழிந்த மூவர் ஆவர். இம்மூவரும் அயனை முன்னிட்டு முருகப் பெருமானிடம் வருகிறார்கள். காரணம்; ஒரு காலத்தில் முருகப் பெருமான் அகந்தை கொண்ட அயனை அவன் அகந்தையைப் போக்கும் பொருட்டுப் பிரணவ மந்திரத்தின் பொருள் யாதென வினவ, அவன் அதற்கு விடை தந்திடாமையின் தலையிற் குட்டிச் சிறைப்படுத்தினன். அயன் சிறைப்பட்டமையால் படைப்புத் தொழில் நடைபெறவில்லை. தேவர் பிறர்க்குரிய தொழில்களும் நடைபெறவில்லை. இதனால் தலையை இழந்த பிரம்மனைத் தேவர்கள் சிறைவீடு செய்து மீண்டும் படைப்புத் தொழில் செய்விப்பதற்காகவும், தத்தம் தொழிலைத் தாமும் பெற்றுத் தலைவராகவும் கருதிச் சிவபெருமானிடம் வந்தனர் என்று புராணம் கூறும் எனத் திருமுருகாற்றுப்படையில் குறிப்பிடப் பட்டுள்ளது. இப்பாடற்பகுதியில் முருகன் பிரமாவைச் சிறைப்படுத்தி யதையும் திருமால், உருத்திரன், இந்திரன் முதலான தேவர்கள் பிரமாவை மீட்க முருகனிடம் வந்த செய்தியும் குறிப்பிடப்பட்டுள்ளன.

**முருகனின் பேரருட் சிறப்பு**

முருகனை வழிபடும் அடியவர்கள் எமனால் உண்டாகும் இன்னல்களிலிருந்து விடுபடுவர் எனப் பரிபாடல் கூறும்.

முருகன் எமனது ஆணையை இகழ்பவன் என்பதால் எமனையே ஏவல் கொள்ளும் இறைவன் முருகன் என அறியலாம். முருகனை

வணங்கும் அடியார்க்கு எமனால் வரும் துன்பம் முருகன் திருவருளால் போக்கப்படும் என்ற கருத்தும் புலப்படுகிறது.

**'' தெரி இழாய் செல்க!' என்றாய்; எல்லா! யாம் பெற்றேம்,**
**ஒருவர்க்கும் பொய்யா நின்வாய் இல்சூள் வெளவல்;**
**பருவத்து பல் மாண்நீ சேறலின் காண்டை**
**எருமை இருந் தோட்டி எள்ளீயும் காளை**
**செருவம் செயற்கு என்னைமுன்னை, தன் சென்னி''[55]**

என இப்பாடலில் முருகனது வீரச் சிறப்பை விளக்க உத்தியாகப் பயன்படுத்திக் கூறப்பட்டுள்ளது.

**ஆறு முகங்களின் இயல்புகள்**

திருமுருகாற்றுப்படையில் முருகப் பெருமானின் ஆறுமுகங்கள் பற்றிக் குறிப்பிடப்பட்டுள்ளது.

**'' மனன் நேர்பு எழுதரு வாள் நிற முகனே;**
**மா இருள் ஞாலம் மறுஇன்றி விளங்க**
**பல்கதிர் விரித்தன்று ஒருமுகம்; ஒருமுகம்**
**ஆர்வலர் ஏத்த, அமா்ந்து இனிது ஒழுகி,**
**காதலின் உவந்துவரம் கொடுத்தன்றே; ஒருமுகம்**
**மந்திர விதியின் மரபுளி வழா அ**
**அந்தணா் வேள்வி ஓர்க்கும்மே; ஒருமுகம்**
**எஞ்சிய பொருள்களை ஏமுற நாடி,**
**திங்கள் போலத் திசை விளக்கும்மே; ஒருமுகம்**
**செறுநர்த் தேய்த்துச் செல்சமம் முருக்கி**
**கறுவு கொள் நெஞ்சமொடு களம் வேட்டன்றே; ஒருமுகம்,**

குறவர் மடமகள், கொடிபோல் நுசுப்பின்

மடவரல், வள்ளியொடு நகை அமர்ந்தன்றே,

ஆங்கு அம்மூ இரு முகனும், முறை நவின்று ஒழுகலின்''[56]

என இப்பாடலில் ஒளியும் நிறமும் உடைய முருகனது ஆறு முகங்களில் ஒருமுகம் உலகம் இருளில் இருந்து அகன்று விளங்கும் பொருட்டு பல சுடர்களைத் தோன்றச் செய்தது என்றும் இரண்டாவது முகம் அன்பால் வழிபடும் அடியவர்க்கு இனிமையாக ஒழுகி அவரவர் நிலைக்கு ஏற்ப வெளிப்பட்டு, அவரவர் வேண்டும் வரங்களை அளிக்கிறது என்றும் மூன்றாவது முகம் மந்திரத்தினால் மெய்நூல் உரைத்த அந்தணருடைய வேள்விகட்கு இடையூறு நேராமல் காக்கின்றது என்றும் நான்காவது முகம் வேத நூல்களால் காட்ட முடியாத எஞ்சிய பொருள்களைத் தம் அன்பர்கள் பாதுகாப்பெய்தும் வண்ணம் ஆய்ந்துணர்த்தியது என்றும் ஐந்தாவது முகம் அசுரரை அழித்து மறக்கள வேள்வியை விரும்பி நிற்கும் என்றும் ஆறாவது முகம் வள்ளியம்மையுடன் சிரித்து மகிழ்தலை விரும்பும் என்றும் ஆறுமுகங்களின் இயல்பு சிறப்பித்துக் கூறப்பட்டுள்ளது.

**நக்கீரரும் ஆற்றுப்படையும்**

மலைக்குகையில் நக்கீரரை விடுதலை செய்தல் பற்றித் திருமுரு காற்றுப்படையில் குறிப்பிடப்பட்டுள்ளது.

'' ............கற்பொதும்பிற் காத்ததுவும்''[57]

என்னும் இத்தொடரில் முருகன் நக்கீரர் முதலானவர்களைப் பூதத்திடமிருந்து காத்தல் பற்றிக் குறிப்பிடப்பட்டுள்ளது. கிரௌஞ்சம் என்னும் மலையை எறிந்து அழித்தமை, அசுரர்களின் வலிமைகளையெல்லாம் குறைத்து அழியப் போர் செய்தமை, தேவர்களுடைய இன்னல்களைப் போக்கியமை,

இன்றைக்கு என்னைக் கைவிடாமல் நின்றமை, நக்கீரரைக் காத்தமை ஆகிய செய்திகளைச் செய்தது வீரனாகிய முருகனது திருக்கரத்தில் நிற்கும் வேல் என்று போற்றியுள்ளது.

‘‘நக்கீரர் - இவர் மதுரைக் கணக்காயனார் மகனார். கடவுள் பூசையிலே வைத்த மனம் சிறிது திரும்பினவர். தொளாயிரத்துத் தொண்ணூற் றொன்பதின்மரை ஓர் மலைக்குகையிற் சேர்த்து வைத்துவிட்டு, அப்படிப்பட்ட மற்றொருவரைத் தேடித் திரிந்த பூதம் ஒன்று, நக்கீரர் ஒரு தடாகத்தருகே பூசை செய்வதைக் கண்டு, அவர் முன்னே விழுந்த ஆலிலையைப் பாதி மீனாகவும் மற்ற பாதியைப் பறவையாகவும் செய்து அவர் அவ் அற்புதத்தைக் கண்டு மனங்கலங்குதலும் அவரையும் கொண்டு போய்த் தன் குகையிற் சேர்த்து விட்டு, நீராடி வந்து ஆயிரம் பேரையும் ஒருமிக்க உண்போம் என்று தடாகத்துக்குப் போயிற்று. அந்தச் சமயத்தில் நக்கீரர் திருமுருகாற்றுப்படையைப் பாடிச் சுப்பிரமணியக் கடவுள் அருளால் தம்மையும் மற்றோரையும் காத்தனர்’’[58] என நக்கீரர் விடுதலை ஆன கதையைத் தமிழ்மொழி அகராதி குறிப்பிடுகிறது.

‘‘ ............. அணிமுருகாற் றுப்படை’’[59]

என்பதால் திருமுருகாற்றுப்படையைத் திருப்பரங்குன்றத்தைச் சேர்ந்த குகையில் இருந்து நக்கீரர் பாடினார் என்றும் கூறுவர். அன்பர், திருப்பரங்குன்றத்தில் எழுந்தருளியிருக்கும் பன்னிருகைப் பெருமானுடைய பாதத்தை அணுகி, கைகுவித்து வணங்குவர் என்று குறிப்பிடப்பட்டுள்ளது.

‘‘நக்கீரர் தாமுரைத்த நன்முருகாற்றுப் படையை’’[60]

ஒருவர் பாராயணம் செய்து வந்தால் அவர் முன் முருகன் தோன்றி, மனக் கவலையைத் தீர்த்தருளுவான் என்று விளக்கப்பட்டுள்ளது.

**முருகனை வழிபடுதல்**

முருகப் பெருமானுடைய யானையை வாழ்த்தி, வெறியாட்டுக் களம் ஆரவாரிக்கும்படி, ஊது கொம்புகள் பலவற்றையும் சேர ஊதி, மணியை ஒலித்து, குறை வேண்டினார். தாம் வேண்டியவற்றைப் பெற்றாற் போன்று நின்று வழிபாடு செய்தனர் என்பதை,

**''ஆடுகளம் சிலம்பப் பாடி, பலவுடன்**
**கோடுவாய் வைத்து, கொடுமணி இயக்கி**
**ஓடாப் பூட்கைப் பிணி முகம் வாழ்த்தி,**
**வேண்டுநர் வேண்டியாங்கு எய்தினர் வழிபட**
**ஆண்டு ஆண்டு உறைதலும் அறிந்த வாறே''**[61]

எனும் அடிகள் மூலம் இவற்றை அறியலாம்.

**முருகனின் அடிமுடிச் சிறப்பு**

திருப்பரங்குன்றத்தில் எழுந்தருளியுள்ள முருகப்பெருமான் திருவடி நிழலில், அடியவர்கள் தங்கியிருக்கும் பேறு நாள்தொறும் பொலிவுடன் வளர வேண்டும், நீடு நிலைபெற வேண்டும் என்ற உயர்ந்த நோக்கம் நிறைவேற உன் திருவடிகளில் எங்கள் தலை பதியுமாறு வீழ்ந்து வணங்கி வாழ்த்தி வேண்டுகிறோம் எனப் பரிபாடல் கூறுகிறது.

''நயத்தலின் சிறந்த எம் அடியுறை
பயத்தலின் சிறக்க, நாள்தொறும் பொலிந்தே''[62]

மேலும் முருகன் போரில் வெல்லும் வேற்படையை உடையவன். முறுக்குண்ட நரம்புடைய யாழும் இயற்பாடல்களும் பொருந்தி இசைக்கவும் வேத முழக்கம் ஒலிக்க, மலர்கள், விளக்குகள், அகில், சந்தனப் புகை கமழவும் முருகனை வழிபடுவர். இங்ஙனம் உன் திருவடியில் தங்கிப் பிரியாது இருப்போம்.

**'' புரிஉறு நரம்பும் இயலும் புணர்ந்து,**
**சுருதியும் பூவும் சுடரும் கூடி,**
**எரி உருகு அகிலோடு ஆரமும் கமழும்,**
**செருவேல் தானைச் செல்வ! நின் அடி உறை**
**உரிதினின் உறை பதிச் சேர்ந்தாங்கு,**
**பிரியாது இருக்க - எம் சுற்றமொடு உடனே''**[63]

என்று கூறுவதன் வழி இவற்றை அறியலாம்.

**அடி சேர்பவர் - சேராதவர்**

பழவினை காரணமாக இப்பிறவியில் கடவுளிடத்தில் பற்று வைத்து, அவனது திருவருளைப் பெறும் உயர்ந்த நோக்குடன் உலகப் பற்றினை நீக்கி அறநெறி வழியில் வாழும் சான்றோர், தவத்தால் இறைவனது திருவருளில் திளைத்தவரும் பிறர் போற்றி வணங்கும் தெய்வத் தன்மை பொருந்திய அருளாளரும் ஆகியோரே இறைவனது அருளை எளிதில் அடைபவர். கடுஞ்சினமும் தீய நெஞ்சமும் உடையவர், அறவழியில் செல்லாதவர், போலித்தவ வேடதாரிகள், மறுமையை மறுப்பவர்கள் ஆகியோர் இறைவன் திருவருள் கிட்டாதவர் என்று ஒரு பாடல் கூறும்.

**'' நின் குணம் எதிர் கொண்டோர் அறம் கொண்டோர் அல்லதை**

**மன் குணம் உடையோர் மாதவர் வணங்கியோர் அல்லதை**

**செறு தீ நெஞ்சத்துச் சினம் நீடினோரும்,**

**சேரா அறத்துச் சீர் இலோரும்,**

**அழிதவப் படிவத்து அயரியோரும்,**

**மறுபிறப்பு இல் எனும் மடவோரும், சேரார்**

**நின் நிழல் அன்னோர் அல்லது இன்னோர்**

**சேர்வார்''**[64]

என்கிறது இப்பாடல்.

**ஆடை**

முருகனின் ஆறுமுகங்களும் தத்தம் கடமைகளை நடத்துகின்றன. அத்திருமுகங்களுக்கு ஏற்ப வண்ணம் பொலியும் தோள்கள் அமைந்துள்ளன. பொன்னாலும் முத்தாலும் ஆன மாலைகள் தங்கிய பெருமைமிக்க மார்பில் உள்ள உத்தம இலக்கணமாகிய மூன்று வரிகளையும் தம்மிடத்தே வந்து பொருந்தும்படி வளைத்துக் கொண்ட வலிமை மிக்கவன் முருகன்.

**'' நலம் பெறு கலிங்கத்துக் குறங்கின் மிசை அசை இயது ஒருகை''**[65]

என்று பாடலடி கூறுகின்றது.

கலித்தொகையிலும்,

**'' வேல்வலான் உடைத் தாழ்ந்த விளங்கு வெண்துகில் ஏய்ப்ப**

**வாலிது கிளர்ந்த வெண் காற் சேயும்''**[66]

ஆடை பற்றிய செய்தி உள்ளது. வேல் வல்லானிடம் தாழ்ந்து கிடக்கும் வெள்ளிய ஆடை இருந்ததை அறியலாம்.

தாமரை மலர் போன்று யாவரும் விருப்பம் தரும் சிவந்த அடிகளையும் பவழம் போல் செம்மேனியின் கண் திகழும் ஒளியும் குன்றிமணி போன்று செந் நிற ஆடையினையும் கொண்டவன் முருகன்.

'' தாமரை புரையும் காமர் சேவடி

பவழத்து அன்ன மேனி, திகழ் ஒளி

குன்றி ஏய்க்கும் உடுக்கை''[67]

என்பதால் அறிய முடிகிறது.

முருகன் திருவுருவம் செந்தீயைப் போன்றது; திருமுகம் கதிர் விரிக்கும் இளஞாயிற்று மண்டலத்தை ஒத்தது. செவ்வேள் என்பதற்கு ஏற்ப முருகனுடைய உடை, மாலை, வேற்படை, மேனி முகம் ஆகிய அனைத்தும் செம்மையானவையாக உள்ளமையைக் குறிப்பாக ஒரு தொடர் குறிப்பிடுகின்றது.

''உடையும் ஒலியலும் செய்யை''[68]

**ஊர்தி**

அழகிய மயிலை ஊர்தியாகக் கொண்டவன் முருகன் என்பதைப் பல தொடர்கள் கூறுகின்றன.

''பிணிமுகம் ஊர்தி ஒண் செய்யோனும்''[69]

'' விறல் வெய்யோன் ஊர் மயில் வேல் நிழல் நோக்கி''[70]

'' மணி நிற மஞ்ஞை; ஓங்கிய புட்கொடி

பிணி முகம் ஊர்ந்த வெல் போர், இறைவ!''[71]

'' .....விரை மயில் மேல் ஞாயிறு''[72]

" தகரன் மஞ்ஞையன் புகரில் சேவலங்

கொடியன்....."[73]

பிணி முகம் என்பது முருகன் ஏறும் யானையின் பெயர் என்பர். பிணிமுகம் என்பதனைப் 'பட்டம்' எனக் கொண்டு அதனை உடைய யானை என்பர் நச்சினார்க்கினியர். பிணி முகம் என்னும் யானையை ஊர்தியாகக் கொண்டவன் முருகன் என்றும் பின்வரும் பாடல்கள் குறிப்பிடுகின்றன.

" சேயுயர் பிணிமுகம் ஊர்ந்து"[74]

" முதல்வநின் யானை முழக்கம் கேட்ட

கதியிற்றே காரின் குரல்"[75]

" மத நனி வாரணம் மாறுமாறு அதிர்ப்ப"[76]

" பிணி முகம் ஊர்ந்த வெல் போர் இறைவ"[77]

" படுமணி யானை நெடியோய்"[78]

" ஊர்ந்ததை எரிபுரை ஓடை இடை இமைக்கும் சென்னி

" பொரு சமம் கடந்த புகழ்சால் வேழம்"[79]

" கூற்றத் தன்ன மாற்றரும் மொய்ம்பின்

கால்கிளர்ந் தன்ன வேழம்"[80]

" ஓடாப் பூட்கை பிணிமுகம் வாழ்த்தி"[81]

**முருகனின் படைக் கருவிகள்**

பரிபாடலின் ஐந்தாம் பாடலில் முருகனுக்குப் பிற தெய்வங்கள் அளித்த படைக் கருவிகள் பற்றிய செய்திகள் இடம்பெற்றுள்ளது. முருகன்

குழந்தைப் பருவத்திலேயே முதிராத உடலைக் கொண்டு, கையில் படைக் கருவிகள் இல்லாமல் வெறுங்கையால் விளையாட்டாக இந்திரனுடன் செய்த போரில் இந்திரன் தோற்று ஓடினான். இந்திரனின் தோல்வி கண்டு வருந்தாத நெருப்புக் கடவுள் குழந்தை முருகனின் வெற்றியைக் கண்டு மகிழ்ந்து, 'சூரபன்மாவை'அழித்துத் தேவர் குலத்தைக் காக்கத்' தோன்றிய குழந்தை முருகன் என்பதால், தீக் கடவுள் தனது உடம்பிலுள்ள நெருப்பின் ஆற்றலின் ஒரு பகுதியைப் பிரித்து வளப்பமான கோழியாக்கிக் கொடுத்தான். அதுகண்ட இந்திரன் தன் கூறிலிருந்து ஒரு பகுதியைப் பிரித்து, புள்ளிகளையும் தோகையினையும் உடைய அழகிய மயிலாக்கி முருகனுக்கு அளித்தான். அறம் தவறாத இயமனும் (கூற்றுவன்) தனது ஆற்றலிலிருந்து ஒரு பகுதியைப் பிரித்து அழகிய வெள்ளாட்டுக் குட்டியாக அளித்தான்.

இவ்வாறு நெருப்புக் கடவுளும் இந்திரனும் இயமனும் தேவர் பிறரும் தத்தம் உடம்பிலிருந்து பிரித்துப் படைகளாக்கி முருகனுக்குக் கொடுத்த கோழிச் சேவலும் மயிலும் வெள்ளாட்டுக் குட்டியும் இலச்சினை இடப்பட்ட வரிந்த வில்லும் தோமரமும் வாட்படையும் இலை செறிந்த ஈட்டியும் மழுபடையும் கோடாரியும் காய்கின்ற கதிர்களையுடைய கதிரவனை ஒத்த படைகளையும் மாலை மணிகளையும் முருகன் தன் பன்னிரண்டு கைகளிலும் ஏந்திக் கொண்டுள்ளானாம்.

'' ஆஅங்கு அவரும் பிறரும் அமர்ந்து படை அளித்த
மறியும், மஞ்ஞையும் வாரணச் சேவலும்
பொறி வரிச் சாரபமும் மரனும் வாளும்
செறி இலை ஈட்டியும் குடாரியும் கணிச்சியும்

தெறு கதிர்க் கனலியும் மாலையும் மணியும்

வேறு வேறு உருவின் இவ் ஆறு இரு கைக் கொண்டு,

மறு இல் துறக்கத்து அமரர் செல்வன் தன்

பொறிவரிக் கொட்டையொடு புகழ் வரம்பு இகந்தோய்''[82]

| **கொடுக்கப்பட்ட பொருள்** | **கொடுத்தவர்** |
|---|---|
| சேவல் | அக்கினி |
| மயில் | இந்திரன் |
| வெள்ளாட்டுக் குட்டி | இயமன் |
| வில், தோமரம், வாள், ஈட்டி, அணிச்சி, மழுப்படை, மாலை, மணி | தேவர் பிறர் |

என்று பரிபாடல் கூறும்.

**முருகவேல்**

சங்க இலக்கியங்களில் பல இடங்களில் வேல் பற்றிய செய்தி உள்ளது. முருகனொடு வேலைத் தொடர்புபடுத்தியும் ஒரு படைக்கலம் என்ற அளவிலும் கூறப்பட்டுள்ளன. அகநானூற்றுப் பாடலில் மருதன் இளநாகனார் எனும் புலவர் வேல் பற்றிக் குறிப்பிட்டுள்ளார். தன் ஒளி பொருந்திய, இலை போன்ற தோற்றத்தை உடைய நீண்ட வேற்படையினால் அழித்தவன் என்ற செய்தியைப் பின்வரும் பாடல் அடி குறிப்பிட்டுள்ளது.

''சூர் மருங்கு அறுத்த சுடர் இலை நெடு வேல்''[83]

மேலும்,

''வென் வேலான் குன்றின்மேல் விளையாட்டும் விரும்பார் கொல்?''[84]

என்று கலித்தொகை வினவுகின்றது. பகைவரை மாயம் செய்து கொல்லாது, கடலிடத்து மாமரமாகி மறைந்து நின்ற சூரனை, முருகன் தனது வெற்றி வேலால் எறிந்து கொன்றான் என்று ''முருகவேலின் சிறப்பு'' கூறப்படுகின்றது.

**''ஒன்னார்க்கு ஏந்திய இலங்கி இலை எஃகின்**
**மின்மயங்கு கருவிய கல்மிசைப் பொழிந்தென''[85]**

என்ற குறிஞ்சிப் பாடலில் மழைக்கு வேல் உவமையாகி உள்ளது.

**''குருகு எறி வேலோய்!''[86]**

என்று பரிபாடல் வேல் எறிந்தமையைக் கூறும்.

**'' நின்னை அருள் இல் அணங்கான் மெய்வேல் தின்னும்,**
**விறல் வேய்யோன் ஊர் மயில், வேல் நிழல் நோக்கி''[87]**

**'' மாறு அமர் அட்டவை மற வேல் பெயர்ப்பவை''[88]**

என்று பரிபாடல் தொடர்கள் மேலும் வேல் பற்றிய செய்திகளை உரைக்கின்றன.

**'' கடம்பு அமர் நெடுவேள் அன்ன, மீளி,**
**உடம்பிடித் தடக்கை ஓடா வம்பலர்''[89]**

என்று பெரும்பாணாற்றுப்படை முருகன் பகைவர்களை வேலால் வெற்றி கொண்டதைக் காட்டும்.

இப்பாடல்களின் மூலம் 'வேல்' சங்க காலப் போர் வாழ்வில் ஆற்றல் வாய்ந்த போர்க் கருவியாகப் பயன்படுத்தப்பட்டுள்ளதை அறியலாம். முருகன் போர்த் தெய்வமாய்ப் பேராற்றல் வாய்ந்த தெய்வமாக

விளங்கியமையை அறியலாம். வேல் அத்தெய்வத்தின் ஆயுதமாகக் கொள்ளப்பட்டதையும் காணலாம்.

**குறிஞ்சி நிலக் கடவுள்**

மலையும் மலை சார்ந்த இடமும் குறிஞ்சி நிலமாகும். இக்குறிஞ்சி நில மக்கள் முருகனை வணங்கி வந்ததைச் சங்க இலக்கியம் சுட்டுகின்றது. மலையை வாழிடமாகக் கொண்ட குறத்தி வேங்கை மலர்களைப் பறித்து அவற்றைத் தூவி, மலையை உறைவிடமாகக் கொண்டவரும் தம் குடித் தெய்வமுமான முருகவேளுக்குத் தேனைக் கொடுத்து வழிபட்டாள் என ஐங்குறுநூறு பாடும்.

> **'' குன்றக் குறவன் காதல் மட மகள்**
> **மன்ற வேங்கை மலர் சில கொண்டு,**
> **மலை உறை கடவுள் குல முதல் வழுத்தி**
> **தேம்பலிச் செய்த ஈர்நறுங் கையள்''**[90]

திருமுருகாற்றுப்படை

> **'' பழமுதிர் சோலை மலைகிழ வோனே''**[91]

என்று போற்றும். 'பழமுதிர்சோலை' என்பது முருகப்பெருமானுடைய அறுபடை வீடுகளுள் ஒன்று என்றும் அருவி பாய்கின்ற வளமுடைய மலைகட்கு உரிமை உடையவர் என்றும் 'பழமுதிர்ச்சோலை கிழவோன்' என்னும் தொடருக்கும் பொருள் காணலாம்.

'குறிஞ்சி நிலத் தெய்வமாக முருகன்' விளங்குவதைத் திருமுருகாற்றுப் படையின் பல அடிகளும் கலித்தொகையும் உரைக்கின்றன.

**" குறிஞ்சிக் கிழவ..."** [92]

**" குன்றமர்ந்து உறைதலும் உரியன்"** [93]

**" ஆவினன் குடி அசைதலும் உரியன்..."** [94]

**" குன்றுதொ றாடலும் நின்றதன் பண்பே"** [95]

**"கொடிச்சியர் கூப்பி வரை தொழு கை போல"** [96]

**மருத நிலத்தில் முருகன் வழிபாடு**

குறிஞ்சி நில மக்கள் அல்லாமல் மருத நில மக்களும் முருகனை வழிபட்டனர் என அறிய முடிகின்றது. அகநானூற்றுப் பாடலில் ஆவூர் மூலங்கிழார் எனும் புலவர் "தலைவியர் துயர் தீர முருகனை வழிபட்டனர் என்று பாடியுள்ளார். நீர்த்துறையிடத்து நிலைபெற்ற கடவுளுக்குக் கள்ளையும் மாலையையும் நிமிர்ந்து நேர் கொண்ட கொம்பினையுடைய வெள்ளாட்டுக் கிடாயையும் சேர்த்துக் காணிக்கைப் பொருளாய்த் தந்தமையும் மகள் கொண்ட நோய் தணியுமாறு வழிபட்டமையும் ஒரு பாடலால் அறியலாம்.

**" கள்ளும் கண்ணியும் கையுறை யாக**
**நிலைக்கோட்டு வெள்ளை நால் செவிக் கிடாஅ ய்**
**நிலைத் துறைக் கடவுட்கு உளப்பட ஓச்சி**
**தணி மருங்கு அறியாள், யாய் அழ"** [97]

'வயலும் வயல் சார்ந்த இடமும்' மருதமாகும். மருத நிலக் கடவுள் இந்திரன். இந்திர வழிபாடு மருத நிலத்தில் பெரும்பாலாகக் காணப்பட்ட

போதிலும் மருத நில மக்கள் இந்திரனைத் தவிர முருகனையும் வழிபட்டுள்ளனர் என்பது இங்கு நோக்கத்தக்கது. இதிலிருந்து முருகன் குறிஞ்சி நிலக் கடவுளானாலும் பிற நிலத்திற்கும் உரியன் என்பது புலப்படுகிறது. கருப்பொருள் மயங்கவும் பெறும் என்பதனையும் கருத்தில் கொள்ளலாம்.

**முருகனின் சிறப்பு**

திருமுருகாற்றுப் படை முருகனின் சிறப்பினைக் குறிப்பிட்டுள்ளது.

முருகன் கல்லால மரத்தின் கீழ் இருந்த கடவுளுடைய மகன் என்றும் பெருமையுடைய மலையரைச மகளுடைய மகன் என்றும் பகைவர்கட்குக் கூற்றுவன் என்றும் தேவர் வணங்கும் படைத் தலைவன் என்றும் கடப்ப மாலை அணிந்த மார்புடையவன் என்றும் எல்லா நூல்களையும் அறிந்த புலவன் என்றும் வெற்றிவேலையுடைய இளைஞன் என்றும் அந்தணர்களுக்குச் சொந்தமானவன் என்றும் சான்றோர் புகழும் சொற்களின் ஈட்டமாய் இருப்பவன் என்றும் தெய்வயானையும் வெள்ளியுமாகிய மகளிர்க்குக் கணவன் என்றும் வேல் பொருந்திய கையன் என்றும் குறிஞ்சி நிலத்திற்கு உரிமை உடையவன் என்றும் வீடு பேறு பெற வேண்டும் என்றும் விரும்பி வருவோர்க்கு அதனை அளித்து நுகர்விக்கும் பெரிய புகழுடையவன் என்றும் இடுக்கண்பட்டு எய்தினோர்க்கு அருள் வழங்கும் சேயோன் என்றும் போரை வென்ற நின் மார்பில் இறைவனைத் தழுவிக் கொண்டு அவர், வேண்டுவன வேண்டியாங்கு நல்கிப் பாதுகாக்கும் நெடியவேள் என்றும் தேவர் முதலிய பெரியோர் ஓதிப் பரவும் ஆறெழுத்து அருமறை மொழியாகிய பெயரையுடைய இறைவன் என்றும் சூரபன்மனை

வென்றவன் என்றும் போரில் மிக்க வீரன் என்றும் தலைவன் என்றும் முருகனின் சிறப்புக்கள் போற்றிக் கூறப்பட்டுள்ளன.

'' ஆல் கெழு கடவுட் புதல்வ! மால்வரை
மலைமகள் மகனே! மாற்றோர் கூற்றே!
வெற்றி வெல்போர்க் கொற்றவை சிறுவ!
இழை அணி சிறப்பின் பழையோள் குழவி!
வானோர், வணங்கு வில், தானைத் தலைவ!
மாலை மார்ப! நூல் அறி புலவ!
செருவில் ஒருவ! பொருவிறல் மள்ள!
அந்தணர் வெறுக்கை! அறிந்தோர் சொல்மலை!
மங்கையர் கணவ! மைந்தர் ஏறே!
வேல்கெழு தடக்கைச் சால் பெருஞ் செல்வ!
குன்றம் கொன்ற குன்றாக் கொற்றத்து
விண்பொரு நெடுவரைக் குறிஞ்சிக் கிழவ!
பலர் புகழ் நன்மொழிப் புலவர் ஏறே!
அரும் பெறல் மரபின் பெரும்பெயர் முருக!
நசையுநர்க்கு ஆர்த்தும் இசை பேர் ஆள!
அலந்தோர்க்கு அளிக்கும், பொலம்பூண், சேஎய்;
மண்டு அமர் கடந்த நின் வென்று ஆடு அகலத்து
பரிசிலர்த் தாங்கும் உருகெழு நெடுவே எள்
பெரியோர் ஏத்தம் பெரும்பெயர் இயவுள்
சூர்மருங்கு அறுத்த மொய்ம்பின் மதவலி!
போர்மிகு பொருந! குரிசில்!''[98]

**பன்னிரு கைகள்**

திருமுருகாற்றுப்படையில் முருகனின் பன்னிரு கைகளின் கடமைகள் பற்றிக் குறிப்பிடப்பட்டுள்ளது. முருகனின் முதலாம் முகத்திற்கு ஏற்ப பொருந்திய இணைக் கைகளில், மக்களால் பொறுக்க முடியாத கதிரவனுடைய வெம்மையைத் தாம் தாங்கிக் கொண்டு, பொறுத்தற்கு ஏற்ற வெம்மையை அவர்கட்குத் தரும் வண்ணம் அக்கதிரவனோடு விசும்பினிடத்தே என்றும் இயங்கும் முறைமையினையுடைய தெய்வ இருடிகட்கு, பாதுகாவலாகத் தூக்கப்பட்டது ஒரு கையாகும். அதற்கு இணையாக இடுப்பிலே வைத்தது ஒரு கை ஆகும்.

இரண்டாம் முகத்திற்கு ஏற்ப பொருந்திய இணைக்கைகளில் செவ்வாடையை உடைய தொடையின் மேல் தாங்கியது ஒரு கை; அதற்கு இணையாக அன்புடைய அடியார்பால் விரும்பி வர ஊர்ந்த யானையைத் தோட்டியால் செலுத்தக் கொண்டது ஒரு கை.

மூன்று முகத்திற்கு ஏற்ப பொருந்திய இணைக் கைகளில் ஒன்று அந்தணர் வேள்வியைக் கெடுக்க நினைக்கும் அசுரர்களை வெருட்டுதற் பொருட்டு வியப்பையும் கருமையையும் உடைய கேடயத்தை ஏந்திச் சுழற்ற, மற்றொரு கை வேலை வலமாகச் சுழற்றுகிறது.

நான்காம் முகத்திற்கு ஏற்ப பொருந்திய இணைக் கைகளில் எஞ்சிய பொருள்களை ஏமமுற நாடி விளக்குங்கால், ஒரு கை மோன முத்திரையுடன் மார்பொடு விளங்க, ஒரு கை மார்பிலுள்ள மாலையுடன் சேர்ந்து அழகொடு பொலிகின்றது.

ஐந்தாம் முகத்திற்கு ஏற்ப பொருந்திய இணைக் கைகளுள் ஒரு கை, தேவர்களைக் காக்கக் கருதி அசுரரை அழிக்க முற்படுங்கால், தொடியைக் சுழல இட்டிருத்தலால், கை தூக்கும்போது கீழே இறங்குதலைப் பொருந்திய அத்தொடியொடு அக்கை உயரச் சென்று சுழல, அதற்கு இணையான கை இனிதாக ஒலிக்கின்ற மணியை அடித்து அதனை மாறி மாறி ஒலிக்கச் செய்கின்றது.

ஆறாம் முகத்திற்கு ஏற்ப பொருந்திய இணைக் கைகளுள் ஒரு கை, குறவர் மடமகளொடு அமர்ந்திருக்குங்கால் உலகில் இல்வாழ்க்கை இனிமையின் நடைபெறுவதாகலின், அஃது அவ்வாறு நடைபெற நீல நிறத்தையுடைய மேகத்தாலே மிக்க மழையைப் பெய்வித்து நிற்க, அதற்கு இணையான கை, அந்த இல்வாழ்க்கை நடப்பதற்காக தேவ மகளிர்க்கு மணமாலையைச் சூட்டுகின்றது.

இவ்வாறு, அந்தப் பன்னிரண்டு கைகளும் ஆறு திருமுகங்களுக்கும் ஏற்ற முறையில் செயல்பட்டுள்ளன என்பதைப் பாடியுள்ளார் நக்கீரர்.

**''ஆரம் தாழ்ந்த அம்பகட்டு மார்பின்**
**செம்பொறி வாங்கிய, மொய்ம்பின், சுடர்விடுபு,**
**வண்புகழ் நிறைந்து, வசிந்து வாங்கு, நிமிர்தோள்;**
**விண் செலல் மரபின் ஐயர்க்கு ஏந்தியது**
**ஒரு கை, உக்கம் சேர்த்தியது ஒரு கை;**
**நலம்பெறு கலிங்கத்துக் குறங்கின்மிசை அசை இயது ஒரு கை,**
**அங்குசம் கடாவ ஒரு கை; இருகை**
**ஐஇரு வட்டமொடு எஃகுவலம் திரிப்ப; ஒருகை**
**மார்பொடு விளங்க, ஒருகை**

தாரொடு பொலிய; ஒருகை

கீழ்வீழ் தொடியொடு மீமிசைக் கொட்ப, ஒருகை

பாடுஇன் படுமணி இரட்ட; ஒருகை

நீல்நிற விசும்பின் மலிதுளி பொழிய, ஒருகை

வான்அர மகளிர்க்கு வதுவை சூட்ட;

ஆங்குஅப் பன்னிருகையும் பாற்பட இயற்றி''[99]

**குரவைக் கூத்து**

குரவை என்பது ஒரு வகைக் கூத்தாகும். இஃது எழுவரேனும், எண்மரேனும் ஒன்பதின்மரேனும், கைகோத்து ஆடும் கூத்து என்பர். திருமுருகாற்றுப்படையில் குரவைக் கூத்து பற்றிக் குறிப்பிடப்பட்டுள்ளது.

குறவர் நீண்ட மூங்கில் குழாய்களில் ஊற்றி நெடுநாள் வைத்து முற்றி விளைந்த தேனால் ஆன கள்ளின் தெளிவை, மலையிடத்துள்ள சிற்றூரில் வாழும் தம் சுற்றத்தாருடன் உண்டு மகிழ்ந்து, தங்கள் குறிஞ்சி நிலத்திற்கு உரிய 'தொண்டகம்' என்னும் பெயருடைய சிறிய பறையை அடித்துத் தனது தாளத்திற்கு ஏற்ப, முருகன் திருவுள்ளம் மகிழும்படி கூத்தாடி யிருக்கின்றனர்.

''பைங்கொடி, நறைக்காய் இடை இடுபு, வேலன்,

அம்பொதிப் புட்டில் விரைஇ, குளவியொடு,

வெண்கூ தாளம் தொடுத்த கண்ணியன்

நறுஞ்சாந்து அணிந்த கேழ்கிளர் மார்பின்;

கொடுந்தொழில் வல்வில் கொலைஇய கானவர்

நீடு அமை விளைந்த தேக்கண் தேறல்

குன்றகச் சிறுகுடிக் கிளையுடன்மகிழ்ந்து,

தொண்டகச் சிறுபறைக் குரவை அயர''[100]

முருகனுக்கு மலை நிலத்தார் விழா எடுக்கும்போது அயலூரில் வாழும் தம் சுற்றத்தவரையும் அழைத்து அவரோடு மகிழ்ந்து குரவை ஆடினர்.

**" அருங்குறும் பெறிந்த கானவர் உவகை**
**திருந்துவேல் அண்ணற்கு விருந்திறை சான்மென**
**நறவுநாட் செய்த குறவர்தம் பெண்டிரொடு**
**மான் தோற் சிறுபறை கறங்கக் கல்லென**
**வான்தோய் மீமிசை யயருங் குரவை"**[101]

தலைவன் தலைவிக்கு விரைவில் திருமணம் நிகழ வேண்டும் என்ற தம் விருப்பம் நிறைவேற வேண்டித் தோழி, தலைவி ஆகியோர் முருகனை குரவைக் கூத்தாடி வழிபடுவர்.

**"தெரியிழாய் நீயு நின்கேளும் புணர**
**வரையுறை தெய்வம் உவப்ப உவந்து**
**குரவை தழீஇயாம் ஆடக் குரவையுட்**
**கொண்டு நிலைபாடி"**[102]

நிறை நிலையையும்

**"நிலை யுயர் கடவுட்குக் கடம் பூண்டு"**[103]

கலித்தொகை காட்டும்.

குறிஞ்சிக் கலியில் முருகன் என்ற சொல் காணப் பெறவில்லை. ஆயினும், 'வரையுறை தெய்வம்', 'நிலையும் கடவுள்' ஆகியன உள்ளன. இச்சொற்றொடர்கள் முருகனையே குறிக்கும்.

**" ஐவன வெண்ணெல் அறை உரலுட் பெய்திருவாம்**
**ஐயனை ஏத்துவாம்"**[104]

எனும் நற்றிணைப் பாடலில் வரும் 'ஐயன்' என்ற சொல் முருகனைக் குறிக்கும் என்று நச்சினார்க்கினியர் உரை எழுதியுள்ளார். குறிஞ்சி நில மக்கள் முருகனைக் குல தெய்வமாகக் கொண்டு போற்றினர் என்பது குறிக்கத்தக்கனவாகும்.

**அணங்கு**

மலையில் உறையக்கூடிய தெய்வத்தை 'அணங்கு' என்ற சொல்லாலும் குறிப்பிடுகின்றனர். 'அணங்கு' என்ற சொல்லிற்குத் 'தீண்டி வருத்தும் தெய்வம்' என்று பொருள். குறிஞ்சி நில மக்கள் அவ்வணங்கையும் தெய்வமாக வணங்கினர்.

**'' மணங் கமழ் நாற்றத்த மலை நின்று பலி பெறூஉம்**
**அணங்கென அஞ்சுவர் சிறுகுடி யோரே''**[105]

**'' மணங் கமழ் மார்பினை மஞ்சிவநடுக்கம் போழ்ந்**
**தணங்குடை யாரிடை''**[106]

என்னும் தொடர்கள் இதனை எடுத்துரைக்கின்றன. அவ்வணங்கிற்குப் பலியிடுபவர் என்பதை, 'மலை நின்று பலிபெறூஉம்' என்னும் தொடர் குறிப்பிடுகிறது.

**''அணங்கறி கழங்கின்...''**[107]

**''அணங்கும் அணங்கும் போலும்...''**[108]

**''அணங்குடை அருஞ்சூள் தருகுவென் எனநீ''**[109]

என நற்றிணையும்,

**''அணங்குடை முருகன் கோட்டத்து''**[110]

எனப் புறநானூறும்,

''அணங்கு சால் உயர்நிலை தழீஇ''[111]

எனத் திருமுருகாற்றுப்படையும் அணங்கு பற்றிக் குறிப்பிட்டுள்ளன.

**முருகன் இருப்பிடங்கள்**

முருகப் பெருமான் வீற்றிருக்கும் அறுபடை வீடுகளும் பத்துப் பாட்டில் தனித்தனியாக சிறப்பிக்கப்படுகின்றன. முருகக்கடவுள் எழுந்தருளி யிருக்கும் அறுபடை வீடுகளான திருப்பரங்குன்றம், திருச்செந்தூர், பழனி, சுவாமிமலை, திருத்தணி மற்றும் பழமுதிர்சோலையின் சிறப்புக்கள் கூறப்பட்டுள்ளன.

நக்கீரர் திருமுருகாற்றுப் படையில் திருப்பரங்குன்றில் முருகன் வீற்றிருத்தல் பற்றிக் குறிப்பிட்டுள்ளார். மாடமாளிகை மிக்க ஏனைய தெருக்களையும் கடைத் தெருவையும் உடைய நகரம் 'கூடல்' என்ற பெயர் பெற்ற மதுரை மாநகரம் என்பர். மதுரைக்கு நான்மாடக் கூடல் என்னும் பெயரும் உண்டு. அந்நகரின் மேற்குத் திசையில் உள்ளது திருப்பரங்குன்றம். மலர்ந்த அழகிய சுனைப் பூக்களை நாடும் அழகிய சிறகுகளை உடைய வண்டின் கூட்டம் ஆரவாரிக்கின்ற வளம் நிறைந்தது திருப்பரங்குன்றம். அக்குன்றிலே மிக்க விருப்புடன் கோயில் கொண்டருளி உறைபவன் முருகன்; அவ்விடத்திற்குச் சென்றால் முருகனைக் காணலாம் என்பார் நக்கீரர்.

'' இன்னே பெறுதி, நீ முன்னிய வினையே,
செருப்புகன்று எடுத்த சேண் உயர் நெடுங்கோடி
வரிப்புனை பந்தொடு பாவை தூங்க
பொருநர்த் தேய்த்த போர்அரு வாயில்

**திருவீவற் றிருந்த தீதுநீர் நியமத்து,**

**மாடம் மலி மறுகின் கூடற் குடவயின்**

**இருஞ் சேற்று அகல் வயல் விரிந்துவாய் அவிழ்ந்த**

**முள்தாட் தாமரைத் துஞ்சி, வைகறைக்**

**கள் கமழ் நெய்தல் ஊதி, எல்படக்**

**கண் போல் மலர்ந்த காமரு சுனை மலர்,**

**அஞ்சிறை வண்டின் அரிக்கணம் ஒலிக்கும்,**

**குன்று அமர்ந்து உறைதலும் உரியன்''**[112]

உயிர்கள் அறியாமை என்னும் சேற்றில் அழுந்தும், மனைவி மக்கள் இடத்துப் பற்றுடைமையில் பிணிப்புண்டு நிற்கும். முருகன் அருளால் இவற்றிலிருந்து நீங்கி, இளமை, அழகு, அழியாமை, தெய்வத்தன்மை ஆகியனவெல்லாம் உடைய சேயோனாகிய முருகனைக் கண்டு பேரின்பத்தில் என்றும் திளைத்திருக்கலாம் என்ற கருத்தை உணர்ந்து கொள்ளுமாறு பாடியுள்ளார் நக்கீரர்.

திருமுருகாற்றுப்படையில் 78 அடி முதல் 125 அடி முடிய திருச்சீரலைவாய் (திருச்செந்தூர்) பகுதியில் எழுந்தருளியிருக்கும் முருகக் கடவுளின் தோற்றம் பற்றிக் குறிப்பிடப்பட்டுள்ளது.

திருச்செந்தூரில் முருகப் பெருமான் யானையை வாகனமாகக் கொண்டு, தம் அடியார்களுக்கு அருள்புரிகின்றார். ஆறுமுகத்தோடும், பன்னிரு திருக்கரங்களோடும் திருச்சீரலைவாய் என்று வழங்கப்பட்ட திருச்செந்தூரில் முருகப் பெருமான் எழுந்தருளியுள்ள தோற்றம் பற்றிக் குறிப்பிடப்பட்டுள்ளது.

" அந்தரப் பல்லியம் கறங்க, திண்காழ்
வயிர் எழுந்து இசைப்ப, வால்வளை ஞரல
உரம் தலைக் கொண்ட உரும் இடி முரசமொடு
பல்பொறி மஞ்ஞை வெல் கொடி அகல,
விசும்பு ஆறு அக விரைசெலல் முன்னி,
உலகம் புகழ்ந்து ஓங்கு உயர் விழுச்சீர்
அலைவாய்ச் சேறலும் நிலைஇய பண்பே, "[113]

இப்பகுதியில் தேவர்களுடைய இசைக் கருவி (தேவதுந்துபி) முழங்கவும் கொம்புகள் மிக்கு ஒலிப்பவும் வெள்ளிய சங்குகள் முழங்கவும் இடியை ஒப்ப முழங்கும் முரசோடு, வேல் கொடியில் இருந்து மயில் அகவவும் சான்றோர்களாலே புகழப்பட்ட மிக உயர்ந்த புகழினை உடைய நாமனூரலைவாய் (திருச்செந்தூர்) என்னும் பகுதியில் ஆறுமுகன் வந்தருளியிருக்கும் காட்சியினைக் காணலாம்.

**திருவாவினன் குடி**

திருவாவினன் குடி இப்போது பழனி என வழங்கும் ஊர். இது சங்க காலத்தில் 'பொதினி' என்ற பெயருடன் ஆவி என்னும் வேளிர் தலைவனுக்கு உரியதாய் இருந்தது என்று இதன் அருகில் ஆய்க் குடி என இருக்கும் ஊர் 'ஆவி குடி' என்பதன் மரூஉ என்றும் கூறுவர். இப்பகுதியைக் கல்வெட்டுக்கள் 'வையாவி நாடு' என்று குறிக்கின்றன.

திரு, ஆ, இனன், கு, டி என்று பிரிக்கப்பட்டு, திருமகளும், காமதேனுவும் ஞாயிறும் நிலமகளும் தீக்கடவுளும் வழிபட்ட இடம்

என்பதால் திருவாவினன்குடி எனப்பட்டது எனப் பிற்காலப் புராண வரலாறு கூறுகிறது.

திருவாவினன் குடியில் குற்றமற்ற அறக் கற்பினையுடைய தெய்வ யானையுடன் முருகன் உள்ளான்.

**'' தாஇல் கொள்கை மடந்தையொடு சிலநாள்**
**ஆவினன் குடி அசைதலும் உரியன்,''**[114]

திருமுருகாற்றுப்படையில், 'திருவாவினன் குடி'யில் முனிவர்களும், தேவர்களும், திருமாலும், உருத்திரனும், இந்திரனும் ''அய்யனை'' விடுவிக்கக் கருதி ஆவினன்குடியில் வீற்றிருக்கும் முருகக் கடவுளை வணங்க வருவது பற்றியும் குறிப்பிடப்பட்டுள்ளது.

திருவாவினன்குடியில் எழுந்தருளிய முருகப்பெருமானை வணங்கும் பொருட்டு முனிவர் முன்னே செல்கின்றனர், திருமால் முதலிய தேவர் பின் செல்கின்றனர் என்றும் கூறப்பட்டுள்ளது. மரவுரி உடுத்தியவர், நரைமுடி உடையவர், மானின் தோலைப் போர்த்தவர், மெலிந்த உடலைக் கொண்டவர், பகற்பொழுது உணவை நீக்கியவர், பேரறிவினை உடையவர், ஒருவரிடமும் வெறுப்பு இல்லாத மெய்ஞானத்தை உடையவர் ஆகிய இயல்புகள் பொருந்திய முனிவர்கள் முன்னே செல்ல, திருமால் முதலிய தேவர்கள் பின்னே முருகனைக் காணச் சென்றனராம்.

**'' சீரை தைஇய உடுக்கையர், சீரொடு**
**வலம்புரி புரையும் வால்நரை முடியினர்,**
**மாசு அற இமைக்கும் உருவினர், மானின்**
**உரிவை தை இய ஊன்கெடு மார்பின்**

**என்பு எழுந்து இயங்கும் யாக்கையர், நன்பல்,**

**பலஉடன் கழிந்த உண்டியர், இகலொடு**

**செற்றம் நீக்கிய மனத்தினர் யாவதும்**

**கற்றோர் அறியா அறிவினர், கற்றோர்க்குத்**

**தாம் வரம்பு ஆகிய தலைமையர், காமமொடு**

**கடுஞ்சினம் கடிந்த காட்சியர், இடும்பை**

**யாவதும் அறியா இயல்பினர், மேவரத்**

**துனிஇல் காட்சி முனிவர்,''**[115]

ஆகியோர் வரும் காட்சியை விளக்கியுள்ளார் நக்கீரர்.

**திருஏரகம்**

ஏரகம் 'மலைநாட்டகத்தொரு திருப்பதி' என்றார் நச்சினார்க்கினியர். சிலப்பதிகார அரும்பத உரையாசிரியர் வெண்குன்றத்தைச் 'சுவாமி மலை' என்பதால் 'ஏரகம்' மற்றொரு திருப்பதி என்று கருதியிருக்கக் கூடும். ஆனால் அருணகிரியார் சோழநாட்டிலுள்ள 'சுவாமிமலை' என்னும் தலமே ஏரகம் எனக் கொண்டார்.

திருமுருகாற்றுப்படையில் இரு பிறப்பாளர்களின் இயல்பு பற்றியும் அந்தணர் வழிபடும் முறை பற்றியும் குறிப்பிடப்பட்டுள்ளன. அந்தணர்கள் இருபிறப்பை உடையவர்கள் என்றும் பூணூல் சடங்கிற்கு முன் ஒரு பிறப்பையும் பின் ஒரு பிறப்பையும் அடைவர் என்றும் கூறப்பட்டுள்ளன.

ஓதல் முதலிய அறுவகைத் தொழில்களை வழுவாமல் செய்யும் அந்தணர் நாற்பத்தெட்டு ஆண்டு நல்ல இளமைக் காலம் முழுவதும் வேதம் கூறும் வழியில் பிரம்மச்சரியத்தை கைக்கயாண்டும் அதன்பின் இல்லற வாழ்க்கையில் பயின்ற கோட்பாட்டினை உடையவர்கள் என்றும் தாங்கள்

வழிபட வேண்டிய முக்காலமும் (காலை, பகல், மாலை) அறிந்து, பூணூலையும் உலராத ஆடையையும் அணிந்து கொண்டு தலை மேலே கை குவித்து முருகப்பெருமானைத் துதித்து அவன் பெயரையே மந்திரமாகப் பலமுறை ஒலித்து மணமிக்க மலர்களைக் கொண்டு முருகப் பெருமானை வழிபட்டனர் என்றும் அதற்கு மிகவும் மகிழ்ந்து திருஏரகம் என்னும் தலத்தின்கண் முருகப் பெருமான் எழுந்தருளியுள்ளான்.

**“ இருமூன்று எய்திய இயல்பினின் வழாஅது**
**இருவர்ச் சுட்டிய பல்வேறு தொல்குடி,**
**அறுநான்கு இரட்டி இளமை நல் யாண்டு**
**ஆறனில் கழிப்பிய, அறன்நவில் கொள்கை**
**மூன்றுவகைக் குறித்த முத்தீச் செல்வத்து,**
**இரு பிறப்பாளர், பொழுது அறிந்து நுவல**
**ஒன்பது கொண்ட மூன்று புரி நுண் ஞாண்**
**புலராக் காழகம் புலர உடீஇ**
**உச்சிக் கூப்பிய கையினர், தற்புகழ்ந்து,**
**ஆறு எழுத்து அடங்கிய அருமறைக் கேள்வி,**
**நா இயல் மருங்கில் நவிலப் பாடி,**
**விரை உறு நறுமலர் ஏற்றிப் பெரிது உவந்து**
**ஏரகத்து உறைதலும் உரியன்”**[116]

என்பார் நக்கீரர்.

## திருப்பரங்குன்றத்தின் சிறப்புகள்

பரிபாடல், திருமுருகாற்றுப்படை, மதுரைக்காஞ்சிப் பாடல்களில் திருப்பரங்குன்றத்தின் சிறப்புகள் குறிப்பிடப்பெற்றுள்ளன.

மதுரையில் உள்ள திருப்பரங்குன்றத்தை இமயமலையுடன் ஒப்பிட்டுப் புலவர் குறிப்பிட்டுள்ளார். உயிர்களைக் காக்கும் திருமால், காளையை ஊர்தியாகக் கொண்ட சிவபெருமான், தாமரை மலரில் அமர்ந்திருக்கும் பிரமன், பிரமனிடமிருந்து தோன்றிய பன்னிருவரும் தேவ மருத்துவராகிய அசுவனி தேவர் இருவரும் மெய்நூல்கள் உணர்ந்த வசுக்கள் எண்மரும் உருத்திரர் பதினொருவர், திசைக் காவலர் எண்மரும் இவர் அல்லாத தேவர், அசுரர், தவமுனிவர் ஆகிய அனைவரும் முருகன் வீற்றிருக்கும் திருப்பரங்குன்றம் வந்து தங்குவர். ஆகையால் இமயமலை போன்று குன்றம் உள்ளது என வியக்கின்றது பரிபாடல்.

**'' மண்மிசை - அவிழ்துழாய் மலர்தரு செல்வத்துப்**
**புள்மிசைக் கொடியோனும், புங்கவம் ஊர்வோனும்**
**மலர்மிசை முதல்வனும், மற்று அவனிடைத் தோன்றி,**
**உலகு இருள் அகற்றிய பதின்மரும், இருவரும்,**
**மருந்து உரை இருவரும், திருந்து நூல் எண்மரும்,**
**ஆதிரை முதல்வனின் கிளந்த**
**நாதர் பன்னொருவரும் நான்திசை காப்போரும்,**
**யாவரும், பிறரும், அமரரும், அவுணரும்,**
**மேஅரு முதுமொழி விழுத் தவ முதல்வரும்**
**பற்றாகின்று, நின் காரணமாக**
**பரங்குன்று இமயக் குன்றம் நிகர்க்கும்''**[117]

மண்ணுலகில் வாழும் உயிர்கள் வருந்துமாறு மழை வறண்டு போனாலும் திருப்பரங்குன்றத்து மலையிலிருந்து விழும் அருவி நீர் தடையின்றி

விழுகின்றது என்றும் அவ்வாறு விழுவதால் மதுரை மாநகர மக்கள் பெருஞ் செல்வம் பெறுவர் என்றும் அருவியின் சிறப்பைக் குறித்துள்ளார்.

**'' நெறிநீர் அருவி அசும்பு உறு செல்வம்,**
**மண் பரிய வானம் வறப்பினும், மன்னுகமா,**
**தண் பரங்குன்றம்!''**[118]

திருப்பரங்குன்ற மலை வாழும் குறவர் பெற்ற மகளிர் வள்ளியின் தோழியர். இவர்கள் வீரமும் பெருமிதமும் பொருந்திய கொடிச்சியராவர். போரில் வெற்றியைப் பெற்றவர். வெற்றி வேலையுடைய முருகவேளுக்கு ஒப்பவே போரிட்டனர் என்று புலவர் குறமகளிரின் வீரத்தைப் போற்றுகின்றார்.

**'' குறிஞ்சிக் குன்றவர் மறம் கெழுவள்ளி தமர்**
**வித்தகத் தும்பை விளைத்தலான், வென் வேலாற்கு**
**ஒத்தன்று, தண் பரங்குன்று''**[119]

திருப்பரங்குன்றத்து மலை விரிந்த மலரிலிருந்து வடியும் தேனால் மரம் நனையும்படி விளங்குகின்றது. அடியவர்கள் கோல் நெருப்பும், இசைக் கருவிகளும் மணப் பொருட்களும் நறுமணப் புகையும் முருகனுக்குரிய சேவற் கொடியும் ஏந்தி வருகின்றனர். இங்கு வந்தபின் மேலோர் உறையுளை எவரும் வேண்டார். இங்கேயே இருந்துவிட விரும்புவராம்.

**'' கோல் எரி, கொளை, நறை, புகை, கொடிஒருங்கு எழ-**
**மாலை மாலை அடி உறை, இயைநர்,**
**மேலோர் உறையுளும் வேண்டுநர் யாஅவர்?''**[120]

இனிய ஓசையையும் மழைத்துளியையும் உடைய மேகங்கள் குளிர்ந்த திருப்பரங்குன்றில் ஆரவாரத்துடன் விழா எடுத்த செய்தியை

**'' தளி மழை பொழியும் தண் பரங்குன்றில்**
**கலி கொள் சும்மை....''**[121]

என்று திருமுருகாற்றுப்படையில் குறித்துள்ளார். மேலும்

**'' குன்றமர்ந்து உறைதலும் உரியன்''**[122]

என்று உரைவிடமும் குறித்தார்.

**'' இரவிற் புணர்ந்தோர் இடைமுலை அல்குல்**
**புரைவது பூந்தாரான் குன்று...**[123]

**'' புனைபுணை ஏறத் தாழ்த்ததை; தளிரிவை**
**நீரிற் றுவண்ட சேஎய் குன்றம்; காமர்ப**
**பெருங்கன்றோ வையை வரவு''**[124]

**'' தலை தொட்டேன் தண்பரங் குன்று''**[125]

**'' செவ்வேள் பரங்குன்று''**[126]

என்று பரிபாடலும் முருகனின் குன்றே திருப்பரங்குன்று என உரைக்கின்றது.

**முருகன் குன்றுதோறும் ஆடல் புரிதல்**

முருகன், மயில் போன்ற அழகான மகளிரோடு (குன்றக் குரவை ஆடுவோர்) குன்றுதோறும் எழுந்தருளியுள்ளான்.

**'' விரல் உளர்ப்பு அவிழ்ந்த வேறுபடு நறுங்கான்**
**குண்டு சுனை பூத்த வண்டுபடு கண்ணி**
**இணைத்த கோதை, அணைந்த கூந்தல்,**

முடித்த குல்லை, இலையுடை நறும்பூ,

செங்கால் மராஅத்த, வால் இணர், இடை இடுபு,

சுரும்பு உணத் தொடுத்த பெருந்தண் மாத்தழை

திருந்துகாழ் அல்குல் திளைப்ப உடீஇ

மயில்கண் டன்ன மடநடை மகளிரொடு

செய்யன், சிவந்த ஆடையன், செவ்வரைச்

செயலைத் தண் தளிர் துயல்வரும் காதினன்,

கச்சினன், கழலினன், செச்சைக் கண்ணியன்,

குழலன், கோட்டன், குறும்பல் லியத்தன்

தகரன், மஞ்ஞையன், புகர்இல் சேவல்அம்

கொடியன், நெடியன், தொடிஅணி தோளன்

நரம்பு ஆர்த் தன்ன இன்குரல் தொகுதியொடு

குறும்பொறிக் கொண்ட நறுந்தண் சாயல்

மருங்கில் கட்டிய நிலன் நேர்பு துகிலினன்

முழவு உறழ் தடக்கையின் இயல ஏந்தி,

மென் தோள் பல்பிணை தழீஇ, தலைந்தந்து

குன்றுதொறு ஆடலும் நின்றதன் பண்பே''[127]

முருகன் சிவந்த திருமேனியன் என்றும் சிவந்த ஆடையை உடுத்தியவன் என்றும் அசோதினது குளிர்ந்த தளிர்கள் அசைகின்ற காதுகளை உடையவன் என்றும் அரைக் கச்சையை அணிந்தவன் என்றும் வீரக்கழலை அணிந்தவன் என்றும் வெட்சி மாலையைச் சூடியவன் என்றும் புல்லாங்குழலை இசைப்பவன் என்றும் பெரிய கொம்பை ஊதுபவன் என்றும் வேறுபல அரிய இசைக் கருவிகளை ஒலிப்பவன் என்றும் ஆட்டுக் கிடாவை வாகனமாக உடையவன் என்றும் மயிலை ஊர்தியாகக்

கொண்டவன் என்றும் குற்றமற்ற கோழிக் கொடியை உடையவன் என்றும் நெடிய உருவம் படைத்தவன் என்றும் 'தொடி' என்னும் அணியைத் தோளில் அணிந்தவன் என்றும் இடுப்பில் இறுகக் கட்டிய அரைக் கச்சையின் மேல் உடுப்பாகக் கொண்ட குளிர்ந்த மென்மை மிக்கதாகிய ஆடை நிலத்தளவும் தொங்கிப் புரளும் வண்ணம் தரித்தவன் என்றும் முழவை ஒத்த பெரிய கைகளால் பொருந்த ஏந்தி, மெல்லிய தோள் உடைய மான்பிணை போலும் மகளிரைத் தழுவிக் கொண்டு அவர்க்கு முதற்கை கொடுத்து, மலைதோறும் சென்று விளையாடுதல் முருகக் கடவுளின் நிலைத்த குணம் என்றும் விவரிக்கிறார் நக்கீரர்.

**பழமுதிர்சோலையில் முருகன் வீற்றிருத்தல்**

'பழமுதிர்சோலை' என்பது முருகப்பெருமானுடைய அறுபடை வீடுகளுள் ஒன்றாகும். இது இக்காலத்தில் திருமால் திருப்பதியாக விளங்கும் மதுரைக்கு அருகிலுள்ள 'திருமாலிருஞ்சோலை மலை' என்றும் சிலர் கூறுவர். இங்ஙனம் கூறுவோர் இது முருகன் திருக்கோயிலாக இருந்ததற்கு உரிய சில சான்றுகளையும் காட்டுவர். இக்கருத்தை மறுத்துரைப்பவரும் உளர். முருகப் பெருமான் குறிஞ்சி நிலக் கடவுள் என்றும் இவ்வாறு வளம் பொருந்திய அருவி பாய்கின்ற மலைகட்கு உரிமையுடையவன் என்றும் பழமுதிர்சோலை 'மலைகிழவோன்' என்றும் கூறுவர். நச்சினார்க்கினியர் உரையிலும் பழமுதிர்சோலை என்பதனை மலைக்குரிய அடையாளமாகக் கருதியுள்ளார்.

நக்கீரர் மலையின் கண் அருவியைச் சிறப்பிப்பார் போன்று முருகப் பெருமான் விரும்பி உறையும் மலையும் மலைசார்ந்த இடமாகிய குறிஞ்சி நிலத்தின் வளத்தையும் அழகாகப் புனைந்துள்ளார். பழம் முற்றின

சோலைகளை உடைய ‘பழமுதிர்சோலை’ மலைக்கு உரிமையுடையவன் முருகப்பெருமான் என்று போற்றுகின்றார்.

“ ........... பலவுடன்
வேறுபல் துகிலின் நுடங்கி, அகில் சுமந்து,
ஆர முழு முதல் உருட்டி, வேரற்
பூவுடை அலங்கு சினை புலம்ப, வோ் கீண்டு
விண்பொரு நெடுவரைப் பரிதியின் தொடுத்த
தண் கமழ் அலா் இறால் சிதைய, நன்பல
ஆசினி முதுசுளை கலாவ, மீசிசை
நாக நறுமலா் உதிர, யூகமொடு
மாமுக முசுக்கலை பனிப்ப, பூநுதல்
இரும்பிடி குளிர்ப்ப வீசி, பெருங் களிற்று
முத்துடை வான்கோடு தழீஇ தத்துற்று
நன்பொன் மணிநிறம் கிளர பொன் கொழியா
வாழை முழுமுதல் துமிய தாழை
இளநீா் விழுக்குலை உதிர, தாக்கி
கறிக் கொடிக் கருந்துணா் சாய பொறிப்புற
மடநடை மஞ்ஞை பலவுடன் வெரீஇ
கோழி வயப்பெடை இரிய, கேழலொடு
இரும்பனை வெளிற்றின் புன்சாய் அன்ன
குரூ உமயிர் யாக்கைக் குடா அடி உளியம்
பெருங்கல் விடர் அளைச் செறிய, கருங்கோட்டு
ஆமா நல் ஏறு சிலைப்ப, சேண் நின்று
இழுமென இழிதரும் அருவி
பழம்முதிர் சோலை மலைகிழ வோனே!”[128]

**முருகன் விரும்புவன**

பரிபாடலில் முருகன் விரும்பும் செயல் இடம்பெற்றுள்ளது. மாசில்லாத கார் காலத்தின் வெள்ளிய மேகம் பொங்கி எழுந்தாற் போன்ற நறுமணம் கமழும் அகில் முதலானவற்றால் புகைக்கப்பெற்ற நல்ல புகையை விரும்புகிறவன் என்றும் ஆறுமுகங்களையும் பன்னிரண்டு தோள்களையும் அவனுடைய வள்ளியின் நலனை விரும்புபவன் என்றும் யாழில் இசை எழுப்பிப் பாட அப்பாட்டை விரும்புபவன் என்றும் குறிப்பிடுகின்றார்.

**'' கறைஇல் கார் மழை பொங்கி அன்ன**
**நறையின் நறும் புகை நனி அமர்ந்தோயே**
**அறுமுகத்து ஆறு - இரு தோளால் வென்றி**
**நறுமலர் வன்னிப் பூ நயந்தோயே**
**கெழீஇக் கேளிர் சுற்ற, நின்னை**
**எழீஇப் பாடும் பாட்டு அமர்ந்தோயே''**[129]

அன்பர்களது வாழ்த்தினை விரும்பும் முருகப் பெருமான் வீற்றிருக்கும் திருப்பரங்குன்றம் என்பதை,

**''வாழ்த்து உவப்பான் குன்றின் வகை''**[130]
என்று போற்றுகின்றார்.

**முருகன் அருள் புரிதல்**

உலகிற்கு அருள் செய்யும் பொருட்டு எழுந்தருளி, தனது பெரிய உருவத்தை உள்ளடக்கிக் கொண்டு தெய்வத் தன்மை பொருந்திய தனது இளமை அழகைக் காட்டி, வீடுபேற்றைப் பெற உதவுபவன் முருகன்.

" தெய்வம் சான்ற திறல் விளங்கு உருவின்,

வான்தோய் நிவப்பின் தான் வந்து எய்தி

அணங்குசால் உயர்நிலை தழீஇ, பண்டைத்தன்

மணம் கமழ் தெய்வத்து இளநலம் காட்டி,

அஞ்சல் ஓம்பு மதி, அறிவல் நின் வரவு என,

அன்புடைய நல்மொழி அளைஇ, விளிவு இன்று,

இருள்நிற முந்நீர் வளை இய உலகத்து

ஒரு நீ ஆகித் தோன்ற, விழுமிய

பெறல்அரும் பரிசில் நல்குமதி"[131]

என்று வேண்டுகின்றார் புலவர்.

**வரம் வேண்டுதல்**

பரிபாடல் முருகப்பெருமானிடம் வரம் வேண்டுவது பற்றிக் கூறுகின்றது. முருகப்பெருமானின் திருவடி நிழலை, அருள் குணம் நிறைந்த சான்றோர் எளிதில் அடைவர் என்றும் கடம்ப மாலையணிந்த முருகப் பெருமானின் திருவடிப் பேற்றை அடைய விரும்புபவர். இவ்வுலகில் இன்பம் தரும் பொன்னையும் பொருளையும் வெறுத்து, வீடு பேறளிக்கும் உண்மையான அன்பை இறைவனிடம் செலுத்துகின்றனர் என்றும் உரைத்து முருகன் அருள் பெறும் வழியைப் பரிபாடல் காட்டும்.

" அன்னோர் அல்லது இன்னோர்

சேர்வார் ஆதலின், யாஅம் இரப்பவை

பொருளும் பொன்னும் போகமும் அல்ல: நின்பால்

அருளும், அன்பும், அறனும், மூன்றும்

உருள் இணர்க் கடம்பின் ஒலி தாராயே!"[132]

முருகப் பெருமானைத் தொழுவோர் பலவாறு வேண்டினர். கனவில் வந்த காதலரை நனவில் அடைய வேண்டும் என்றும் வையை ஆற்றில் புதுநீர் அழகுடன் பெருக்கெடுக்க வேண்டும் என்றும் குழந்தைப் பேறு கிடைத்தவுடன் இன்ன இன்ன பொருட்களை நன்றிக் கடனாக செலுத்துவோம் என்றும் கணவன் தொழில் சிறப்பாக நடைபெற வேண்டும் என்றும் போர்த்தொழிலில் பகைவரை அழித்து வெற்றி வாகை சூட வேண்டும் என்றும் முருகனை வேண்டி நின்றமையைக் குறிப்பிடு கின்றது பரிபாடல்.

**''கனவில் தொட்டது கை பிழையாகாது**
**நனவில் சேஎப்ப நின்நளி புனல் வையை**
**வருபுனன் அணிக என வரம் கொள்வோரும்**
**'கரு வயிறு உறுக' எனக் கடம்படு வோரும்**
**'செய் பொருள் வாய்க்க' எனச் செவி சார்த்துவோரும்**
**'ஐ அமர் அடுக' என அருச்சிப்போரும்''**[133]

இறுதியில் வீடுபேற்றுக்கும் அறிவு முதிர்ந்த நிலையில் வருவர் என்பதை உணர்த்துகிறது. முருகனை வழிபடுவதன் பயன் தொன்மை மிக்க முருகன் புகழை எண்ணி முடியாவாறு மேலும் மேலும் வழிபடுவதாகவே இருக்க வேண்டும் என அடியார் விரும்புகின்றனராம். அவனைக் குறித்த வழிபாடுகளும் பெருக வேண்டும் என்பதே குறிக்கோள் என உணர வைக்கின்றார் புலவர்.

**'' அன்னை ஆகலின், அமர்ந்து யாம் நின்னை,**
**துள்ளித் துள்ளி, வழிபடுவதன் பயன்**
**இன்னும் இன்னும் அவை ஆகுக**
**தொன் முதிர் மரபின் நின் புகழினும் பலவே!''**[134]

முருகன்பால் அன்புடையவர்கள் தங்கள் சுற்றத்துடன் கூடி நின்று நின் திருவடிகளைத் தொழுது, வாழ்தலாகிய பெரிய பேற்றினை இன்று போல் எல்லாப் பிறவிகளிலும் அளிக்க வேண்டும் என்றும் வேண்டுகின்றனர்.

**'' நன்று அமர் ஆயமோடு ஒருங்கு, 'நின் அடி உறை**
**இன்று போல் இயைக' எனப் பரவுதும்**
**ஒன்றார்த் தேய்த்த செல்வ! நின் தொழுதே''**[135]

என்பதால் வீடுபேற்றினுக்குப் படிப்படியாக மக்களை இட்டுச் செல்லும் புலவரின் நோக்கம் புலப்படுகின்றது.

**குறமகளின் வெறியாட்டு**

திருமுருகாற்றுப்படையில் குறமகள் முருகனை வழிபட்ட முறை குறிப்பிடப்பட்டுள்ளது.

தெய்வமாடும் குறப்பெண்ணானவள், கோழிக் கொடியை அமைத்து, நெய்யையும் வெண்சிறு கடுகையும் அப்பி, தான் வழிபடுவதற்குரிய மூல மந்திரத்தை மறைவாக ஓதி நன் மலர்களைத் தூவி, குனிந்து கை கூப்பி வணங்கி, வெவ்வேறு நிறத்தையுடைய இரண்டு ஆடைகளை உடுத்தி, சிவந்த நூலைக் கையில் காப்பு கட்டி, வெண்பொரியைத் தூவி, வளமிக்கதும், பெரிய காலையுடையதுமாகிய கொழுத்த கிடாயினது குருதியோடு பிசைந்த தூய வெள்ளரிசியைச் சிறு படியாக இட்டுப் பலியிடத்தில் வைத்து, சிறிய பசுமஞ்சளோடு நரிய சந்தனம் முதலியவற்றைத் தெளித்துப் பெரிய, குளிர்ச்சி நிறைந்த செவ்வலரி மாலைகளையும் பிற மாலைகளையும் இணையொக்க அறுத்துப் பந்தலில் அசையும்படி தொங்கவிட்டுச் செறிந்த மலைப் பக்கத்து உள்ள நல்ல ஊர்களைப் 'பசியும் பிணியும் பகையும்

நீங்குக’ என்று வாழ்த்தி, நறிய மணப் பொருட்களைப் புகைத்து, அந்நிலத்திற்குரிய குறிஞ்சிப் பண்ணைப் பாடி, முழங்குகின்ற அருவியின் ஓசையுடன் பல கருவிகளும் முழங்க, சிவந்த நிலத்தை உடைய பல பூக்களையும் தூவி, காண்பவர்க்கு அச்சம் தோன்றும்படி குருதியொடு கலந்த தினையரிசியைப் பரப்பி முருகப் பெருமான் வரும்படி வாழ்த்தி வழிபட்டுள்ளதைக் காணலாம்.

‘‘ மாண் தலைக் கொடியொடு மண்ணி அமைவர
நெய்யோடு ஐயவி அப்பி, ஐது உரைத்து,
குடந்தம் பட்டு, கொழுமலர் சிதறி
முரண்கொள் உருவின் இரண்டு உடன் உடீஇ
செந்நூல் யாத்து, வெண் பொரி சிதறி
மதவலி நிலைஇய மாத்தாட் கொழுவிடைக்
குருதியொடு விரைஇய தூவெள் அரிசி
சில்பலிச் செய்து, பல்பிரப்பு இரீஇ
சிறுபசு மஞ்சளொடு நறுவிரை தெளித்து,
பெருந்தண் கணவீர நறுந்தண் மாலை
துணைஅற அறுத்துத் தூங்க நாற்றி
நளிமலைச் சிலம்பில் நல்நகர் வாழ்த்தி,
நறும்புகை எடுத்து, குறிஞ்சி பாடி,
இமிழ் இசை அருவியொடு இன் இயம் கறங்க
உருவப் பல்பூத் தூஉய் வெருவரக்
குருதிச் செந்தினை பரப்பி, குறமகள்
முருகு இயம் நிறுத்து, முரணினர் உட்க
முருகு ஆற்றுப் படுத்த உருகெழு வியல்நகர்’’[136]

## தொகுப்புரை

முருகன் எனும் சொற்பொருள், முருகனின் பிறப்பு, முருகன் தாய் தந்தை பற்றிய செய்தி, முருகன் சூரனையும் இந்திரனையும் வெல்லுதல், முருகன் வேலால் மாயை வடிவனான தாருகனை வேலால் பிளத்தல், வள்ளியைக் களவு மணமும் தெய்வயானையைக் கற்பு மணமும் கொள்ளல், வள்ளி தெய்வயானையர் தோழியர் போர் புரிதல், முருகன் குறிஞ்சி மருத முல்லை நிலங்களில் வழிபடப் பெறுதல், முருகனின் செந்நிறம், ஆறெழுத்து மந்திரச்சிறப்பு, முருகனின் பன்னிருகை, ஆறுமுகப் பெருமைகள், முருகன் பேரருட்சிறப்பு, முருகன் அடிமுடிச் சிறப்பு, முருகன் ஆடை பற்றிய செய்தி, முருகனின் மயில் ஊர்தி, முருகன் படைக்கருவிகள், முருகவழிபாட்டுச் சிறப்பு, முருகனிடம் வரம் வேண்டல், வெறியாட்டு போன்ற செய்திகள் இவ்வியலில் ஆய்வு செய்யப்பெற்றுள்ளன.

# அடிக்குறிப்புகள்

1. நற். 47 : 8 - 11.
2. ஐங். 243 : 1 - 2.
3. மேற்படி 242 : 1 - 2.
4. மேற்படி 245.
5. மதுரை. 611 : 615.
6. அகம். 156 : 13 - 17.
7. பரி. 8 : 12 - 16.
8. மேற்படி 9 : 1 - 7.
9. மேற்படி 5 : 26 - 54.
10. திருமுரு. 253 - 257.
11. பரி. 5 : 26 - 29.
12. மேற்படி 5 : 13.
13. திருமுரு. 256 - 257.
14. பரி. 8 : 126 - 128.
15. திருமுரு. 258.
16. பெரும். 457 - 459.
17. பரி. 14 : 25 -26.
18. மேற்படி 14 : 17 - 18.
19. மேற்படி 9 : 70 - 71.

20. புறம். 23 : 3 - 4.

21. பதிற்று. 11 : 3 - 6.

22. பரி. 5 : 1 - 7.

23. நா.கதிர்வேற்பிள்ளை, தமிழ் மொழியகராதி, ப.700.

24. திருமுரு. 57 - 61.

25. கலி. 93 : 25 - 26.

26. பரி. 18 : 1 - 4.

27. மேற்படி 19 : 56 - 57.

28. மேற்படி 19 : 1 - 7.

29. மேற்படி 9 : 50 - 56.

30. மேற்படி 9 : 58 - 66.

31. மேற்படி 19 : 36 - 37.

32. மேற்படி 19 : 101 - 104.

33. குறுந்தொகை கடவுள் வாழ்த்து 3 - 4.

34. பரி. 5 : 8 - 10.

35. மேற்படி 21 - 9.

36. தொல்காப்பியம் 951.

37. குறுந். 1.

38. அகம். 266 : 20 - 21.

39. பரி. 5 : 13.

40. மேற்படி 5 : 54.

41. மேற்படி 6 : 69.

42. மேற்படி 21 : 53.

43. குறிஞ்சி. பா. 51 : 53.

44. திருமுரு. 271.

45. புறம். 14 - 19.

46. மேற்படி 22 - 29.

47. மேற்படி 56 : 7 - 9.

48. மேற்படி 120 : 21.

49. மேற்படி 125 : 19 - 20.

50. மேற்படி 209 : 19.

51. பெரும். 457 - 458.

52. மலைபடு. 493.

53. திருமுரு. 183 - 189.

54. மேற்படி 160 - 165.

55. பரி. 8 : 83 - 87.

56. திருமுரு. 90 - 103.

57. திருமுருகு வெண்பா - 2.

58. நா.கதிர்வேற்பிள்ளை, தமிழ் மொழியகராதி, ப.852.

59. திருமுருகு வெண்பா - 9.

60. மேற்படி 10.

61. திருமுரு. 245 - 249.

62. பரி. 9 : 84 - 85.

63. மேற்படி 18 : 51 - 56.

64. மேற்படி 5 : 71 : 78.

65. திருமுரு. 109.

66. கலி. 105 : 17 - 18.

67. குறுந்தொகை கடவுள் வாழ்த்து, 1-2.

68. பரி. 19 : 97.

69. புறம். 56 : 8.

70. பரி. 8 : 67.

71. மேற்படி 17 : 48 - 49.

72. மேற்படி 18 : 26.

73. திருமுரு. 210 - 211.

74. பரி. 5 : 2.

75. மேற்படி 8 : 17 - 18.

76. மேற்படி 8 : 20.

77. மேற்படி 17 : 49.

78. மேற்படி 19 : 28.

79. மேற்படி 21 : 1 - 2.

80. திருமுரு. 81 - 82.

81. திருமுரு. 247.

82. பரி. 5 : 63 - 70.

83. அகம். 59 : 10.

84. கலி. 27 : 16.

85. குறிஞ்சி. பா. 52 - 57.

86. பரி. 19 : 36.

87. மேற்படி 8 : 66 - 67.

88. மேற்படி 21 : 66.

89. பெரும். 75 - 76.

90. ஐங். 259 : 1 - 4.

91. திருமுரு. 317.

92. மேற்படி 267.

93. மேற்படி 77.

94. மேற்படி 176.

95. மேற்படி 217.

96. கலி. 40 : 11

97. அகம். 156 : 13 - 16.

98. திருமுரு. 256 : 276.

99. மேற்படி 104 - 118.

100. மேற்படி 190 - 197.

101. மலைபடு. 318 - 322.

102. கலி. 39 : 26 - 29.

103. மேற்படி 46 : 16.

104. மேற்படி 43 : 4 - 5.

105. மேற்படி 52 : 9 - 10.

106. மேற்படி 49 : 16 - 17.

107. நற். 47 : 8.

108. மேற்படி 376 : 10.

109. மேற்படி 386 : 6.

110. புறம். 299 : 6.

111. திருமுரு. 289.

112. மேற்படி 66 - 67.

113. மேற்படி 119 - 125.

114. மேற்படி 175 - 176.

115. மேற்படி 126 - 137.

116. மேற்படி 177 - 189.

117. பரி. 8 : 1 - 11

118. மேற்படி 8 : 128 - 130.

119. மேற்படி 9 : 67 - 69.

120. மேற்படி 17 : 6 - 8.

121. மதுரை. 263 - 264

122. திருமுரு. 77.

123. பரி. 6 : 54 - 55.

124. மேற்படி 6 : 68 - 70.

125. மேற்படி 6 : 95.

126. பரிபாடல் திரட்டு 11.

127. திருமுரு. 198 - 217.

128. மேற்படி 296 - 317.

129. பரி. 14 : 19 - 24.

130. மேற்படி 19 : 66.

131. திருமுரு. 287 - 295.

132. மேற்படி 77 - 81.

133. பரி. 8 : 103 - 108.

134. மேற்படி 14 : 29 - 32.

135. மேற்படி 21 : 68 - 70.

136. திருமுரு. 227 - 244.

# இயல் - 4

## தோற்றம்சார் தொன்மங்கள்

தன் உரு உறழும் பாற்கடல் நாப்பண்
மின்அவிர் சுடர்மணி ஆயிரம் விரித்த
கவைநா அருந் தலைக் காண்பின் சேர்க்கைத்
துளவம் சூடிய அறிதுயி லோனும்

பரிபாடல் 13 : 26-29

# 4. தோற்றம்சார் தொன்மங்கள்

திருமால் (மாயோன்) வழிபாடு மிகத் தொன்மையானது. இக்கடவுளை வழிபட்டவர் பாகவதர் என அழைக்கப்படுவர். இவ்விந்திய வழிபாட்டு நெறிகள், பின்னாளில் வேத விஷ்ணு (வாசுதேவ) வழிபாட்டுடன் ஒன்றாகிப் போனதை மகாபாரதம், கீதை, புராணம் ஆகியவற்றால் அறியலாம்.

தெய்வங்களான நாராயணனும், வாசுதேவனும் பிற தெய்வங்களும் மக்களிடையே ஏற்றுக் கொள்ளப்பட்டன. விஷ்ணு வழிபாடும் மக்களிடையே பரவலானது. இவ்வாறு அவ்வக் காலகட்டங்களில் ஏற்பட்ட சமூக மாற்றத்திற்கு ஏற்ப, பிராமணீய நிலைநிறுத்துவதற்காக, எளிய மக்களிடையே, பிராமணீயரல்லாத கடவுள் வழிபாட்டு நெறிகள் விஷ்ணுவுடன் இணைக்கப்பட்டன. இவ்வாறு இணைத்துக் கொள்ளப்பட்ட கடவுளர், விஷ்ணுவின் அவதாரங்கள்' எனும் நிலையைப் பெற்றன.

இந்திய மரபில் ஏற்பட்ட, வைணவ சமய வளர்ச்சிப் போக்கில், உருவான திருமாலின் அவதாரக் கூறுகளைச் சங்க இலக்கியங்கள் தாங்கி நிற்கின்றன. வராகம், நரசிம்மம், வாமனம், கிருஷ்ணன், கூர்மம் ஆகிய அவதாரச் செய்திகள் சங்கப் பாடல்களில் இடம்பெற்றுள்ளதைக் காணலாம்.

திருமால், முல்லைத் திணை தெய்வமாக இருந்ததையும், திருமால் வழிபாடு தமிழகத்தில் செல்வாக்குப் பெற்ற வழிபாட்டாய்த் தொடர்ந்து இருந்து வந்ததையும் சங்க இலக்கியங்களின் வழி அறியலாம்.

திருமால் பாம்புப் படுக்கையில் துயில்வதைச் சங்கப் பாடல்கள் காட்டுகின்றன. 'பாம்பணைப் பள்ளி அமர்ந்தோன் (373) எனப் பெரும்

பாணாற்றுப்படை அடியால் அறிய முடிகிறது. திருமால் எழுந்தருளியுள்ள இடமான திருவெஃகா குறிப்பிடப்பட்டுள்ளது. திருவெஃகா காஞ்சிபுரத்தில் உள்ளது. தமிழகத்தில், காஞ்சிபுரம் திருமால் வழிபாட்டுத் தலமாகச் செல்வாக்குப் பெற்று நிலவி வந்ததை அறியலாம். இங்குத் திருமால் விஷ்ணுவின் கூறுகளைத் தாங்கிய தெய்வமாக விளங்கிய சூழல் காட்டப்பட்டுள்ளது.

முல்லைப்பாட்டில், திருமால் சங்கையும் சக்கரத்தையும் கையிலேந்திய நிலைமை குறிப்பிடப்பட்டுள்ளது. 'நேமி' திருமால் ஆயுதமாகக் கூறப் பட்டுள்ளது. இவ்வாறு மாயோன் விஷ்ணுவோடு இணைந்த நிலை தெளிவாக அறியலாம். இவ்வாறு இந்தியப் பண்பாட்டில் மிகுந்த செல்வாக்குப் பெற்றுத் திருமால் வழிபாடு, ஆரியமயமானது போய், அவதாரமயமானதைக் காணமுடிகிறது. இந்த நிலையைச் சங்கப் பாடல்கள் நமக்குத் தெளிவாக எடுத்துரைக்கின்றன.

அவதாரங்களைப் போலவே திருமகள் திருமாலின் மார்பிலே உறைவதான குறிப்பும் இடம்பெற்றுள்ளதைக் காணலாம்.

பரிபாடல், கலித்தொகை ஆகிய இரண்டிலும் திருமாலின் அவதாரச் செய்திகள் பேசப்பட்டுள்ளன. பரிபாடல், திருமால் பாடல்கள் அடங்கிய தொகுப்பாகும். இங்குதான் அவதாரச் செய்திகளும் இடம்பெற்றுள்ளன. சங்க இலக்கியத்தில் இடம்பெற்றுள்ள திருமாலின் அவதாரத் தொன்மங்கள் மற்றும் வேறுபிற குறிப்புகளைப் பற்றியும் ஆய்வதே இவ்வியலின் நோக்கமாகும்.

வராகம், நரசிம்மம், வாமனம், கிருஷ்ணன் முதலான அவதாரச் செய்திகள் எவையும் சங்க இலக்கியங்களில் கையாளப்படவில்லை

என்பதை அறியலாம். அவதார நிகழ்ச்சிகள் மட்டும் இலக்கியங்களில் குறிப்பிடப்பட்டுள்ளது அறியத்தக்கது.

அவதாரம் என்ற சொல் வழக்கு கி.பி.4-5 ஆம் நூற்றாண்டுகளில் தோன்றியிருக்க வேண்டும் என்பர். அவதாரம் என்ற சொல்லுக்குச் சென்னைப் பல்கலைக்கழக பேரகராதி, 'இறங்குகை, திவ்யப் பிறப்பு' எனும் பொருளைத் தருகின்றது. அவதரி என்னும் வினைச் சொல்லுக்குத் தெய்வாம்சமாகப் பிறத்தல், தங்குதல் எனும் பொருளை சென்னைப் பல்கலைக்கழகப் பேரகராதி குறிப்பிடுகிறது.

பரிபாடலில் அவதாரம் பற்றிய செய்திகள் மிகுதியாகவும், கலித்தொகை, பெரும்பாணாற்றுப்படை, அகநானூறு, புறநானூறு, நற்றிணை முதலான இலக்கியங்களில் ஓரளவும் இச்செய்திகள் இடம்பெற்றுள்ளன.

**வராகம்**

பரிபாடலில் வராக அவதாரம் பற்றிய செய்தி இடம்பெற்றுள்ளது. வராக அவதாரம் கேழல் வடிவு, களிறு என்னும் சொற்களால் வழங்கப் பட்டுள்ளது அறியத்தக்கது.

'' நெய்தலும் குவளையும், ஆம்பலும், சங்கமும்,
மைஇல் கமலமும் வெள்ளமும், நுதலிய
செய் குறி ஈட்டம் கழிப்பிய வழிமுறை
கேழல் திகழ்வரக் கோலமொடு பெயரிய
ஊழி ஒருவினை உணர்த்தலின், முதுமைக்கு
ஊழி யாவரும் உணரா
ஆழி முதல்வ! நிற் பேணுதும், தொழுது''[1]

என இப்பாடலில் திருமால் நீரினுள் மூழ்கிக் கிடந்த நிலவுலகத்தை, பன்றியாக உருக் கொண்டு (வராகம்) மேலே கொணர்ந்து உயிர்கள் தோன்றி வாழத் தகுதியாகச் செய்தான் என்ற செய்தி குறிப்பிடப் பட்டுள்ளது. திருமால் வராக அவதாரம் எடுத்து நிலவுலகத்தை நீரினின்று மீட்டுக் கொணர்ந்த செய்தி இடம்பெற்றுள்ளது.

''இரணியாக்ஷன் பூமியைச் சுருட்டிப் பாதாளத்திற்குச் செல்ல பிரமனிடம் முறையிட, பிரமதேவர் விஷ்ணு மூர்த்தியைத் துதிக்க, அப்பிரமதேவர் மூக்கிலிருந்து வராக உருக் கொண்டு வெளிப்பட்டு, அவனைக் கொன்று பூமியைக் கொம்பில் தாங்கி முன் போல் விரித்தவர்''[6] என அபிதான சிந்தாமணியில் வராக அவதாரச் செய்தி குறிப்பிடப் பட்டுள்ளது.

**'' தீ செங் கனலியும், கூற்றமும், ஞமனும்,**

**மாசு இல் ஆயிரம் கதிர் ஞாயிறும் , தொகூஉம்**

**ஊழி ஆழிக்கண், இருநிலம், உரு கெழு**

**கேழலாய் மருப்பின் உழுதோய்' எனவும்''[2]**

எனும் இப்பாடலில் ஊழிக் காலத்து முடிவில், ஏழுலகும் ஒன்று கூடி கடலினுள் முழுகிய பொழுது, நிலவுலகினைப் பன்றியின் கொம்பினால் பெயர்த்த செய்தி குறிப்பிடப்பட்டுள்ளது.

விண், மண், பாதலம் என்னும் மூவகைப்பட்ட உலகங்களுள் கீழ் உலகம் (பாதலம்) ஏழினையும் எஞ்சாது தன் திருவடி ஒன்றினால் திருமால் அளந்ததாகவும், கீழ் உலகம் ஏழினையும் 1. அதலம், 2. விதலம், 3.சுதலம், 4.தராதலம், 5.மகாதலம், 6.இரசாதலம், 7. பாதலம் ஊழிக் காலத்தின் முடிவில், தீயும், இயமனும் கூற்றமும், ஞாயிறுகளும் ஒன்று சேர்ந்து

அழிக்கும் என்றும் புட்கலம், சம்வர்த்தம், ஆவர்த்தம், சங்காரித்தம், துரோணர், காளமுகி, நீலவருணம் என்னும் ஏழு மேகங்களும் ஒன்று சேர்ந்து பொழிந்த மழையினால் கடலின் கண் முழுகிய பெரிய நிலப் பகுதியை, அச்சத்துடன் கூடிய பன்றியாகிக் கொம்பினால் குத்தி மேலே எடுத்து வந்தவன்'' எனவும் குறிப்பிடப்பட்டிருக்கக் காணலாம்.

**'' புருவத்துக் கரு வல் கந்தரத்தால்**
**தாங்கி, இவ் உலகம் தந்து அடிப்படுத்ததை நடுவண்**
**ஓங்கிய பலர் புகழ் குன்றினோடு ஒக்கும்''[3]**

என்னும் இப்பாடலிலும் திருமால் வராகவதாரம் எடுத்து, நிலத்தைத் தாங்கி மேலே கொணர்ந்த குறிப்பு இடம் பெற்றுள்ளது. நிலவுலகம் வெள்ளத்தால் மூழ்கிய பொழுது திருமால் பன்றியாகத் தோன்றி, கருமையும் வலிமையும் உடைய கழுத்தினால் இந்நிலவுலகினைத் தாங்கி, மேலே கொணர்ந்த செயல் உலகில் நடுவில் ஓங்கி உயர்ந்த பலராலும் போற்றப்படும் மேரு மலைக்கு உவமையாகக் கூறப்பட்டுள்ளது.

**'' நானிலம் துளக்கு அற முழு முதல் நாற்றிய**
**பொலம் புனை இதழ் அணி மணி மடற்பேர் அணி**
**இலங்கு ஒளி மருப்பின் களிறும் - ஆகி**
**மூஉரு ஆகிய தலைபிரி ஒருவனை''[4]**

என்னும் இப்பாடலில் உலக உயிர்கள் ஒடுக்கம் தீருமாறு கொம்புடைய ஆண் பன்றியாய்த் திருமால் உருக்கொண்ட செய்தி இடம்பெற்றுள்ளது. மேலும், இரணியாட்சகன் என்ற அரக்கன் பூமியைச் சுருட்டிக் கடலிற் கொண்டு மூழ்கடிக்க முனைந்தபோது திருமால் வராகம் உருக் கொண்டு ஒற்றைக் கொம்பினால் நெம்பிக் கொணர்ந்தார் என்று குறிப்பிடப் பட்டுள்ளது அறியத்தக்கது.

" வளர்திரை மண்ணிய கிளர் பொறி நாப்பண்

வை வால் மருப்பின் களிறு மணல் அயர்பு,

புள்ளி நிலனும் புரைபடல் அரிது என

உள்ளுநர் உரைப்போர் உரையொடு சிறந்தன்று"[5]

என இப்பாடலடிகளில் திருமால் திருமகளைத் தன் மார்பிலேயே இருக்கச் செய்து மணம் புரிந்து கொண்டிருப்பதால் நிலமகளையும் ஆதி வராகமாக்கி மணந்தான் என்று கூறுவோர் கூற்றுப் பொருந்தவில்லை என்பதை எடுத்துக்காட்டுகின்றது.

இச்சங்கப் பாடல்களின் வாயிலாக, திருமால் பன்றி உருக்கொண்டு நீரில் மூழ்கிய நிலத்தை மீட்ட செய்தியை அறியலாம். நான்காவது பரிபாடலில் வராகம் கழுத்தில் உலகை ஏந்தியது என்னும் கருத்தைக் காணலாம். 2, 3, 13 ஆகிய பரிபாடல்களில் பன்றி தன் கொம்புகளில் உலகை ஏந்திய செய்தி கூறப்பட்டுள்ளது.

**கூர்மாவதாரம் (பாற்கடல் கடைதல்)**

பரிபாடலில் பாற்கடல் கடைதல் பற்றிய செய்தி இடம்பெற்றுள்ளது.

" திகழ் ஒளி முந்நீர் கடைந்த அக்கால், வெற்புத்

திகழ்பு எழ வாங்கித் தம் சீர்ச் சிரத்து ஏற்றி,

மகர மறி கடல் வைத்து நிறுத்து

புகழ் சால் சிறப்பின் இருதிறத் தோர்க்கும்

அமுது கடைய, இருவயின் நாண் ஆகி

மிகாஅ இரு வடம் ஆழியான் வாங்க"[6]

என்னும் இப்பாடலில் மந்தர மலையை மத்தாக்கி வாசுகியைக் கயிறாக்கி பாற்கடலைக் கடைந்த செய்தி குறிப்பிடப்பட்டுள்ளது. வெண்ணிறம்

உடையது பாற்கடல் ஆதலின் திகழ் முந்நீர் எனப்பட்டது. அப்பாற் கடலைக் கடைந்த போது, கடலுள் இருந்த மேரு மலையினை, ஆமை உருக் கொண்டு திருமால் தனது அழகிய முதுகில் ஏற்றி வைத்து நிலைபெறச் செய்தான் என்பதை (கூர்மவதாரச் செய்தி) ''வெற்புத் திகழ்பு எழ வாங்கித் தம் சீர்ச் சிரத்து ஏற்றி, மகர மறிகடல் வைத்து நிறுத்து'' என்ற அடிகளால் அறியலாம். இங்கு ஆமை உருக் கொண்ட திருமாலின் முதுகினைச் சிரம் என்றது அறியத்தக்கது.

இவ்வாறு தேவர்களும், அசுரர்களும் அமுதம் வேண்டி பாற்கடல் கடைந்தபோது, மேரு மலையாகிய மத்தினில் ஆதிசேடனைக் கயிறாகக் கட்டி இழுத்தனர் என்றும், இரண்டு பக்கங்களிலும் தேவரும் அசுரரும், வடத்தினைப் பிடித்தது போக, எஞ்சிய வடத்தினைத் திருமால் தமக்கு அளவற்ற கைகளைத் தோற்றுவித்து இழுத்துக் கடைந்தனர் என்றும் கூறுவர். திருமால் ஆமை (கூர்மாவதாரம்) உருவெடுத்து மேரு மலையை முதுகில் ஏற்றி நிலைபெறச் செய்தது இங்கு அறியத்தக்கது.

**மோகினி வடிவு**

பரிபாடலில், திருமால் பெண் வடிவம் கொண்டு அசுரர்களைத் தன் அழகால் கவர்ந்தது பற்றிக் குறிப்பு இடம்பெற்றுள்ளதைக் காணலாம்.

**'' நகை அச்சாக நல் அமிர்து கலந்த**

**நடுவு நிலை திறம்பிய நயம் இல் ஒரு கை''**[7]

என்னும் இப்பாடலில், திருமால் மோகினி உருக் கொண்ட குறிப்பு இடம்பெற்றுள்ளது. திருமால் மோகினியாக உருவெடுத்தபோது, அவனது அழகிய அவ்வடிவைக் கண்டு அசுரர்கள் மகிழ்ந்ததாகவும். அமரர்களுக்கு

மட்டுமே திருமால் நல்ல அமிழ்தினைப் பகுத்து வழங்கினான் என்ற செய்தியையும் அறியலாம்.

இவ்வாறு அமிர்தம் பங்கிடுவதற்காகத் திருமால், மோகினியாக வடிவங் கொண்டு வந்தாராகவும், அவ்வடிவத்தைக் கண்ட அளவிலே, அவுணர் மயங்கி அமிழ்துண்ணலை மறந்து மகிழ்ச்சியுற்றனர் என்ற செய்தியையும் குறிப்பிடப்பட்டுள்ளது அறியத்தக்கது.

மேலும் அபிதானசிந்தாமணியில், "அமிர்து மதன காலத்தில் தேவாசுரர் இருவரும் அமிர்தம் கடைந்தனர். அசுரர் அமிர்தம் உண்ணில், தேவர்க்கு நீங்காத துன்பம் உண்டாம் என நினைத்த விஷ்ணுமூர்த்தி, அவர்களுக்கு அமிர்த விருப்பொழியத் தாம் மோகினி எனும் பெண்ணுருக் கொண்டு அமிர்தம் தேவர்க்குப் பங்கிடுகையில் அசுரர் இவ்வுருவத்தைக் கண்டு மயங்கியிருந்தனர்"[8] என அமிர்து வழங்கிய கதை குறிப்பிட்டுள்ளதை அறியலாம்.

**நரசிம்ம அவதாரம்**

நான்காம் பரிபாடலில் நரசிம்ம அவதாரம் பற்றிய செய்தி விரிவாகக் குறிப்பிட்டுள்ளதைக் காணலாம்.

**" செயிர்தீர் செங்கட் செல்வ! நிற்புகழ**
**புகைந்த நெஞ்சின், புலா்ந்த சாந்தின்**
**பிருங்கலாதன் பலபல பிணிபட**
**வலந்துழி, மலா்ந்த நோய் கூர் கூம்பிய நடுக்கத்து**
**அலர்ந்த புகழோன், தாதை ஆதலின்**
**இகழ்வோன், இகழா நெஞ்சினனாக, நீ இகழா**
**நன்றா நட்ட அவன் நன்மார்பு முயங்கி,**

**ஒன்றா நட்டவன் உறுவரை மார்பின்**

**படிமதம் சாம்ப ஒதுங்கி**

**இன்னல் இன்னரொடு, இடிமுரசு இயம்ப**

**வெடி படா ஒடிதூண் தடியொடு**

**தடி தடி பல பட - வகிர் வாய்த்த உகிரினை''**[9]

என்னும் இப்பாடலடிகளில் திருமால், இரண்யகசிபுவின் உடலை, நகத்தால் பிளந்த செய்தி கூறப்பட்டுள்ளது. அஃதாவது, பிரகலாதன் திருமாலைப் புகழ்ந்ததால் பொறுக்க முடியாத இரணியன், தன் நெஞ்சில் கொண்ட பொறாமையால் புகைந்து சினத்துடன் தன்மகன் என்றும் பாராமல் பிரகலாதனைத் துன்புறுத்தினான் என்றும், தன்னை இகழ்ந்து துன்புறுத்துவது தன் தந்தை என்பதால், நடுக்கமுற்ற பிரகலாதன் தாதையை இகழாமல், திருமாலை நெஞ்சத்தில் நினைத்து வருந்தி நின்றான் என்றும், தன் அன்பனின் வருத்தம் போக்க திருமால், தூணிலிருந்து வெளிப்பட்டு 'நரசிங்கமாகத்' தோன்றி, கூரிய நகங்களால் இரணியனைக் கிழித்துக் கொன்று பிரகலாதனுக்கு அருள் செய்தான் என்றும், மேற்கண்ட செய்யுளடிகள் குறிப்பிடுகின்றன. திருமாலின் பத்து அவதாரங்களுள் ஒன்று என்று கருதப்படும் நரசிம்மாவதாரம் பற்றிய செய்தி இடம் பெற்றுள்ளதைக் காணலாம்.

இப்பாடலில் பிரகலாதன் பெயர் குறிப்பிடப்பட்டுள்ளது. கசிபு, நரசிம்மன் எனும் பெயர்கள் குறிப்பிடப்படவில்லை. ''பிரகலாதன் இரணிய கசிபுவின் குமரன். இவன் இளமையில் ஆசாரிய புத்திரனாகிய சண்டனிடத்தில் கல்வி கற்கத் தந்தையால் ஏவப் பெற்று, ஆசாரியன் கற்பித்தவாறு ஓதாமல், அரிநாமம் ஓதினான். இதை உபாத்தியாயர்

அரசனுக்கு அறிவிக்கவும் அஞ்சாது மீண்டும் தந்தை எதிரிலும் அரி நாமம் ஓதினான். அரசன் குமரனிடத்தில் கோபித்து ஆயுதம் முதலியவைகளைப் பிரயோகித்தும், அக்னியில் தள்ளியும், நாகங்களை விட்டுக் கடிப்பித்தும், யானையை ஏவுவித்தும், கோபுரத்திலிருந்து தள்ளுவித்தும், கடலில் பாய்ச்சுவித்தும், விஷம் ஊட்டுவித்தும், சம்மட்டியால் அடிப்பித்தும், இம்சிக்கச் சிறிதும் அஞ்சாது இரணியகசிபின் எதிரில் இருந்து அரிநாமம் ஸ்மரித்தனன். அரசன் கோபித்து உன் தேவன் எங்கு இருக்கின்றனன் எனக் குமரன் எங்கும் உளன் என, எதிரிலிருந்து தூணில் இருக்கின்றனனோ எனக் கேட்டுக் குமரன் ஆம் என அரசன் அதை உதைக்கத் தூணில் இருந்து வெளிவந்த நரசிங்கத் திருவுருவை அவனுக்குக் காட்டித் தந்தையை உயிர் போக்குவித்தனன்''[10] என பிரகலாதன் கதை அபிதான சிந்தாமணியில் குறிப்பிடப்பட்டுள்ளது இங்கு அறியத்தக்கது. இதில் பிரகலாதன் தந்தை இரணியகசிபு எனவும் விளக்கமாகக் கூறப்பட்டுள்ளது.

**வாமன அவதாரம்**

கலித்தொகை, பரிபாடல், முல்லைப்பாட்டு, பெரும்பாணாற்றுப்படை ஆகியவற்றில் வாமன அவதாரம் பற்றிய குறிப்புகள் இடம்பெற்றுள்ளன.

**'' ஞாலம் மூன்று அடித் தாய முதல்வற்கு முது முறைப்**
**பால் அன்ன மேனியான் அணி பெற தைஇய**
**நீல நீர் உடை போல, தகை பெற்ற வெண் திரை''**[11]

இச்செய்யுளடிகளில் உலகம் மூன்றையும் திருமால் தன் திருவடியினால் அளந்தவன் எனும் செய்திக் குறிப்பு இடம்பெற்றுள்ளது.

'' கீழ் ஏழ் உலகமும் உற்ற அடியினை''[12]

'' திணி நிலம் கடந்தக்கால், திரிந்து அயர்ந்து அகன்று ஓடி
நின் அஞ்சிக் கடற் பாய்ந்த பிணி நெகிழ்வு அவிழ் தண் தார்
அன்னவர் பட, அல்லா அவுணர்க்கும் முதல்வன் நீ''[13]

என்றும் இப்பாடலடிகளில் கீழ் ஏழுலகங்களையும், இம்மண்ணுலகத்தையும் திருமால் திருவடியால் அளந்த பெருமை கண்டு அஞ்சி தேவர்களும் அசுரர்களும் கடலுள் ஓடி ஒளிந்து கொண்டனர் எனக் கூறப்பட்டுள்ளதைக் காணலாம்.

'' நீர் செல், நிமிர்ந்த மாஅல் போல,
பாடு இமிழ் பனிக்கடல் பருகி, வலன் ஏர்பு,
கோடு கொண்டு எழுந்த கொடுஞ் செலவு எழிலி''[14]

எனும் இப்பாடலில் திருமால், திரிவிக்கிரமனாய் உயர்ந்த செய்தி குறிப்பிடப்பட்டுள்ளது. மாவலி என்னும் அரசனை அடக்குவதற்காகத் திருமால், வாமனனாக அவதாரம் எடுத்து அவனிடம் சென்று, மூன்றடி நிலம் கேட்டார். அவன் அதை அவர் கையில் நீர் வார்த்து அளிக்க முற்பட்டபோது திருமால் விண்ணும் மண்ணும் அளாவும்படி, நெடுமாலாக உயர்ந்துள்ளது நிலவுலகை ஓரடியாலும், விண்ணுலகை மற்றோர் அடியாலும் அளந்து, மூன்றாவது அடியினை மாவலியின் தலை மீது வைத்து அவனைப் பாதாளத்தில் அழுத்திய செய்தி இடம்பெற்றிருக்கக் காணலாம். மேகம் மழை பொழிய, உயர்ந்து எழுந்த தன்மை திருமாலின் நெடிய உயர்ந்த தோற்றத்திற்கு உவமையாகக் கூறப்பட்டுள்ளது அறியத்தக்கது. மேலும்,

" இரு நிலம் கடந்த திருமறு மார்பின்

முந்நீர் வண்ணன் பிறங்கடை அந்நீர்த்

திரைதரு மரபின் உரவோன் உம்பல்"[15]

என்னும் பெரும்பாணாற்றுப்படைச் செய்யுளடிகள், திருமால் நிலத்தை அளந்த செய்தியைக் குறிப்பிடுகின்றன. சங்க கால மன்னர்கள் தெய்வங்களோடு ஒப்பிட்டுக் கூறப்பட்டுள்ளனர் என்பதைத் தொண்டைமான் இளந்திரையன் திருமால் மரபில் வந்தவன் எனப் புகழப்பட்டதால் அறியலாம்.

சங்க இலக்கியப் பாடல்களில், திருமால், உலகம் முழுவதையும் மூன்றடியால் அளத்தல், தேவர்களும் அசுரர்களும் ஒளிந்து கொள்ளுதல், திரிவிக்கிரமனாய் உயர்தல் ஆகிய குறிப்புகள் இடம்பெற்றுள்ளன. ஆனால், வாமனன், திரிவிக்கிரமன், மாபலி எனும் பெயர்கள் இடம் பெறவில்லை.

**பரசுராம அவதாரம்**

நெய்தல் திணையில் அமைந்த அகநானூற்றுப் பாடலில் பரசுராம அவதாரம் பற்றிய செய்தி இடம்பெற்றிருப்பதைக் காணலாம்.

" மன் மருங்கு அறுத்த மழுவாள் நெடியோன்

முன் முயன்று அரிதினின் முடித்த வேள்வி"[16]

என்னும் செய்யுளடிகள் வாயிலாகப் பரசுராமர், அரசர் குலத்தை அடியோடு அழித்த செய்தியை அறியலாம். இப்பாடலில் நெடியோன் பரசுராமன் என்றும், பரசுராமர் நெடுமாலின் அவதாரம் என்று குறிப்பிட்டிருக்கக் காணலாம்.

**பலராமன்**

நற்றிணை, புறநானூறு, கலித்தொகை, பரிபாடல் முதலான நூல்களில் பலராமன் பற்றிய செய்திகள் குறிப்பிடப்பட்டுள்ளன.

**'' வாலியோன் அன்ன வயங்கு வெள் அருவி''**[17]

என்னும் பாடல் வரி மாயோனுக்கு முன் பிறந்த வெண்மை நிறத்தவன் பலராமன் என்று குறிப்பிடுகிறது. இதில் பலராமனின் வெண்மை நிறத்தை அருவிகளுக்கு ஒப்பிட்டுக் கூறியிருக்கக் காணலாம்.

**''வலி ஒத்தீயே வாலியோனை''**[18]

என்னும் இப்பாடலில் பலராமன் ஏரை ஆயுதமாகவும், பனையைக் கொடியாகவும் கொண்டவர் என்றும், வெண்மை நிறமுடையவர் என்றும் கூறப்பட்டுள்ளது.

**'' ஒரு குழை ஒருவன் போல், இணர் சேர்ந்த மரா அமும்''**[19]

**'' ஒரு குழையவன் மார்பில் ஒண்தார் போல் ஒளி மிகப்**

**பொரு அறப் பொருந்திய செம் மறு வெள்ளையும்''**[20]

என பாடலடிகளில் ஒரு குழையவன் - பலராமன் என்றும், வெண்நிறம் கொண்டவன் என்றும் குறிப்பிடப்பட்டுள்ளன.

**'' ...................மையில் வால் வளை மேனி''**[21]

என்னும் செய்யுள் வரி வெண்சங்கு போன்ற திருமேனி, கலப்பைப் படை, ஒற்றைக் காதணி ஆகியவற்றைக் கொண்டவன் பலராமன் எனக் குறிப்பிடுகிறது.

**''ஒள் ஒளியவை, ஒரு குழையவை''**[22]

என்னும் பரிபாடலடியும்,

**'' கொடுமிடல் நாஞ்சிலான் தார் போல், மராத்து**

**நெடுமிசைச் சூழும் மயில் ஆலும் சீர்''[23]**

என்னும் செய்யுளடிகளும் பலராமன் பற்றிப் பேசுகின்றன. மேலும், ராமன் துளசிமாலை அணிந்தவன் என்றும் குறிப்பிடுகின்றன. இவை தவிர,

**'' திறன் இகந்து வரூஉம் அவர் உயிர் அகற்றும்**

**விறல் மிகு வலி ஒலி பொலிபு அகழ் புழுதியின்**

**நிறன் உழும் வளை வாய் நாஞ்சிலோனும்''[24]**

என்னும் இப்பாடல் கலப்பை எனும் போர்க் கருவியை ஏந்தியவன் பலராமன் என்ற குறிப்பு இடம்பெற்றுள்ளது.

கலித்தொகைப் பாடலில் பனைக் கொடியினை உடைய வெண்மை நிறத்தவன் பலராமன் என்று குறிப்பிடப்பட்டுள்ளது.

**'' ஞாலம் மூன்று அடித் தாய முதல்வற்கு முது முறைப்**

**பால் அன்ன மேனியான் அணி பெறத் தைஇய**

**நீல நீர் உடை போல, தகை பெற்ற வெண் திரை''[25]**

என்று திருமாலுக்கு மூத்தவன் பலராமன் என்றும் கூறுகிறது. இச்செய்தியை,

**''பால் நிற உருவின் பனைக் கொடியோனும்''[26]**

என்று புறநானூறும் குறிப்பிடுகிறது. இவ்வாறு பலராமனைக் குறித்த பல செய்திகள் இடம்பெற்றிருக்கக் காணலாம்.

**கிருஷ்ணன்**

கிரேதாயுகம், திரேதாயுகம், துவாபரயுகம், கலியுகம் என்ற நான்கு யுகங்களுள் துவாபர யுகத்தைக் கண்ணன் (கிருஷ்ணன்) பிறந்த யுகமாக

ஆன்மீகப் பெரியோர் கூறுகின்றனர். அகநானூற்றுப் பாடலில் கிருஷ்ண அவதாரக் கூறுகள் பற்றிய இடம்பெற்றுள்ளதைக் காணலாம்.

**" வருதினை, வாழியர், நீயே! - வடா அது**
**வண் புனல் தொழுநை வார்மணல் அகன் துறை**
**அண்டர் மகளிர் தண் தழை உடீஇயர்**
**மரம் செல மிதித்த மா அல் போல,**
**புன் தலை மடப்பிடி உணீ இயர், அம்குழை**
**நெடு நிலை யாஅம் ஒற்றி, நனை கவுள்**
**படி ஞிமிறு கடியும் களிறே - தோழி!"[27]**

என இப்பாடலில், ஆயர் மகளிர் தழைகளை ஆடையாக உடுத்தி கொள்ளுதற்காகத் திருமால் மரக்கிளையைக் காலால் மிதித்து வளைத்த செய்தி குறிப்பிடுவதோடு, ஆயர் மகளிர் யமுனையாற்றில் நீராடும்போது அவர்கள் கரையில் வைத்த ஆடைகளைக் கண்ணபிரான் எடுத்துக் கொண்டு, அருகிலிருந்த குருந்த மரத்தின் மீது ஏறியிருந்தார்; அவ்வளவில் பலராமன் அங்கு வர, அம்மகளிர் ஒரு காலத்தே ஒரு சேர மறைவதற்கு வேறு வழியின்மையால், தாம் ஏறி நின்ற குருந்த மரத்துக் கிளையினை மிதித்து வளைத்துத் தாழ்த்திக் கொடுத்தார் என்றும் கூறக் காணலாம். "வடாஅது வண்புனல் தொழுநை வார் மணல் அகன் துறை" என யமுனை ஆற்றங்கரையில் இந்நிகழ்வு நடைபெற்றதாகக் கூறி யிருப்பதை அறிய முடிகின்றது. இது வடநாட்டில் நடந்த கதை என்பது தெளிவாகத் தெரிகிறது.

கிருஷ்ணன் கேசி எனும் அரக்கனைக் கொன்ற வீரச் செயல் பரிபாடல் மற்றும் கலித்தொகையில் குறிப்பிடப்பட்டுள்ளது.

“ கூந்தல் என்னும் பெயரோடு கூந்தல்
எரிசினம் கொன்றோய்! நின் புகழ் உருவின, கை;[28]

“ காயாம்பூங் கண்ணிப் பொதுவன் தகை கண்டை
மேவார் விடுத்தந்த கூந்தற் குதிரையை
வாய்பகுத்து இட்டு புடைத்த ஞான்று இன்னன் கொல்
மாயோன் என்று உட்கிற்று என் நெஞ்சு”[29]

என இச்செய்யுளடிகளின் மூலம் கம்சன் ஏவுதலால் கேசி எனும் அரசன் குதிரை வடிவமாய் வந்து போரிட, கண்ணன் அக்குதிரையின் வாயைப் பிளந்து கொன்ற செய்தி கூறப்பட்டுள்ளது.

முல்லை நிலப் பகுதிக்குரிய இறைவனாகத் திருமால் குறிக்கப் பெறுகிறார். தொல்காப்பியர் மாயோன் மேய காடுறை உலகம்” என்று குறிப்பிட்டு, மாயோனே திருமால் என அறியச் செய்கிறது. சங்க இலக்கியங்கள் கிருஷ்ணனின் கூறுகள் மாயோனுடன் இணைத்துக் கூறப்பட்டுள்ளன.

**மல்லரை வெல்லுதல்**

கலித்தொகை பாடலில் கண்ணன் பற்றிய செய்தியைக் குறிப்பிட்டுள்ளதைக் காணலாம்.

“ மல்லரை மறம் சாய்த்த மலர்த் தண்தார் அகலத்தோன்
ஒல்லாதார் உடன்று ஓட, உகுத்து, உடன் எறிதலின்
கொல் யானை அணிநுதல் அழுத்திய ஆழிபோல்
கல் சார்பு ஞாயிறு கதிர் வாங்கி மறைதலின்”[30]

என்னும் இப்பாடலில் மாயவன், கம்சன் ஏவலால் தன்னைக் கொல்ல வந்த மல்லரை அழித்தான் எனும் கருத்து குறிப்பிடப்பட்டுள்ளது.

**மழை நீரை வற்றச் செய்தல்**

பரிபாடலில் திருமால் அன்னமாய் உருவெடுத்த செய்தி குறிப்பிட்டுள்ளது அறியத்தக்கது.

**'' மா விசும்பு ஒழுகு புனல் வறள அன்னச்**

**சேவலாய்ச் சிறகர்ப் புலர்த்தியோய் எனவும்''**[31]

என இப்பாடலில் திருமால் அன்னமாக வடிவெடுத்த செய்தி குறிப்பிடப் பட்டுள்ளது. ஊழிக்கால முடிவில் ஏழு மேகமும் ஒன்று கூடி இடையறாது மழை பெய்து, நிலத்தை முழுகச் செய்யும்பொழுது மழையால் மீண்டும் நிலம் முழுகாதவாறு காப்பதற்காக இறைவன் அன்னமாய் உருவெடுத்து அந்நீரைச் சிறகால் புலரச் செய்தான் என திருமால் அன்ன வடிவம் எடுத்ததற்கான காரணத்தை விளக்கியிருப்பது அறியத்தக்கது.

**திருமால் ஞாயிற்றை மீட்டல்**

புறநானூற்றுப் பாடலில், ஞாயிற்றைத் திருமால் மீட்டுக் கொணர்ந்த செய்தி இடம்பெற்றுள்ளதை அறியலாம்.

**'' அணங்குடை அவுணர் கணம் கொண்டு ஒளிந்தென**

**சேண் விளங்கு சிறப்பின் ஞாயிறு காணாது,**

**இருள் கண் கெடுத்த பருதி ஞாலத்து**

**இடும்பை கொள் பருவரல் தீர, கடுந் திறல்**

**அஞ்சன உருவன் தந்து நிறுத்தாங்கு''**[32]

என்னும் இப்பாடலில், அசுரர்களால் மறைக்கப்பட்ட சூரியனைத் திருமால் மீட்ட செய்தி குறிப்பிடப்பட்டுள்ளது. ''அவுணர் கணங் கொண்டு ஒளிந்தென... ஞாயிறு காணா ..... பருவரல் தீர..... அஞ்சன உருவன் தந்து

நிறுத்தாங்கு'' என்பது தேவர்களும் அசுரர்களும் போர் செய்யும் போது, பகலும் இரவும் போல இயங்கித் தாம் போர் செய்தற் பொருட்டு அசுரர் ஞாயிற்றை மறைத்தார்கள்; உலகம் அதனால் உண்டாகிய வருத்தம் தீரத் திருமால் அஞ்ஞாயிற்றை மீண்டும் கொண்டு வந்தார் என்பதொரு புராணக் கதையாகும். மலையமான் சோழிய வேனாதி திருக்கண்ணனுக்குத் திருமாலை உவமையாகக் கூறியிருப்பதைக் காணலாம்.

**துவரகாபதி**

'' ........வடபாடல் முனிவன் தடவினுள் தோன்றி

செம்பு புனைந்து இயற்றிய சேண் நெடும் புரிசை,

உவரா ஈகை, துவரை ஆண்ட''[33]

என்னும் பாடலில் கண்ணன் துவரகாபதி எனும் நாட்டை ஆண்டது குறிப்பிடப்பட்டுள்ளது. வடப்பக்கத்து முனிவனுடைய ஓமகுண்டத்தில் தோன்றிச் துவரகாபதி என்னும் நாட்டை ஆண்ட கொடையினை உடையவன் என்று கூறப்பட்டுள்ளது. திருமாலுடன் இளங்கோவேளை ஒப்பிட்டு விளக்கியுள்ளதைக் காணலாம்.

**தாயின் துயர் துடைத்த கருடன்**

பரிபாடலில், வினதையின் துன்பத்தை நீக்கிய கருடன் பற்றிய புராணச் செய்தியைக் குறிப்பிட்டுள்ளதை அறியலாம்.

''ஏள், வயங்கு பூண் அமரரை வௌவிய அமிழ்தின்,

பயந்தோள் - இடுக்கண் களைந்த புள்ளினை;

பயந்தோள் இடுக்கண் களைந்த புள்ளின்

நிவந்து ஓங்கு உயிர் கொடிச் சேவலோய்! நின்''[34]

இப்பாடலின் மூலம் திருமால் வினதையின் துயர் தீர்த்து, கருடனை ஊர்தியாகக் கொண்டார் என்ற செய்தியை அறியலாம். ''இந்திரனுடைய குதிரையின் வால் தூய வெண்மை நிறமுடையதென்று வினதை கூறினாள். அதனைக் கேட்ட கத்துரு என்பவன் அக்குதிரையின் வால் கரியது என்றாள் வினதை. கத்துரு தன் மக்களால் அக்குதிரையின் வால் கரியதாகத் தோன்றுமாறு சூழ்ச்சி செய்து, வினதையை அழைத்துக் காட்ட, வினதை தன் தோல்வியை ஒப்புக் கொண்டு கத்துருவுக்கு அடிமையானாள். தேவாமிழ்தத்தைக் கவர்ந்து தனக்குத் தந்தால் வினதையை விடுதலை செய்வதாகக் கத்துரு கூறினாள். இச்செய்தியைத் தன் தாயின் வழி அறிந்த கருடன் அமிழ்தத்திற்குக் காவலாக இருந்த தேவர்களை விரட்டி விட்டு, அவ்வமிழ்தத்தினைக் கொண்டு வந்து கத்துருவினிடம் தந்து தன் தாயின் அடிமைத் தளையினையறுத்து அவளை மீட்டான்'' என இச்செய்யுளில் வினதையின் வாழ்க்கை பற்றி கூறப்பட்டுள்ளதை அறிய முடிகிறது.

**கருடன் செருக்கை அடக்குதல்**

> **'' திணி நிலம் கடந்தக்கால், திரிந்து அயர்ந்து அகன்று ஓடி,**
> **நின் அஞ்சிக் கடற் பாய்ந்த பிணி நெகிழ்வு அவிழ் தண்தார்**
> **அன்னவர் பட அல்லா அவுணர்க்கும் முதல்வன் நீ''**[35]

என்னும் இப்பாடல் திருமால், கருடச் சேவலின் செருக்கினை அழித்த செய்தி குறிப்பிடப்பட்டுள்ளது. திருமாலின் ஊர்தியாகிய கருடச் சேவல், ஆயிரம் தலைகளுடன் நிலவுலகைத் தாங்கும் ஆற்றலுடைய ஆதிசேடன் என்னும் பாம்பினைத் தன் வாயில் கவ்விக் கொள்ளும் பேராற்றலுடையது. அக்கருடன், திருமால் அசுரரை வென்றபோது அவ்வெற்றி திருமாலுடைய தன்று; அவனைத் தாங்கிச் செல்லும் தன்னாலானது என்று தன்னைப்

புகழ்ந்து, கர்வத்தில் நின்றபோது, கருடனின் செருக்கினை அழிப்பதற்காக, நீ என் உடல் முழுதும் தாங்க வேண்டாம்; ஒரு கையில் சிறுவிரல் துணையளவு தாங்கினால் நீ கூறியவாறே ஆகும் என்று கூறி விரலை வைக்க, அதனைத் தாங்க முடியாது பாதாளத்து வீழ்ந்து அலறி ஓலமிட்டு நெடுங்காலம் கிடந்து துதித்தான் என்று கருடன் செருக்கொழித்த குறிப்பு இடம்பெற்றுள்ளதைக் காண முடிகிறது.

திருமால் பாம்புப் படுக்கையில் துயில்பவர் என்னும் செய்தி சங்க இலக்கியத்தில் கூறப்பட்டுள்ளது. பெரும்பாணாற்றுப்படையில் திருவெஃகாவின் சிறப்பினைக் குறிப்பிடும்பொழுது திருமால் பாம்பணைப் பள்ளி அமர்ந்தோன்'' (பெரும் 373) எனக் குறிப்பிட்டுள்ளதை அறியலாம்.

**'' தன் உரு உறழும் பாற்கடல் நாப்பண்,**
**மின் அவிர் சுடர் மணி ஆயிரம் விரித்த**
**கவை நா அருந் தலைக் காண்பின் சேக்கைத்**
**துளவம் சூடிய அறிதுயிலோனும்''[36]**

என்னும் இப்பாடல் திருமால் ஆயிரம் தலை கொண்ட ஆதிசேடனாகிய படுக்கையில், பாயற் பள்ளியில் யோக நித்திரை கொள்பவர் என்பதை விரிவாகக் கூறுகிறது. கலித்தொகை 105ஆவது பாடலும் கடலில் பாம்பணையில் திருமால் இருப்பதைப் பற்றிக் குறிப்பிடுகின்றது.

பரிபாடலில் வரும் ''அரா அணர் கயந்தலைத் தம்முன்'' (15:19) எனும் வரிகளுக்கு ''நிமிர்ந்தெழுந்த மெல்லிய ஆயிரம் தலைகளைக் கொண்ட ஆதிசேடனின் அவதாரமாகிய பலராமனுடைய'' என்ற பொருளைக் காணலாம். இங்கு, பலராமன் ஆதிசேடனாய் உருவெடுத்த செய்தி குறிப்பிடப்பட்டுள்ளது.

மேலும், பரிபாடலில் ''ஆயிர அணர் தலை அரவு வாய்க் கொண்ட'' *(3:59)* என ஆதிசேடன் ஆயிரம் தலை கொண்டது என்ற செய்தி குறிப்பிடப்பட்டுள்ளது.

**'' மணி புரை மா மலை ஞாறிய ஞாலம்**

**அணி போல் பொறுத்தாரும் தாஅம்''**[37]

என்னும் பாடலடிகள், ஆதிசேடன் விஷ்ணுவின் அவதாரமான பின்னர், ஆதிசேடனின் செயல் திருமால் செயலாகவே கருதப்பட்டதைக் குறிப்பிடுகின்றன.

மேலும், திருமாலின் செல்வாக்கு எத்தகையது என்பது பற்றி பரிபாடல் விரிவாக விளக்குகிறது. உலகப் படைப்பு என்பது திருமாலுக்கு உரியது எனக் குறிப்பிடப்பட்டுள்ளது.

**'' தீ வளி விசும்பு நிலன் நீர் ஐந்தும்**

**ஞாயிறும், திங்களும், அறனும், ஐவரும்**

**திதியின் சிறாரும், விதியின் மக்களும்**

**மாசுஇல் எண்மரும், பதினொரு கபிலரும்**

**தா மா இருவரும், தருமனும், மடங்கலும்**

**மூஏழ் உலகமும், உலகினுள் மன்பதும்**

**மாயோய்! நின்வயின் பரந்தலை உரைத்தோம்''**[38]

என ஐம்பூதங்கள், கதிரவன், வேள்வி முதல்வனாகிய இயமன், செவ்வாய், புதன், வியாழன், வெள்ளி, சனி எனும் ஐந்து கோள்கள், திதி என்பவளின் பிள்ளைகளாகிய அரக்கர்கள், ஆதித்தர் பன்னிருவர், வசுக்கள் எண்மர், உருத்திரர் பன்னிருவர், அச்சுவனித் தேவர் இருவர், கூற்றுவன், இருபத்தோர் உலகங்கள், அவ்வுலகில் வாழும் உயிர்கள் அனைத்தையும்

தோற்றுவித்தவன் திருமால் என்று புகழப்பட்டுள்ளான். உலகப் பொருட்கள் அனைத்தையும் திருமாலிடம் இருந்து தோன்றியதாய்க் கூறியுள்ளதைக் காண முடிகிறது.

பரிபாடலில் வரும் ‘‘மண்ணுயிர் முதல்வனை ஆதலின்’’ *(1:56)* எனும் இவ்வரி நிலைபெற்ற உயிர்களுக்கு எல்லாம் தலைவனாகத் திருமால் விளங்குகின்றான் என்று குறிப்பிடுகிறது. திருமாலை வேத முதல்வன் என்று பாரதம் பாடிய பெருந்தேவனார் சுட்டுகிறார். மேலும் பரிபாடல், ‘‘மூஉரு ஆகிய தலைபிரி ஒருவனை’’ *(3:37)* என்னும் இவ்வடிகளின் வாயிலாக நான்முகன், சிவன், விஷ்ணு எனும் மூன்று முழுமுதற் கடவுளாக நிற்கும் ஒருவன் எனக் குறிப்பிடுகிறது.

**‘‘ தாமரைப் பூவினுட் பிறந்தோனும், தாதையும்**
**நீ என மொழியுமால், அந்தணர் அருமறை’’**[39]

என்னும் இப்பாடலில் வேதங்கள், திருமால் பிரம்மனாகவும், பிரம்மனின் தந்தையாகவும் உள்ளான் எனச் சிறப்பித்துக் கூறியுள்ளதைக் காணலாம்.

**அவுணர்களை வெல்லுதல்**

திருமால் அவுணர்களை வென்ற செய்தியை மதுரைக்காஞ்சியில் இடம்பெற்றுள்ளதைக் காணலாம்.

**‘‘ கணம் கொள் அவுணர்க் கடந்த பொலந்தார்**
**மாயோன் மேய ஓண நல் நாள்’’**[40]

என்னும் இப்பாடலில் இரணியன், இராவணன், நரகன் முதலான அவுணர்களை வென்று, அதன் அடையாளமாகப் பொன்னால் செய்த

வெற்றி மாலையை அணிந்த கரிய நிறம் கொண்ட திருமால் பிறந்த ஓண நாள் எனக் குறிப்பிடப்பட்டுள்ளது அறியத்தக்கது.

**அன்பர் வேண்டுகோள்**

பரிபாடலில் திருமாலின் சிறப்புக்கள் மிக விரிவாகக் குறிப்பிடப்பட்டுள்ளது.

**'' காமரு சுற்றமொடு ஒருங்கு நின் அடியுறை**
**யாம் இயைந்து ஒன்றுபு வைகலும் பொலிக! என**
**ஏமுறு நெஞ்சத்தேம் பரவுதும்**
**வாய் மொழிப் புலவ! நின் தாள் நிழல் தொழுத''**[41]

எனும் இப்பாடலில் இறைவனது மெய்ப்புகழைப் பாடுவதில் இன்புற்று 'ஏம் உறு நெஞ்சம்' என்றும், திருமால் வேதங்கள் அருளிச் சிறப்பித்தவ னாதலின் 'வாய்மொழிப் புலவ' என்று குறிப்பிடப்பட்டுள்ளது. மேலும்,

**'' கடும்பொடும் கடும் பொடும் பரவுதும்**
**கொடும்பாடு அறியற்க, எம் அறிவு! எனவே''**[42]

என்னும் பாடலடிகளின் வாயிலாக, எமக்கு மெய்பொருளை உணரும் அறிவினை வழங்க வேண்டும் என்று அன்பர்கள் சுற்றத்தாரோடு கூடி, வேண்டுவதாகவும்,

**'' அன்னை என நினைஇ, நின் அடி தொழு தெனம்**
**பல் மாண் அடுக்க இறைஞ்சினம் வாழ்த்தினெம்**
**முன்னும் பின்னும் யாம் செய்தவப் பயத்தால்**
**இன்னும் இன்னும் எம் காமம் இதுவே''**[43]

என்னும் இவ்வடிகளின் வாயிலாக, அன்னை என்பது ஐம்புலன்கள், பொறிகள், ஐம்பூதங்களும் ஆகிய எல்லாமாகிய தன்மையைத் தொழுதமை எம் தவப்பேறு எனவும் கூறுவதாக அமையக் காணலாம். இவை மட்டுமின்றி,

**'' நல் அடி ஏத்தி நிற் பரவுதும்**

**எல்லேம் பிரியற்க எம் சுற்றமொடு ஒருங்கே''**[44]

என்னும் இப்பாடல் அன்பர்கள் திருமாலின் அடியவராகிய ஆதிசேடனாரை வணங்கிப் பின்னர் திருமாலை வணங்கினர் என்று குறிப்பிடக் காணலாம்.

பொதுவாக, கூத்து என்னும் கலை சிவனுக்கு உரியது என்று கருதுவர். அதனாலே அவர், 'கூத்தன்' என்றும் அழைக்கப்படுகிறார். ஆனால், திருமாலுக்கும் அக்கூத்துக் கலை உரியது என்பது பரிபாடல் வழி அறிய முடிகிறது. அஃதாவது,

**''இட வலி! குட வலி! கோவல! காவல!''**[45]

என்னும் இப்பாடலில் ஆயர்பாடியில் திருமால் கண்ணனாக அவதாரம் மேற்கொண்டபொழுது குடக்கூத்து ஆடிய செய்தி குறிப்பிடப்பட்டுள்ளது. ஆயர்பாடியில் ஆய்ச்சியரோடு குரவைக் கூத்தாடும் போது அவர்களுக்கு இடமும் வலமும் ஆகியவன் திருமால் என்ற பொருளில் 'இடவல' என்றார். குட என்பது கூத்தாடுவதற்குரிய குடத்தையுடைய என்பதைக் குறிக்கும். குடக்கூத்து என்பது திருமால் ஆடிய கூத்துக்களுள் ஒன்றாகும். குடக்கூத்து ஐந்து உறுப்புக்களையுடையது என்பதும் அறிய இயலும். இதனைக் கடுவன் இளவெயினனார் பரிபாடலில் குறிப்பிட்டிருக்கக் காணலாம்.

## ஆல் இலையில் அமருங் கதை

"ஆல் அமர் கடவுள் அன்ன நின் செல்வம்"[46]

என்றும் திருமால் சிறு குழந்தையாக ஆல் இலையில் உருவெடுத்த செய்தியைக் காணலாம். மேலும் இச்செய்தியை, "நான்முகன் முதலிய எல்லாத் தேவர்களும் அழிந்தொழிகின்ற ஊழிக் காலத்தில், திருமாலானவர் அண்டங்களை எல்லாம் தன் வயிற்றில் வைத்து அடக்கிக் கொண்டு சிறு குழந்தையின் உருவத்தை எடுப்பார். ஆதிசேடனது கூறான ஆலிலையின் மீது பள்ளி கொண்டு அறிதுயில் அமர்ந்து அருளுவார். மறுபடைப்பு நிகழும் காலத்தில் எல்லாவற்றையும் வெளிப்படுத்துவதோடு, தாமும் திருப்பாற்கடலை அடைவர். ஆதிசேடனும் அழிந்தொழிகின்றபடியால், ஆதிசேடனின் கூறான ஆலிலையில் பள்ளி கொள்கின்றனர் என்பர்" என்று மேற்கோள் விளக்கக் கதை குறிப்பிடக் காணலாம். பாண்டிய நன்மாறனைத் திருமாலோடு ஒப்பிட்டு கூற ஆலிலையில் எழுந்தருளியுள்ள திருமால் எனக் கையாளப்பட்டுள்ளதை அறியலாம்.

## திருமால் திருமேனியின் சிறப்புகள்

பரிபாடலில், திருமாலின் திருமேனி பற்றிய செய்திகள் இடம் பெற்றிருக்கக் காணலாம். திருமாலின் திருமேனி நீல நிறமுடையதாய் விளங்கியதையும் கண்கள் தாமரை மலர்கள் இரண்டை பிணைத்து வைத்தாற் போல அழகுடன் விளங்கியதையும், அலர் ஞாயிற்றைப் போல வாய்மை தவறாதவர் என்பதையும், நிலம் போல பொறுத்துக் கொள்ளும் இயல்புடையவன் என்பதையும், திருமால் தம் அருளினை, வேண்டியவர்,

வேண்டாதவர் எனப் பாகுபாடு இல்லாமல் அனைவருக்கும் வழங்கும் இயல்புடையவர் என்பதையும் பின்வரும் பாடல் மூலம் அறியலாம்.

**'' நின்னது திகழ் ஒளி சிறப்பு இருள் திருமணி**

**கண்ணே புகழ்சால் தாமரை அலர் இணைப்பிணையல்,**

**வாய்மை, வயங்கிய வைகல், சிறந்த**

**நோன்மை நாடின், இருநிலம், யாவர்க்கும்**

**சாயல் நினது, வான் நிறை - என்னும்**

**நா வல் அந்தணர் அரு மறைப் பொருளே**

**அல்லவும் பிறவும் ஏத்தனை, உவ்வும்**

**எவ் வயினோயும் நீயே''**[47]

## திருமாலின் உருவமும், உணவும்

வேத முறைப்படி குண்டத்தில் தீயை மூட்டி, அத்தீயில் நெய் முதலிய வேள்விப் பொருட்களை இட்டு, அதில் தோன்றும் சுடரின் ஒளி வடிவாக திருமால் வெளிப்படுவான் என்ற செய்தியையும் அறிய முடிகிறது. வேள்விப் பசுவினை உணவாகப் பற்றிக் கொள்ளும் இயல்புடையவன் திருமால் என்பதையும், அன்பர்களுக்கு அவரவர் காணும் வடிவில் வெளிப்படுவான் என்பதையும், அந்தணர்களுக்கு வேள்வித் தீயிலும், யோகிகளுக்கு உள்ளத்திலும், ஞானிகளுக்கு எவ்விடத்திலும் வெளிப்படுவான் என்றும் கூறப்பட்டிருப்பதை பின்வரும் பாடல் வரிகளால் அறிய முடிகிறது. திருமால் தம் கொடியினில் கருடப் பறவையினை ஓவியமாகக் கொண்டிருந்ததைக் காணலாம்.

'' செவ்வாய் உவணத்து உயர் கொடியோயே
கேள்வியுள் கிளந்த ஆசான் உரையும்
படிநிலை வேள்வியுள் பற்றி ஆடு கொளலும்
புகழ் இயைந்து இசைமறை உறுகனல் முறை மூட்டித்
திகழ் ஒளி ஒண் சுடர் வளப்பாடு கொளலும்,
நின் உருபுடன் உண்டி
பிறர் உடம்படுவாரா நின்னொடு புரைய
அந்தணர் காணும் வரவு''[48]

திருமாலின் தோற்றத்தையும், திருமாலைத் தொழுவோர் பெறும் பேற்றையும் பின்வரும் பாடலால் அறியலாம். திருமால் பாட்டால் ஆகிய, ஒளிவீசக்கூடிய ஆடையை அணிந்திருந்ததையும், அவன் தலையில் ஞாயிற்றை போன்ற அழகிய பொன்முடியை அணிந்திருந்ததையும், கழுத்தில் அருவி போன்று அழகான மாலையைச் சூடி இருந்ததையும், கருடக் கொடி ஏந்தியதையும், அவன் கையில் ஞாயிறும், திங்களைப் போன்ற சங்கையும், சக்கரப் படையையும் ஏந்தி விளங்கியதையும், மின்னலைப் போன்ற பொன் மாலையையும், முத்தாரத்தையும் அணிந்திருந்ததைப் பற்றியும் கூறப்பட்டுள்ளதைக் காணலாம். இவ்வாறு தோற்றமளிகளும் மார்பினை நினைத்து வழிபாடுவோர், துறக்க உலகத்தை (வைகுந்தம்) எய்துவர். இவ்வாறு, திருமாலை வழிபடுவோர், திருவைகுந்தமாகிய வானுலகம் அடைவது உறுதி என்பதை,

'' மணி வரை ஊர்ந்த மருங்கில் ஞாயிற்று
அணி வளப்பு அமைந்த பூந் துகில் புனை முடி,
இறுவரை இழிதரும் பொன் மணி அருவியின்

நிறனொடு மாறும் தார், புள்ளுப் பொறி புனை கொடி,

விண் அளி கொண்ட வியன் மதி அணி கொளத்

தண் அளி கொண்ட அணங்குடை நேமி மால்!

பருவம் வாய்த்தலின் இரு விசும்பு அணிந்த

இருவேறு மண்டிலத்து இலக்கம் போல,

நேமியும் வளையும் ஏந்திய கையான் -

கருவி மின் அவிர் இலங்கும் பொலம் பூண்,

அருவி உருவின் ஆரமொடு, அணிந்த நின்

திருவரை அகலம் - தொழுவோர்க்கு

உரிது அமர் துறக்கமும் உரிமை நன்கு உடைத்து''[49]

என்னும் பாடலால் அறியலாம்.

**திருமாலின் சங்கு சக்கர சிறப்புகள்**

திருமால் தம் கரங்களில் ஏந்தியுள்ள சங்கு, சக்கரப் படைகளின் பேராற்றல் பற்றிய செய்தி பரிபாடலில் இடம்பெற்றுள்ளதைக் காணலாம். சங்கு தன் ஓசையாலும், சக்கரம் தன் இயக்கத்தாலும், பகைவர்கள் அஞ்சி நடுங்குமாறும், தலைகள் அறுபட்டு அழியுமாறும் செய்யும் திறன் உடையன. திருமாலின் கையில் உள்ள வலம்புரிச் சங்கு முழங்கும் போது, திருமாலொடு போர் செய்ய வந்த அசுரர்களின் காதுகள் செவிடாகின, முடிகள் அதிர்ந்தன, நிலத்தில் நிற்கும் நிலை தளர்ந்து நடுங்கினர் என இவ்வாறாக சங்கின் முழக்கமே எதிரிகளை வீழ்த்தின என்பது உணரத்தக்கது.

திருமாலின் சக்கரப்படை, அவருடைய பகைவர்களாகிய அவுணர்களை வீழ்த்தியது. இருசக்கரம், உயர்ந்த பனைமரங்களின் உச்சியில் உள்ள பதினாயிரம் பணங்காய்க் குலைகள் உதிர்வன போல, அவுணர்கள் நிலையழிந்து, அவர்களின் உடம்பிலிருந்து வீழும்படியாகச் செய்தது. அவை ஒன்றாக உருண்டு, பிளந்து, நெரிந்து, பின்னர் வேறு வேறாக உருண்டு சிதறிக் குருதிச் சோற்றைச் சொரிந்து நிலத்தில் சோர்ந்து கிடக்கும்படி அவுணர் உயிரை அழிக்கும் தன்மையுடன் விளங்கியது.

அவுணர் கூட்டத்தை ஒன்றாக அழிக்கும் சக்ராயுதம், உடல் கொல்லும் தன்மையால், இயமனை ஒத்து விளங்கியது. சக்ராயுதத்தின் நிறம் பொன்னிறமாக விளங்கும் தன்மையுடையது என்பதை பின்வரும் பாடல் மூலம் அறியப் பெறலாம்.

'' **ஒடியா உள்ளமொடு உருத்து, ஒருங்கு உடன் இயைந்து,**
**இடி எதிர்கழறும், கால் உறழ்பு எழுந்தவர்**
**கொடி அறுபு இறுபு, செவி செவிடு படுபு**
**முடிகள் அதிர, படிநிலை தளர**
**நனி முரல் வளை, முடி அழிபு, இழிபு**
**தலை இறுபு தாரொடு புரள -**
**நிலை தொலைபு, வேர் தூர், மடல்**
**குருகு, பறியா நீள் இரும் பனைமிசைப்**
**பல பதினாயிரம் குலை ரை உதிர்வன போல்**
**நில்லாது, ஒரு முறை கொய்பு கூடி,**
**ஒருங்கு உருண்டு, பிளந்து, நெரிந்து, உருள்பு, சிதறுபு,**
**அளபு, சொரிபு, நிலம் சோர**

**சேரார் இன் உயிர் செகுக்கும்**

**போர் அடு குரிசில்! நீ ஏந்திய படையே**

**ஒன்னார் அடங்கு உண்ணும் கூற்றம் உடலே,**

**பொன் ஏர்பு அவில் அழல் நுடக்கு அதன் நிறனே''[50]**

''மாயோன் மேய காடுறை யுலகமும்'' (அக.*5:1*) என தொல்காப்பியத்தில் மாயோனை முல்லைத் திணை தெய்வமாகக் குறிப்பிட்டிருக்கக் காணலாம். சங்க இலக்கியத்தில் மாயோன் வழிபாடு பரவலாகக் காணப்பட்டதுடன். மாயோன் எனும் சொல்லாட்சியும் காணப்படுவதை அறிய இயலும். மால், நெடியோன், நெடுவேள், நேமியான், திகிரியான், மாயவன், மாயவண்ணன் முதலான பல பெயர்களாலும் மாயோன் குறிப்பிடப் பட்டுள்ளான்.

'நெடியோன்' எனும் சொல் சங்க இலக்கியங்களுள் கலித்தொகை, பதிற்றுப்பத்து, புறநானூறு, அகநானூறு, பெரும்பாணாற்றுப்படை, மதுரைக் காஞ்சி முதலானவற்றுள் குறிப்பிடப்பட்டுள்ளது அறியத்தக்கது. இச்செயல் சில இடங்களில் பரசுராமன் (அகம். *220:5*), முருகன் (அகம். *149:6*), சிவன் 'மழுவாள் நெடியோன்' (மதுரை. *455*), 'வச்சிரத் தடக்கை நெடியோன்' இந்திரன் (புறம். *241:3*) மற்றும் மன்னர்களைச் சுட்டவும் பயன்படுத்தப்பட்டுள்ளதைக் காணலாம். கலித்தொகை *(140:8)*, பதிற்றுப்பத்து *(15:38:39)*, பெரும்பாணாற்றுப்படை *(402:403)*, புறநானூறு *(9:10)*, *(10:12)*, *(102:6)*, *(114:6)*, மதுரைக்காஞ்சி *(763)* ஆகிய இடங்களில் 'திருமால்' என்று குறிப்பிடப்பட்டுள்ளதையும் அறியலாம்.

'நெடுவேள்' எனும் சொல்லாட்சி பரிபாடலில் *(3:37)* 'ஐங்கைம் மைந்த அறுகை நெடுவேள்' என்னும் செய்யுள் வரியில் குறிப்பிடப் பட்டுள்ளது. மாயவன் எனும் சொல் கலித்தொகையிலும் *(143:64)*, மாயவண்ணன் எனும சொல் பதிற்றுப்பத்தில் ஏழாம் பத்திலும் *8)* குறிப்பிடப்பட்டுள்ளது தெரிய வருகிறது.

மாயோனைக் குறிக்கின்ற மாஅல் எனும் சொல் 'இருவர் தாதை இலங்குபூண் மாஅல்' (பரி.*1:28)* 'சேவல் ஊர்தியும் செங்கண் மாஅல்' (பரி.*3:60)*, 'தெய்வமால் காட்டிற்று இவட் கென' (கலி.*107:33)* ஆகிய இடங்களில் ஆளப்படுவதை அறியலாம்.

'மாயோன்' எனும் சொல் திருமாலைக் குறிப்பிடுவதைப் பரிபாடல், கலித்தொகை, புறநானூறு ஆகிய இலக்கியங்களில் காணலாம்.

**'' மாயோன் அன்ன மால்வரைக் கவா அன்''** (நற்.32:1)

**'' மாயோன் கொப்பூழ் மலர்ந்த தாமரை''** (பரிபாடல் திரட்டு 7:1)

**'' புகழ்தல் உற்றோர்க்கு மாயோன் அன்ன;**

**உரைசால் சிறப்பின் புகழ்சால் மாற''** (புறம். 57:2:3)

**'' மணி வரை அன்ன மா அ யோனே''** (புறம். 299:27)

**'' மாயோன் மேய ஓண நன்னாள்''** (மதுரை. 591)

**'' மாயோன் ஒத்த இன்னிலத்தே''** (பரி. 15:33)

**'' மாயோன் என உட்கிற்று என் நெஞ்சு''** (கலி. 103-55)

போன்ற செய்யுட்களில் மாயோன் என்னும் சொல்லாட்சி எடுத்தாளப் பட்டுள்ளதை அறியலாம். புறநானூற்று *391*-ஆவது பாடலில் இடம்பெற்றுள்ள 'விண்டு' எனும் சொல் திருமாலின் பெயரால் குறிப்பிடப் பட்டுள்ளது என உ.வே.சாமிநாதய்யர் கூறியுள்ளார். இவ்வாறு மாயோன்

என்னும் சொல் திருமால் வழிபாட்டின் செல்வாக்கை வெளிப்படுத்துவதாய் அமைந்துள்ளதை இவை யாவும் உணர்த்தக் காணலாம்.

மாயோன் துயில் கொள்வோனாகக் கருதப்படும் அரவணை (ஆதிசேடன்) எனும் சொல் கலித்தொகை, பரிபாடல், பெரும்பாணாற்றுப் டையில் குறிப்பிடப்பட்டிருக்கக் காணலாம்.

**'' பாடு இமிழ் பரப்பக்கத்து அரவணை அசைஇல்''[51]**

**'' அரும் பொருள் மரபின் மால்யாழ் கேளாக் கிடந்தான் போல்**
**பெருங்கடல் துயில் கொள்ளும் வண்டு இமிர் நறுங்கானல்''[52]**

என்னும் செய்யுட்கள் அதை உணர்த்துகின்றன. கலித்தொகை 105-வது பாடலில், இமயத்திற்குத் தொலைவில் உள்ள நாடுகளையும் வென்று முரசுடைய பாண்டியன் சிறப்புற்று விளங்க வேண்டும் என்று கூறவந்த புலவர், கடற்பரப்பிலே அரவணைத் துயிலும் வெற்றிச் சக்கரத்தை உடைய திருமால் போல புகழ் பெறதல் வேண்டும் என்றும் வீழ்த்தியுள்ளார். கலித்தொகை 123-வது பாடலில், 'துயில் கொள்ளும் திருமால்' என்று குறிப்பிடப்பட்டுள்ளது அறியத்தக்கது.

**'' தன் உரு உறழும் பாற்கடல் நாப்பண்**
**மின் அவிர் சுடர்மணி ஆயிரம் விரித்த**
**கவை நா அருந்தலைக் காண்பின் சேக்கை''[53]**

**'' காந்தளஞ் சிலம்பில் களிறு படிந்தாங்குப்**
**பாம்பணைப் பள்ளி யமர்ந்தோன்''[54]**

என்னும் இப்பாடல்களில் தலை ஆயிரத்துடன் விளங்கும் ஆதிசேடனாகிய படுக்கையில் உறங்குகின்ற திருமால் என குறிப்பிடப்பட்டுள்ளது தெரிய வருகிறது.

திருமால் மேனி நீலமணியின் ஒளி பரந்தாற் போல நீல நிறம் கொண்டுள்ளது என்பதை,

**'' மண்ணுறு மணிபாய் உருவினவை''** (பரி.1:59)

**'' நின்னது திகழ் ஒளி சிறப்பு இருள் திரு மணி''** (பரி.2:52)

**'' மணி திகழ் உருபின் மாஅ யோயே''** (பரி.3:3)

**'' கேள் இருள் இருக்கை ஆய் மணி மேனி''** (பரி.4:57)

**'' மணி.... மேனியவன்** (பரி.15:50)

**'' மண்ணுறு திருமணி புரையும் மேனி''** (புறம்.56:5)

என்னும் பாடல்கள் வழி அறியலாம்.

'பூவை.... விரிமலர் புரையும் மேனியை மேனி' (பரி.*1:6-7*), 'பறவாப் பூவைப் பூவினோயே' (பரி.*3:73*), ' ..... மலர்ப்பூவை... உறழும் அணி கிளர் மேனியை' (பரி.*13:42-43*) என்னும் இப்பாடல்கள் திருமாலின் மேனி காயாம் மலர் போன்ற நீல நிறம் உடையது என்று உவமையாகக் கூறப்பட்டுள்ளது அறியத்தக்கது.

'வருமழை இருஞ்சூல்... புரையு மாமெய்' (பரி.*4:7*), '....கார்... உறழும் அணிகிளர் மேனியை' (பரி.*13:42:43*), '.... கார் மயங்கும் மேனியை' (பரி.*15:50*) என்னும் இவ்வரிகளில் கார் மேகத்திற்கு உவமையாகத் திருமாலின் மேனி குறிப்பிடப்பட்டுள்ளது தெரிய வருகிறது.

'....... இருள் ........ உறழும் அணி கிளர் மேனியை' (பரி.*13:42:43*), '...... இருள் மயங்கும் மேனியன்' (பரி.*15:50*) என்னும் அடிகள் திருமால் மேனி இருள் போன்ற நிறமுடையது என்பதை எடுத்துக்காட்டும் வண்ணம் அமைந்துள்ளன.

'மாஅயோயே மாஅயோயே..... உருபின் மாஅயோயே' (*பரி.3:1:3*), 'மாஅ மெய்யொடு...' (*பரி.4:8*), 'அஞ்சன உருவன் தந்து நிறுத்தாங்கு' (*புற.174:5*) என்னும் இப்பாடல் வரிகளில் திருமால் கருநிறத் திருமேனி கொண்டவன் என்று குறிப்பிடப்பட்டுள்ளது. '....திரைபா டவிந்த முந்நீர் ... புரையுமா மெய்' (*பரி.4:6:7*),'.....கடலை....... உறழும் அணிகிளர் மேனியை' (*பரி.13:42:43*), 'முந்நீர் வண்ணன் பிறங்கடை' (*பெரு.402*) எனும் இப்பாடல்களில் திருமால் அலை அடங்கிய கடல் நீரின் நீல நிறம் கொண்டவன் என்று கூறப்பட்டுள்ளது தெரிய வருகிறது.

'நீல நிற வண்ணனும் போன்ம்' (*கலி.104:38*), 'நீல் நிற உருவின் நேமியோனும்' (*புற.58:15*), 'நீல் நிற உருவின் நெடியோன்' (*பெரு.402*) எனும் இவ்வரிகள் மூலம் திருமால் நீல நிறம் உடையவன் என்பதை அறியலாம்.

இவ்வாறு, திருமாலின் மேனி, நீல நிறம் உடையது என்பதற்கு நீலமணி, காயாம்பூ, மேகம், இருள், கருமை, கடல், நீலநிறம் முதலானவை ஒப்பிட்டுக் கூறப்பட்டுள்ளமை அறியத்தக்கது.

சங்க இலக்கியத்தில் திருமாலின் தனிச் சிறப்புகளைக் கூறவந்த புலவர்களும், விஷ்ணுவின் கூறுகளை இணைத்துக் கூறிப் பாடல்கள் புனைந்திருப்பதைக் காண முடிகிறது. புறநானூறு (*58*) மற்றும் நற்றிணைப் (*32*) பாடல்களில் திருமால், பலராமனோடு இணைத்துப் பேசப் பட்டுள்ளதைக் காணலாம். இரு தெய்வங்களும் தனிப்பெரும் நிலையிலேயே இணைந்துப் பேசப்பட்டுள்ளனர் என்பதை இவற்றால் அறிய இயலும். சான்றாக,

**" பானிற வுருவிற் பனைக் கொடியோனும்**

**நீனிற வுருவி னேமி யோனுமென்**

**றிருபெருந் தெய்வமு முடனின்றாங்கு"[55]**

எனும் இப்பாடலில் பலராமன் தனிப் பெருந் தெய்வமாகக் குறிப்பிடப் பெற்றுள்ளதைக் காணலாம். வியூகம் என்பதற்குப் பலராமன், வாசுதேவன் பிரத்தியும்நன், அநிருத்தன் எனும் திருமாலின் நால்வகை வடிவங்களைச் சுட்டுவர். பஞ்சராத்திரர் திருமாலின் நான்கு வகை வியூகங்களை வழிபட்டவர் என்பதையும், அவ்வியூகக் கொள்கை பற்றியும் பரிபாடலில் குறிப்பிடப்பட்டுள்ளதை அறியலாம்.

**" செங்கட் காரி கருங்கண் வெள்ளை**

**பொன்கட் பச்சை பைங்கண் மாஅல்"[56]**

என இப்பாடலில் வாசுதேவன், பலராமன், காமன், அநிருத்தன் இந்நால்வரும் திருமாலின் வியூகர் என்ற செய்தி குறிப்பிடப்பட்டுள்ளது.

**" சேயுயர் பணமிசை யெழில் வேழ மேந்திய**

**வாய்வாங்கும் வளை நாஞ்சி லொருகுழை யொருவனை"[57]**

எனும் இப்பரிபாடல் செய்யுளில் திருமால் பலராமனாகக் குறிப்பிட்டுள்ளதை அறியலாம்.

**" இருங்குன்றத்து அடி உறை இயைக! என**

**பெரும் பெயர் இருவரைப் பரவுதும், தொழுதே"[58]**

எனும் இவ்வடிகளில் திருமால் பலராமன் இருவரையும் வழிபட்ட நிலை குறிப்பிடப்பட்டுள்ளது அறியத்தக்கது.

'' மன் புனல் இள வெயில் வளாவ இருள் வள்வென

பொன் புனை உடுக்கையோன் புணர்ந்து அமர் நிலையே''[59]

எனும் இப்பாடலில் மாயோனும் பலராமனும் இணைந்த நிலையில் சகோதரனாகக் குறிப்பிடப்பட்டுள்ளது தெரிய வருகிறது.

'' நீயே வளையொடு புரையும் வாலியோற்கு அவன்

இளையன் என்போர்க்கு இளையை ஆதலும்

புதை இருள் உடுக்கைப் பொலம் பனைக் கொடியோற்கு

முதியை என்போர்க்கு முதுமை தோன்றலும்''[60]

என்னும் இப்பாடலில் பலராமனுக்கு இளையவன் என்பவர்களுக்கு இளையவனாகவும், பலராமனுக்கு முதியவன் என்போர்க்கு முதியவனாகவும் இருக்கின்றாய் என்னும் செய்தி குறிப்பிடப்பட்டுள்ளது தெரிய வருகிறது. பலராமன் திருமாலுக்குத் தம்பியாகவும், அண்ணனாகவும் காட்டப்பட்டுள்ளமையும் அறியலாம்.

பலராமன் வழிபாட்டு மரபின் வாயிலாக அப்பலதேவன் தெய்வமாக விளங்கியதையும், வியூக வடிவங்களில் ஒன்றாகக் குறிப்பிடப் படுவதையும் அறிய இயலும். மாயோன் வழிபாடு காலம்தோறும் பெற்று வந்த மாற்றங்கள் குறித்துச் சங்கப் பாடல்கள் சிறப்பாகக் குறிப்பிடுவதைக் காணலாம். இச்சூழலுக்குப் பின்னர் அவதாரக் கோட்பாடுகள் மேலோங்கி நின்றதையும் அறியலாம்.

**தொகுப்புரை**

இவ்வாய்வில் திருமால் வழிபாடு, முல்லைத் திணைத் தெய்வமாக திருமால் இருந்தமை, பரிபாடல் மற்றும் கலித்தொகையில் திருமாலின் அவவதாரக் குறிப்புகள் அதிகமாக இடம்பெற்றிருப்பது ஆகியன ஆராயப்பட்டுள்ளன.

வராகம், நரசிம்மம், வாமனம், கிருஷ்ணன் எனும் திருமாலின் அவதாரங்களில், வாமன அவதாரம், முதன் முதலாகப் பெரும்பாணாற்றுப் படையிலும், பின்பு முல்லைப்பாட்டிலும் இடம்பெற்றுள்ளது.

கிருஷ்ணாவதாரம் பற்றிய குறிப்பு அகநானூற்றுப் பாடலில் குறிப்பிடப்பட்டுள்ளது.

பரிபாடலில், வராகம் மற்றும் நரசிம்மம் எனும் இரு அவதாரங்களும், முதன் முதலில் இடம்பெற்று, விரிவாகக் கூறப்பட்டுள்ளது. பாற்கடல் கடைதல், ஆமையாய் உருவெடுத்தல் (கூர்மாவதாரம்), மந்திர மலையாகிய மத்தைத் தன் முதுகில் தாங்குதல், மோகினி வடிவு ஆகிய அவதாரக் கூறுகள் ஆராயப்பட்டுள்ளன.

கண்ணன் மல்லர்களை வெல்லுதல், அன்னமாய் உருவெடுத்து மழைநீரை வற்றச் செய்தல், அசுரர்களால் மறைக்கப்பட்ட சூரியனை திருமால் மீட்டல், கண்ணன் துவராகாபதியை ஆண்ட செய்தி ஆகியன விளக்கப்பட்டுள்ளன.

ஆதிசேடன் ஆயிரம் தலை கொண்டவன், திருமால் பாம்பணையில் துயில் கொள்ளுதல், பலராமன் ஆதிசேடனாய் உருவெடுத்தல், திருமால்

அவுணர்களை வெல்லுதல், அன்பர்கள் திருமாலிடம் வேண்டுதல், திருமால் குடக்கூத்து ஆடியது, திருமால் ஆல் இலையில் அமர்தல் ஆகியன எடுத்துரைக்கப்பட்டுள்ளன.

திருமால் மேனியின் சிறப்புகள், திருமாலின் உருவமும், உணவும், சங்குச் சக்கர சிறப்புகள், மால், நெடியோன், நெடுவேள், நேமியோன், திகிரியான், மாயவன், மணிவண்ணன் முதலான திருமாலின் திருநாமங்கள், பலராமன் வழிபாடு, திருமால் வழிபாட்டில் காலந்தோறும் ஏற்பட்ட மாற்றங்கள் ஆகியன முறையே ஆராயப்பட்டுள்ளன.

# அடிக்குறிப்புகள்

1. பரி. 2 : 13 - 19.
2. பரி. 3 : 21 - 24.
3. பரி. 4 : 22 - 24.
4. பரி. 13 : 34 - 37.
5. பரி. 2 : 32 - 35.
6. பரிபாடல் திரட்டு 64 : 69
7. பரி. 3 : 33 - 34.
8. சிங்காரவேலு முதலியார், அபிதான சிந்தாமணி, ப. 1347.
9. பரி. 4 : 10 - 21.
10. சிங்காரவேலு முதலியார், அபிதான சிந்தாமணி, ப. 1114.
11. கலி. 124 : 1 - 3.
12. பரி. 3 : 20.
13. மேற்படி 3 : 54 - 56.
14. முல்லை. 3 - 5
15. பெரும். 3 : 29 - 31.
16. அகம். 220 : 5 - 6.
17. நற். 32 : 2.
18. புறம் 56 : 11.
19. கலி. 26 : 1

20. மேற்படி 105 : 11 - 12.

21. பரி. 1 : 3.

22. மேற்படி 15 : 55.

23. கலி. 36 : 1 - 2.

24. பரி. 13 : 31 - 33.

25. கலி. 124 : 1 - 3.

26. புறம். 58 - 14.

27. அகம். 59 : 3 - 9.

28. பரி. 3 : 31 - 32.

29. கலி. 103 : 52 - 55.

30. மேற்படி 134 : 1 - 4.

31. பரி. 3 : 26 - 26.

32. புறம். 174 : 1 - 5.

33. மேற்படி 201 : 8 - 10.

34. பரி. 3 : 15 - 18.

35. மேற்படி 3 : 54 - 56.

36. பரி. 13 : 26 - 29.

37. பரிபாடல் திரட்டு 1 : 74 - 75.

38. பரி. 3 : 4 - 10.

39. மேற்படி 3 : 13 - 14.

40. மதுரை. 590 - 591.

41. பரி. 1 : 64 - 68.

42. மேற்படி 2 : 75 - 76.

43. மேற்படி 13 : 61 - 64.

44. பரிபாடல் திரட்டு 1 : 81 - 82.

45. பரி. 3 : 83.

46. புறம். 198 : 9.

47. பரி. 2 : 52 - 59.

48. மேற்படி 2 : 60 - 68.

49. மேற்படி 1 : 13.

50. மேற்படி 2 : 36 - 51.

51. கலி. 105 : 71.

52. மேற்படி 123 : 4 - 5.

53. பரி. 13 : 26 - 28.

54. பெரும். 372 - 373.

55. புறம். 58 : 14 - 16.

56. பரி. 3 : 81 - 82.

57. மேற்படி 1 : 4 - 5.

58. மேற்படி. 15 : 65 - 66.

59. மேற்படி 15 : 27 - 28.

60. மேற்படி 2 : 20 - 23.

# இயல் - 5

## பழக்கவழக்கத் தொன்மங்கள்

புலம்பொடு வதியும் நலங்கினர் அரிவைக்கு

இன்னா அரும்படர் தீர விறல்தந்து

இன்னே முடிக தில் அம்ம

நெடுநல்வாடை 166 - 168

# 5. பழக்க வழக்கத் தொன்மங்கள்

சங்க இலக்கியம், பழந்தமிழரின் அரிய பண்பு நலன்களையும் சமூக வரலாற்றையும் அக்கால மக்களின் வாழ்க்கைச் சூழலையும் எடுத்துக் காட்டுகிறது. எட்டுத்தொகையும் பத்துப்பாட்டும் சங்க கால மக்களின் வாழ்க்கை முறையைப் பிரதிபலிப்பதைக் காணலாம். இவ்விலக்கியங்கள் காட்டும் மக்களின் அன்றாடப் பழக்க வழக்கங்களையும் உணவு, உடை, விளையாட்டு, ஒப்பனைப் பழக்கங்களையும் அவர்கள் கொண்டிருந்த நம்பிக்கை பற்றியும் சகுனம் மற்றும் பிற பழக்க வழக்கங்களைப் பற்றியும் ஆராய்வதே இவ்வியலின் நோக்கமாகும்.

சங்க கால மக்களின் வழிபாட்டு முறை மூலம், அக்கால மக்கள் முருகன், சிவன், இந்திரன், திருமால், வருணன் முதலான தெய்வங்களை வழிபட்டு வந்ததைக் காண முடிகிறது. ஞாயிறு முதலான இயற்கைத் தெய்வங்களை வழிபட்டதையும், மகளிர் தெய்வம் உறையும் இடங்களுக்குச் சென்று நெல்லும், மலரும் தூவி வழிபட்டதையும், வழிபாட்டுப் பழக்க வழக்கம் வாயிலாக அறிய முடிகின்றது.

சங்க நூல்களில் காணப்பட்ட பலவகையான பலிகளைப் பற்றிய செய்திகள், வழிபாட்டுப் பழக்க வழக்கங்கள் மூலம் எடுத்துக்காட்டப் பெற்றுள்ளன. கடவுட் பலி, காக்கைக்குப் பலி, நாட்பலி, குருதிப்பலி, முருகனுக்கு இட்ட பலி, இடுகாட்டில் இடும் பலி, மலையில் உள்ள தெய்வத்திற்கு இடும் பலி, வெண் சோற்றுப் பலி, ஆட்டுக்கிடா பலி, தேக்கிலையில் இடும் பலி, மலர்ப் பலி முதலான பலிகளைக் கொடுத்து, அக்கால மக்கள் வழிபாடு நடத்தி வந்ததை அறிய முடிகிறது. இவ்வாறான

பலி கொடுக்கும் பழக்கமானது நம்பிக்கைத் தொன்மத்துடன் தொடர்புடைய பழக்கவழக்கத் தொன்மம் ஆகும். உயிர்ப்பலி கொடுப்பது என்பதும், மூட நம்பிக்கையின் பாற்பட்டது என அறிஞர் பெருமக்கள் கூறுகின்றனர்.

சங்க கால மக்கள் பல வகையான விழாக்களை நடத்தி வழிபாடு செய்து வந்துள்ளனர். திருவாதிரை விழா, இந்திர விழா, கார்த்திகை விழா, உள்ளி விழா, அந்தி விழா, சிறுசோற்று விழா, துணங்கைக் கூத்தாடும் விழா, அம்பு தொடுக்கும் விழா, வாள் விழா, முந்நீர் விழா, புதுப்புனல் விழா, பல்பூ விழா, போர் விழா, பெருந்துறை விழா, திருமண விழா, பேதை மகளிர் விழா, தைநீராடல் போன்ற விழாக்களின் சிறப்பும் விளக்கப் பட்டுள்ளன.

சங்க கால மக்கள் வாணிபத்தில் சிறந்து விளங்கியிருந்தனர் என்பதை அவர்களின் பண்டமாற்று வாணிப முறை, ஏற்றுமதி, இறக்குமதி, சோழர் காலத்தில் விதித்த சுங்க வரி ஆகியவற்றால் அறிய முடிகின்றது.

அந்தணர், இடையர், உழவர்களின் உணவு மற்றும் பொழுது போக்குப் பழக்கங்கள் மற்றும் மருத நிலத்து உணவு வகைகள் முதலானவை எடுத்துக் காட்டப்பெற்றுள்ளன. விளைந்த கிழங்கு, இனிய பால் சாதம், பழ வகைகளுடன் வழங்குகின்ற அறச்சாலைகள் இருந்ததன் வாயிலாக அக்கால மக்களின் விருந்தோம்பல் பண்பு சிறப்பிக்கப் பட்டிருப்பதை அறியலாம். சமண மற்றும் பௌத்தப் பள்ளிகள் அமைத்துக் கல்வி கற்பித்து வந்ததையும் அறிய முடிகின்றது.

பாலை விளையாட்டு, மள்ளப்போர், கோழிப்போர், சிற்றிலிழைத்தல், சிறுதேராட்டல், பந்தாடல், கவண் விளையாட்டு, ஓரை விளையாட்டு,

சுனை விளையாட்டு, கழங்கு ஆடுதல் முதலான விளையாட்டுப் பழக்கவழக்கங்கள் எடுத்துக் கூறப்பட்டுள்ளன.

பொழுதறிதல், தந்தையின் பெயரை மகனுக்கு வைத்தல், புலிப்பல் தாலி அணிதல், நெற்றியில் பொட்டு வைத்தல், காதில் தளிர்களைச் சூடுதல், சுவற்றில் கோடிடுதல், சுவற்றில் வட்டமிடுதல், மன்னனைத் துயில் எழுப்புதல், காலால் மரத்தை வெட்டுதல், சகுனம் பார்த்தல் ஆகியன எடுத்துரைக்கப்பட்டுள்ளன.

இவ்வாறு, சங்க கால மக்களின் பழக்க வழக்கங்கள், நம்பிக்கை மற்றும் சடங்குத் தொன்மங்களின் வாயிலாக அக்கால மக்களின் வாழ்க்கை முறை மற்றும் சமூக வரலாற்றையும் அறியமுடிகின்றது.

**பழக்க வழக்கங்கள்**

பழக்கம் என்பது தனி மனிதனிடம் இயல்பாக அமைந்த நடத்தை பழக்கம் என்பது நாம் பழகிக் கொள்வது. வழக்கம் என்பது நம் முன்னோர் பழகியது, பிறகு அது நமது வாழ்க்கையில் தொடர்வதால் வழக்கமாகிறது. நம் பழக்கம் நம் பின்னோர்க்கு வழக்கமாகும். இவ்வாறு தனிமனிதப் பழக்கம் வழக்கமாவதுண்டு. எனவே சமுதாயமும் தனிமனிதனும் இணைந்து பழக்க வழக்கங்களை உருவாக்குகின்றனர். தனிமனித நடத்தையைப் பழக்கம் எனவும் குழுவிலுள்ள வர்களுடைய மன எழுச்சி, உணர்ச்சி ஆகியவற்றுடன் சேர்ந்து நிற்பதை வழக்கம் எனவும் சமூகவியலார் கூறுவர். தனிமனிதனைச் சார்ந்த தொடக்க நிலை பழக்கம் என்றும் சமுதாயம் சார்ந்த தொடர்நிலை வழக்கம் என்றும் கூறப்படுகின்றன.

வாழும் நெறியையும் நம்பிக்கைத் தொன்மத்தையும் சடங்குத் தொன்மத்தையும் அடிப்படையாகக் கொண்டு பழக்க வழக்கத் தொன்மங்கள் தோன்றியிருப்பதை அறியலாம். இத்தொன்மங்களின் வாயிலாகத் தனிமனிதர் பழக்கங்களையும் சமூகத்தின் வழக்கங்களையும் சங்க காலத் தமிழர் தம் சமூக வாழ்வியலையும் அறியலாம்.

**வழிபாட்டுப் பழக்க வழக்கம்**

விழைவை விளைவிப்பது விழா. விழைந்து நுகர்வது விழா. சங்க காலம் பல வழிபாட்டு முறைகள் இருந்த காலமாய் இருந்தது எனலாம். குறிஞ்சி முதலான நிலப் பாகுபாட்டிற்கும் அந்நில மக்களின் வாழ்வியல் செயல்பாடுகளுக்கும் ஏற்ற வகையில், மக்களின் வழிபாட்டு முறைகளும் இருந்துள்ளமையை அறியலாம். சங்க கால மக்கள் முருகன், சிவன், இந்திரன், வருணன் மற்றும் திருமால் முதலிய தெய்வங்களை வழிபட்டதை அறியலாம். மேலும் மறத் தொழில் செய்யும் வீரர்கள் வணங்கும் தெய்வமாக கொற்றவை வழிபாடு இருந்ததையும் அறிய முடிகிறது. மேலும் இயற்கையோடு இயைந்த வாழ்வியலை மேற்கொண்டதால், ஞாயிற்றையும் தெய்வமாக வழிபட்டனர்.

ஆரியர்களின் வருகையால் வேள்வி, உயிர்ப்பலி கொடுத்து வேள்வி செய்தல் முதலிய ஆரவாரச் சடங்குகள் தமிழகத்தில் ஏற்பட்டதை அறியலாம். வடமொழிச் சொற்கள் பல தமிழில் கலந்து நடைமுறை சொற்களாக்கப்பட்டன. சிவனை - ருத்திரன் என்றும் கொற்றவையை - துர்க்கை என்றும், திருமாலை - விஷ்ணு என்றும் கூறினர்.

இறை உருவ வழிபாடு என்பது பிற்காலத்தில் வந்த ஒன்றாகும். நாள்தோறும் உழைப்பில் ஈடுபட்ட மனிதன், இறைவனுக்கு நன்றி

செய்யும் பொருட்டாக ஒரு நாளை ஒதுக்கினான். அந்நாளே திருவிழா எனக் கொண்டாடப்படுகிறது. விழாக்கள் கொண்டாடுவதன் வாயிலாக மனிதனின் பொருளாதாரமும் வெளிப்படுகிறது. விழைந்து விழுமிய நெறியில் கொண்டாடுவது விழா.

ஆதி மனிதன் தனக்கு எளிதில் கிடைக்கும் பொருளான கள்ளைப் படைத்து வழிபாடு செய்தான். இந்நிகழ்வு அன்றைய சமூகப் பொருளாதார நிலையைக் காட்டுகிறது. ஆதி மனிதன் இயற்கை சக்தியாகிய நீர், நிலம், காற்று, வான், நெருப்பு முதலானவற்றைத் தெய்வங்களாக வணங்கினான். இவற்றின் நீட்சியாகவே சூரிய வழிபாடு நிகழ்ந்தது. இயற்கையை வணங்குதல் மூலம் வளமை அதிகரிக்கும் என்று நம்பினர். ‘வளம் கொடுக்கும்’ இயற்கைக்குக் கைம்மாறு (நன்றிக்கடன்) செய்தல் என்ற நோக்கில் உருவானதே பலியிடும் பழக்கம். மனம் மொழிமெய்களில் உள்ள தீயவற்றைப் பலியிட்டுக் கோயிலுள் செல்வதற்காகவே கோயிலில் பலிபீடம் அமைந்துள்ளது.

பரிபாடல் அடியார்கள் முருகனுக்கு விழா கொண்டாடுதல் பற்றி குறிப்பிட்டுள்ளது. திரு ஓணம், திரு ஆதிரை என விழாக்களைத் திரு என்ற அடைமொழி கொடுத்துச் சிறப்பித்துள்ளனர்.

சிறந்த அடியார்கள், திருப்பரங்குன்றத்து முருகனிடம் அன்பு கொண்டு திருவிழா நடத்தினர் என்பதையும் அவர்கள் சந்தனம், குங்குமம் முதலானவற்றைக் கொண்டும் புகைப் பொருள்கள், விளக்குகள், நறுமணம் கமழும் மலர்கள், இனிய இசை தரும் மத்தளம், மணி, கயிறு, மயில், கோடரி, பிணிமுகம் என்னும் யானை ஊர்தி ஆகியவற்றையும்

முருகவேளுக்கு விருப்பமான பிற பொருட்களையும் கொண்டு விழா கொண்டாடினர்.

'' சீறடியவர் சாறுகொள எழுந்து
வேறுபடு சாந்தமும் வீறுபடு புகையும்
ஆறு செல் வழியின் அவியா விளக்கமும்
நாறு கமழ் வீயும் கூறுமிசை முழவமும்
மணியும் கயிறும் மயிலும் குடாரியும்
பிணிமுகம் உளப்படப் பிறவும் ஏந்தி
அருவரைச் சேராத் தொடுநர்''[1]

என்று பரிபாடலில், தெய்வ விழா எடுத்திருந்தது பற்றிய செய்தி கூறப் பட்டுள்ளதைக் காணலாம்.

திருப்பரங்குன்றத்து மலையில், மகளிர் விளையாடினர் என்பதையும் அம்மகளிர் அணிகலத்திலிருந்து சிதறிய நீலமணிகள் அருவி நீரோடு கலந்து, வயல்களில் சேற்றினைச் சிதைத்தன என்பதையும் பிரிந்த தலைவர் வினை முடித்து விரைவில் வரும் பொருட்டு வெள்ளருவியணிந்த திருப்பரங் குன்றத்தில், ''தலைவியர் தெய்வத்திற்கு விழா'' நடத்தினர் என்பதையும் பின்வரும் பகுதி விளக்கும்.

'' தெய்வ விழவும் திருந்து வியந்தயா்வும்
அவ்வெள் அருளவி அணிபரங் குன்றிற்கும்''[2]

**திருவாதிரை விழா**

பரிபாடலில், நிறைமதி நாளில் மார்கழி மாதத்தில் சிவபெருமானுக்குத் திருவாதிரை விழா கொண்டாடப்பட்டிருந்தது பற்றிக் கூறப்பட்டுள்ளதைக்

காணலாம். கார் காலத்திலும் கூதிர் காலத்திலும் மழை பெய்து ஓய்ந்து விடும். முன் பருவமான மார்கழித் திங்களில் வெயில் சுடுவதில்லை. ஆயினும் மழைக் காலத்தில் கடைசி மழை மட்டுமே பெய்யும். மார்கழித் திங்களில் வரும் முழுமதியுடன் கூடிய திருவாதிரை நாளில், ஆதிரையன் என்று அழைக்கப்படுபவனும் திருவாதிரைக்கு உரிய கடவுளுமாகிய சிவபெருமான் திருக்கோயில்களில், திருவிழாவைத் தொடங்கினர் என்பதையும் அந்தணர் திருவாதிரை நாளில் விழாக் குறித்துச் சொல்ல, திருக்கோயில் அர்ச்சகர் விழாச் செய்தார் என்பதையும் விழா நாளில் அந்தணர் தம் உடலில் முப்புரி நூல் அணிந்து, பொன்னால் செய்யப்பட்ட பாத்திரங்களில் இறைவனுக்கு வேண்டிய பலி மற்றும் பூசனைப் பொருட்களை ஏந்திச் சென்றனர் என்பதையும் பரிபாடலிலேயே காணலாம்.

**'' ஞாயிறு காயா நளிமாரிப் பிற்குளத்து**
**மாயிறுந் திங்கள் மறுநிறை ஆதிரை**
**விரிநூல் அந்தணர் விழவு தொடங்க''[3]**

திருவாதிரை நாளில் இவ்வுலகம் கதிரவன் வெப்பத்தால் துன்புறாமல், மழைவளம் பெருகிக் குளிர்ச்சி பெற வேண்டும் என்று சிவபெருமானை வேண்டி, வாழ்த்தி, வணங்கினர் என்பதை அறிய முடிகிறது. உலகம் வெப்பமயமாதலை அன்றே விரும்பவில்லை என்பதை உணர முடிகின்றது.

**இந்திர விழா**

மழை தரும் இந்திரனுக்கு எடுத்த விழா இந்திர விழா. ஐங்குறுநூற்று பாடலில், இந்திர விழா பற்றிக் குறிப்பிடப்பட்டுள்ளது. இந்திர விழாவில் ஆடல் பாடல்களை நடத்தினர் என்பதையும் இந்திர விழாவில் பூ என்பதனை மகளிர்க்கு அடையாக்கி, ''இந்திர விழாவில் பூக்களைத் தருவித்துத் தொகுத்தாற் போல் இவ்வூர் மங்கையர் விளங்கினர் என்பதையும்'' பின்வரும் பகுதி விளக்கும்.

**'' இந்திர விழவிற் பூவின் அன்ன**
**புன் தலைப் பேடை வரி நிழல் அகவும்**
**இவ்வூர் மங்கையர்த் தொகுத்து''[4]**

**கார்த்திகை விழா**

அகநானூற்றுப் பாடல் வாயிலாக கார்த்திகை விழா பற்றிய செய்தி இடம்பெற்றிருந்ததைக் காணலாம். மழை பெய்து ஓய்ந்தது. கார்த்திகை நன்னாளில் மதி நிறைந்து காணப்படும் என்பதையும் இருள் அகன்ற நள்ளிரவில், வீதிகளில் திருவிளக்குகள் ஏற்றி மக்கள் கார்த்திகைத் திருவிழாவைக் கொண்டாடினர் என்பதையும் மாலைகள் தொங்க விட்டனர் என்பதையும் இவ்வாறு கார்த்திகை விழா கொண்டாடப்பட்டது என்பதையும் அகநானூற்றுப் பாடல் விளக்குகின்றது.

**'' ............. மாக விசும்பில்**
**குறுமுயல் மறுநிறங் கிளர மதி நிறைந்து**
**அறுமீன் சேரும் அகலிருள் நடுநாள்**

மறுகுவிளக் குறுத்து மாலை தூக்கிப்

பழவிறல் மூதூர்ப் பலருடன் துவன்றிய

விழவுடன் அயர வருகதில் அம்ம''[5]

மேலும், மழை பெய்யாது ஒழிந்தமையால், உயர்ந்த மலைச் சிகரங்களிலிருந்து வீழும் அருவிகளில் நீர் இல்லாமல் போனதாகவும் அச்சிகரங்களில் கார்த்திகை விழாவில் ஏற்றி வைக்கும் விளக்குகள் போல இலவ மரங்களில் இலையே இல்லாமல் மலர்கள் மலர்ந்துள்ளன என்றும் கூறியதன் மூலம், கார்த்திகை விழாவானது சிறப்புடன் கொண்டாடப்பட்டது என்பதைக் கீழ்க்கண்ட பாடற்பகுதி விளக்கும்.

'' பெருவிழா விளக்கம் போலப் பலவுடன்

இலை இல மலர்ந்த இலவம்''[6]

**உறந்தையில் நடைபெறும் பங்குனி உத்திர விழா**

பங்குனி மாதம் கொண்டப் பெற்ற விழா பங்குனி உத்திர விழா. நற்றிணையிலும் அகநானூற்றிலும் பங்குனி உத்திர விழா பற்றிய செய்தி குறிப்பிடப்பட்டுள்ளது. உறையூர் மக்கள், மணங்கமழும் குளிர்ச்சி பொருந்திய சோலையில், உத்திரம் நிறைமதியுடன் கூடிய நன்னாளில் பங்குனி உத்திர விழாவினைச் சிறப்பாகக் கொண்டாடினர். மக்கள் ஒன்று கூடி விழாக்கோலம் பூண்டு, அடுப்புகள் அமைத்து, தீமூட்டி, உணவு சமைத்து, உண்டு, மகிழ்ச்சி இன்பம் எய்தினர் என்பதைப் பின்வரும் அகநானூற்றுப் பகுதி காட்டும்.

'' ........... உறந்தை யாங்கண்

வருபுனல் நெரிதரும் இருகரைப் பேரியாற்று

உருவ வெண்மணல் முருகுநூறு தண் பொழில்

பங்குனி முயக்கம் கழிந்த வழி நாள்''[7]

மேலும், ''பங்குனி விழவின் உறந்தையொடு''[8] என்ற நற்றிணைப் பாடல் அடியிலும், இக்கருத்து உள்ளமையைக் காணலாம்.

**உள்ளி விழா**

வஞ்சியில் நடைபெற்ற உள்ளி விழாவில், கொங்கு நாட்டினர், மணியினை இடையில் கட்டிக் கொண்டு தெருவில் கூத்தாடினறாம். இதனை உள்ளி விழா என்று அழைத்தனர் என்பதையும் இவ்விழாவில் விழாக் காணும் மக்கள் ஒலி எழுப்பி ஆரவாரத்துடன் மகிழ்ந்தனர் என்பதையும் அகநானூறு குறித்துள்ளது.

'' .................... கொங்கர்

மணி யரை யாத்து மறுகின் ஆடும்

உள்ளி விழவின் அன்ன

அலரா கின்றது பலர்வாய்ப் பட்டே''[9]

மேலும் 'உள்ளி விழவின் வஞ்சியும் சிறிதே'[10] என்ற நற்றிணைப் பாடல் அடி, வஞ்சிநகரமே சிறிதாகிப் போனதுபோல் உள்ளி விழாவின் ஒலி பரந்து கேட்டிருந்ததை விளக்குகிறது.

**அந்தி விழா**

மதுரைக் காஞ்சிப் பாடலில், அந்தி விழா பற்றிய செய்தி இடம்பெற்றுள்ளதைக் காணலாம். கால்கோள் தொடங்கிய ஏழாம் நாள் அந்தியில் நடைபெறும் நீராடல் விழா, 'அந்தி விழா' என அழைக்கப்படுகிறது. இவ்விழாவினைத் 'தீர்த்தம் ஆடும் விழா' என்றும்

கூறுவர். தீவினை தீர கழுவுவதற்குக் காரணமான தீர்த்த நீரைக் கொண்டு திருநாளையுடைய ஏழாம் நாள் அந்தியில், எழுபிறப்பும்தீர மக்கள் அனைவரும் நான்மாடக் கூடலில் கூடித் தீர்த்த நீராடும் விழாவைக் கொண்டாடினர் என்பதைப் பின்வரும் பாடல் அடிகளால் அறியலாம்.

**'' கழுநீர் கொண்ட எழுநாள் அந்தி,**
**ஆடு துவன்று விழவின், நாட ஆர்த்தன்றே**
**மாடம் பிறங்கிய மலி புகழ்க் கூடல்**
**நாள் அங்காடி நனந்தலைக் கம்பலை''[11]**

அந்தி விழாவானது கோயிலில் கொண்டாடப்பட்டது. இவ்விழா ஐம்பூதங்களுக்கு முதல்வனான மழு என்னும் வாளைக் கரத்தில் ஏந்திய சிவபெருமானுக்கு எடுக்கப்பட்ட விழாவாகும், மாயோன், முருகன் முதலிய தெய்வங்களை வேண்டியும் இவ்விழா எடுக்கப்பட்டதாம். மக்கள் புண்ணிய நீரில் நீராடி, வாடாத பூக்களைக் கொண்டு, அவி என்னும் உணவை வேள்வித் தீயில் தெய்வங்களுக்கு இட்டும் உயர்ந்த பலிகளைக் கொடுத்தும் அந்திக் காலத்துக்கு முன்னதாகவே இசைக் கருவிகளை ஒலித்தும் இவ்விழாவினைக் கொண்டாடினர் என்பதையும் அறியலாம்.

**'' நீரும் நிலனும் தீயும் வளியும்**
**மாக விசும்பொடு ஐந்துடன் இயற்றிய**
**மழுவாள் நெடியோன் தலைவனாக**
**மாசற விளங்கிய யாக்கையர் சூழ்சுடர்**
**வாடாப் பூவின் இமையா நாட்டத்து**
**நாற்ற உணவின் உருகெழு பெரியோர்க்கு**
**மாற்றரு மரபின் உயிர்ப்பலி கொடுமார்**
**அந்தி விழவில்..........''[12]**

**சிறுசோற்று விழா**

கோவூர்கிழாரின் புறநானூற்றுப் பாடலில், 'வேள்வி விழா' பற்றிய செய்தி குறிப்பிடப்பட்டிருப்பதைக் காணலாம். நலங்கிள்ளி என்னும் மன்னனுடைய பாசறையில், பந்து வடிவம் போன்று, ஊனுடன் பெரிய சோற்றுத்திரளைப் பாணர்களுக்கு வழங்கி, அவர்களைத் தம் சுற்றத்தாருடன் உண்ணச் செய்த இயல்பை வேள்வி விழா அல்லது சிறுசோற்று விழா என்று கூறினர். இச்செய்தியைப் பின்வரும் பாடல் அடிகளால் அறியலாம்.

**'' ............... புதுப்பூம் பள்ளி**

**வாயின் மாடந்தொறும் மைவிடை வீழ்ப்ப**

**நீயாங்குக் கொண்ட விழவினும் பலவே''[13]**

**துணங்கைக் கூத்தாடும் விழா**

மகளிர், முடக்கிய இரு கைகளையும் விலாப்புடைகளில் ஏற்றி, அடித்துக் கொண்டு அசைந்தாடும் ஒரு வகைக் கூத்து துணங்கைக் கூத்து என்பர். இவ்வாறு மகளிர் துணங்கைக் கூத்து ஆடினர் என்பதைப் பற்றி பின்வரும் பாடல் வரிகளால் அறியப் பெறலாம். இக்கூத்துப் பற்றிய குறிப்புகள் நற்றிணையிலும் அகநானூற்றிலும் உள்ளன.

**'' விழவயர் துணங்கை தழூஉகம் செல்ல''[14]**

**'' முழவு இமிழ் துணங்கை தூங்கும் விழவு''[15]**

**அம்பு தொடுக்கும் விழா**

முதன் முதலில் அம்பு தொடுக்கும்பொருட்டு நிகழ்த்தும் விழா '' அம்பு தொடுக்கும் விழா'' என்பர். இதனைப் ''பூந்தொடை விழா'' என்றும் அழைப்பர். இது, படைக்கலப் பயிற்சி பெற்ற வீரர்களின் அரங்கேற்று விழா எனலாம். வேட்டையாடி வாழ்ந்த தொன்மக்கால நிலையை உணர்த்தும் இவ்விழா தொன்மமாக உள்ளதை உறுதி செய்கிறது.

'' பூந்தொடை விழவின் தலைநாள் அன்ன
தருமணல் நெமிரிய.......''[16]

என்னும் தொடரால் அறியலாம்.

**வாள் விழா**

தீயனவற்றை வெல்லும் ஆற்றலை விழைந்து கொண்டாடும் விழா வாள் விழா. பதிற்றுப்பத்தின் ஏழாம் பத்துப் பாடலில், கபிலர் ''வாளை சுழற்றுகின்ற விழா'' பற்றிக் குறிப்பிட்டுள்ளதைக் காணலாம். மன்னர்கள் தம் போர்த் திறமையை அறிவிக்கும் பொருட்டு, ''வாட்போரினை''த் தம்முள் ஒரு விழாவாகவே நிகழ்த்தினர், பகைவரால் குலைப்பதற்கு முடியாத படை வகுப்புடனும் விடியற்காலையில் பரிசைப் படையின் மேல் எழுகின்ற ஒளி விரவி விளங்குகின்ற வேலுடனும் பூமாலைகள் அசைந்தாற் போலச் சுழலுதலையுடைய வாட்களுடனும், வாள் விழாவைக் கொண்டாடினர் என்பதைப் பின்வரும் பாடலால் அறிய முடிகிறது.

'' தார் புரிந் தன்ன வாளுடை விழவிற்
போர்படு மள்ளர்.......''[17]

**முந்நீர் விழா**

படைத்தல், காத்தல், அழித்தல் என்ற மூன்று நீர்மை கொண்ட கடலுக்கு முந்நீர் விழா எடுத்தனர். நெட்டிமையர் எனும் புலவரின் புறநானூற்றுப் பாடல் கடல் தெய்வத்திற்கு எடுக்கும் விழா பற்றிக் குறிப்பிடப்பட்டுள்ளது. முந்நீராகிய கடல் தெய்வத்திற்கு விழா எடுத்தனர் என்பதையும் நல்ல நீரை உடைய பஃறுளியாற்று மணலினும், ''பல காலம் எம் மன்னன் வாழ்க'' என்று கூறி வாழ்த்தியதையும் கீழ்கண்ட பாடலடி மூலம் அறியலாம்.

''முந்நீர் விழவின் நெடியோன்''[18]

மூன்று நீர்மை கொண்ட கடல் முந்நீர் எனப் பெற்றது.

**புதுப்புனல் விழா**

ஆடிமாதத்தில் நிறைமதி நாளில் புதுப்புனலை வரவேற்று நடத்திய விழாவாகும். பரணரின் ஐந்தாம் பாடல், ''தீம்நீர் விழா'' பற்றிக் குறிப்பிட்டுள்ளது. கொங்கு நாட்டில் ஓடும் ஆறு காஞ்சி என்பதாகும். மலையில் தோன்றிக் கடலிலே சென்று சேரும் ஆற்றில் புதிதாக இனிய நீர் வந்து சேர்கிறதாம். அதனால் மிக்க நீரையுடைய ஆற்றில் நீர் விளையாட்டு விழாவைக் கொண்டாடினர் மக்கள் என்பதைக் கீழ்க்கண்ட பாடலடி காட்டும்.

'' நின் மலைப் பிறந்து நின் கடல் மண்டும்
மலி புனல் நிகழ்தரும் தீம்நீர் விழவு''[19]

**பலபூ விழா**

பூப்போல தம்வாழ்வு மலர்ச்சியுடன் விளங்கக் கொண்டாடிய விழா. பாலைக் கௌதமனாரின் மூன்றாம் பத்துப் பாடலில், மருத நிலத்தில் பலவகைப் பூக்களைக் கொண்டு எடுக்கும் விழாவைப் பற்றிக் குறிப்பிடப் பட்டுள்ளது. கரும்பு முற்றி விளைகின்ற காலம் அல்லாத நாட்களிலும், உழவர் கரும்பினை அறுவடைசெய்தனர் என்பதையும் அவ்வாறு வெட்டினாலும் வெட்ட முடியாமல், அதன் பின் நெற்போரினைத் தள்ளியடிப்பர் என்பதையும் மருதநிலத்தில் மலரும் பலவகைப் பூக்களால் கடவுளை வழிபட்டனர் என்பதையும் பதிற்றுப்பத்து பலபூவிழாவினை விளக்கிக் காட்டும்.

**'' அரிகால் அவித்துப் பலபூ விழவின்''**[20]

**போர் விழா**

தீயவகையை வெல்ல விழைந்து கொண்டாடிய விழா போர் விழா. போர் செய்தற்கு முன் எடுக்கும் விழா, ''போர் விழா'' எனப்படும். கல்லெனும் ஆரவாரத்துடன் விளங்கும் பெரிய ஊரில், போரின் பொருட்டு விழாவினை எடுப்பர் என்பதைப் புறநானூற்றுப் பாடலில் நக்கண்ணையார் குறிப்பிட்டுள்ளார்.

**''கல்லென் பேரூர் விழவு''**[21]

**பெருந்துறை விழா**

காவிரித் துறையில் நடைபெறும் ''நீராட்டு விழா'', பெருந்துறை விழா என்று அழைக்கப்பட்டது. கழா அர் என்னும் ஊரிடத்து உள்ள

தாழ்ந்து தொங்கும் பெரிய காவிரித் துறையில் நிகழ்ந்த நீராட்டு விழாவில் ஆட்டனத்தி நடனம் ஆடினான் என அகநானூறு குறிப்பிட்டுள்ளது.

**''கழாஅர்ப் பெருந்துறை விழவின் ஆடும்''**[22]

அத்தியைப் போற்றும் தொடர் இதுவாகும். மேலும் கழார் என்னும் ஊரின் முன்பு கரிகால் வளவன் ஆரவாரம் மிக்க தன் சுற்றத்துடன் ''புனல் விழாவினைக்'' கண்டு மகிழ்ந்தான் என்றும் அப்போது அத்தி என்பான் சிவந்த காலடியில் கழலினையும் வயிற்றில் மணியினையும் கட்டிக் கொண்டு, கஞ்சதாளம் ஒலிக்க புனலின் கண் விரும்பி நீராடினான் என்றும் பரணர் பாடியுள்ளார்.

**'' தண்பதம் கொண்டு, தவிர்ந்த இன் இசை**
**ஒண் பொறிப் புனைகழல் சேவடிப் புரள**
**கருங்கச்சு யாத்த காண்பின் அவ்வயிற்று**
**இரும் பொலம் பாண்டில், மணியொடு தெளிர்ப்ப**
**புனல் நயந்து ஆடும் அத்தி அணிநயந்து**
**காவிரி கொண்டு ஒளித் தாங்கும் அன்னோ!''**[23]

## திருமண விழா

குடவாயிற் கீரத்தானாரின் அகநானூற்றுப் பாடலில், ''திருமண விழா'' பற்றிக் கூறியுள்ளது. உறையூரைப் போன்ற வளம் நிறைந்த தன் தந்தையின் பெரிய இல்லத்தில், சான்றோர்கள், மணஞ் செய்விக்க நிகழும் மண விழாவில் மயிர்ச் சாந்து பூசியும் மங்கல நீராட்டியும் பல சிறப்புக்களையும் செய்து கொண்டாடினராம்.

**''நன்மாண் விழவில் தகரம் மண்ணி''**[24]

திங்களும் ரோகிணியும் சேர்ந்த நாள் திருமணத்திற்குரிய சிறந்த நாளாகக் கருதப்பட்டது. வீட்டிற்கு முன் வரிசையாக கால்களை நட்டுப் பந்தலிட்டனர். பந்தலின் கீழ் புதுமணல் பரப்பினர். மனை விளக்கு ஏற்றி மாலைகளை தொங்க விட்டு, இடையறாது உணவு அளித்தனர்.

'' உழுந்து தலைப் பெய்த கொழுங் களி மிதவை
பெருஞ் சோற்று அமலை நிற்ப, நிரை கால்
தண் பெரும் பந்தர்த் தரு மணல் ஞெமிரி,
மனை விளக்குறுத்து, மாலை தொடரி,
கனை இருள் அகன்ற கவின் பெறு காலை
கோள் கால் நீங்கிய கொடு வெண் திங்கள்
கேடு இல் விழுப் புகழ் நாள் தலை வந்தென
உச்சிக் குடத்தர், புத்தகல் மண்டையர்
பொது செய் கம்பலை முது செம் பெண்டிர்
முன்னவும் பின்னவும் முறை முறை தரத்தர''[25]

**பேதை மகளிர் விழா**

வளைந்த முட்களையுடைய முள்ளிச் செடியின் குவிந்த குலைகளில் உள்ள வெண்மையான காம்புகளையுடைய கடுமையான மலர்களைக் கொண்டு பேதை மகளிர் விளையாடினர் என அகநானூறு பாடியுள்ளது.

'' மீன்முள் அன்ன வெண்கால் மாமலர்
பொய்தன் மகளிர் விழவணிக் கூட்டும்''[26]

என்பதால் விழாவின் மகிழ்வை அறியலாம். மக்களின் சமுதாய வாழ்வின் கட்டுக் கோப்பையும் உணரலாம்.

**வருண வழிபாடு**

தீங்கின்றி நாடெல்லாம் திங்கள் மும்மாரி பெய்ய மழைக்கடவுளை வாழ்த்தி வழிபட்டனர். பட்டினப்பாலையில், வருண வழிபாடு இடம் பெற்றுள்ளது.

கடல் தெய்வமான ''வருணனுக்கு'' வழிபாடு மேற்கொண்டனர். இவ்விழா பௌணர்மி நாளில் நடைபெற்றிருக்கின்றது. சினைகளையுடைய சுறாமீன் கொம்பை வெண்மணலில் நட்டு அதற்கு வெண் கூதாளி, தாழை மலர்களைச் சூட்டினர். தெய்வத்திற்கு கள்ளைப் படைத்துப் பருகி மகிழ்ந்தனர் என விழவின் நிகழ்வுகளைப் பட்டியலிட்டுள்ளது.

**''வீழ்த் தாழை தாள் தாழ்ந்த**
**வெண் கூதாளத்துத் தண்பூங் கோதையர்,**
**சினைச் சுறவின் கோடு நட்டு**
**மனைச் சேர்த்திய வல் அணங்கினான்**
**மடல் தாழை மலர் மலைந்தும்**
**புன் தலை இரும் பரதவர்**
**பைந் தழை மா மகளிரொடு**
**பாய் இரும் பனிக் கடல் வேட்டம் செல்லாது**
**உவவு மடிந்து உண்டு ஆடியும்**
**புலவு மணல் பூங்கானல்**
**மாமலை அணைந்த கொண்மூ''**[27]

என்னும் அடிகள் உணர்த்துகின்றன. மணல் மிகுதியாகப் பரப்பி, செம்பூக்களால் அழகு செய்து பலி கொடுத்து ஆரவாரத்துடன் வழிபட்டனர் என்பதையும் குறிப்பிட்டுள்ளது.

**'' ஊன் பொரிக்கும்ஒலி முன்றில்,**

**மணற் குவைஇ, மலர் சிதறி**

**பலர் புகு மனைப் பலிப் புதவின்''**[27]

எனும் அடிகள் இச்செய்தியை அறிவிக்கும். பெருவிழாக் காலங்களில் மன்றங்களில் பாட்டும் கூத்தும் இடம்பெற்றன.

**'' முதுவாய்க் கோடியர் முழவொடு புணர்ந்த**

**திரிபுரி நரம்பின் தீந்தொடை ஓர்க்கும்**

**பெருவிழாக் கழிந்த, பேயும் முதிர் மன்றத்து''**[28]

என இப்பாடல் அடிகள் விளங்குகின்றன.

வாணிபம் காரணமாகப் பல்வேறு நாடுகளில் பல மொழிகள் பேசி வாழ்ந்தாலும் விழாக் காலங்களில் பழைய ஊரில் பலரும் ஒன்று கூடுவர்.

**''பல் ஆயமொடு பதி பழகி**

**வேறுவேறு உயர்ந்த முதுவாய் ஒக்கல்**

**சாறுஅயர் மூதூர் சென்று தொக்காங்கு''**[29]

நின்ற தொன்மை இன்றும் நகரத்தாரிடையேயும் பிறரிடையேயும் உள்ளமை எண்ணத்தக்கதாகும்.

## ஞாயிறு வழிபாடு

சங்க கால மக்கள் இயற்கையோடு இயைந்த வாழ்க்கையை மேற்கொண்டனர். ஆற்றல் மிக்க இயற்கைப் பொருட்களைத் தெய்வமாக வணங்கினர். ஞாயிற்றைத் தெய்வமாக வழிபட்டனர். கடலின் மேல் பலரும் போற்றி வணங்குமாறு தனது இளங் கதிர்களுடன் தோன்றி யாவரும் மகிழுமாறு செய்பவன் என ஞாயிற்றை வணங்கிப் போற்றினர்.

**''முந்நீர் மீமிசைப் பலர் தொழத் தோன்றி**

**ஏமுற விளங்கிய சுடரினும்**

**வாய்மை சான்ற நின் சொல் நயந்தோர்க்கே''[30]**

என்பதால் ஞாயிற்றைப் போற்றியமையை அறியலாம். தமிழர் திருநாளாம் தைத் திங்கள் முதல் நாளில் பொங்கலிட்டு ஞாயிற்றுக்குப் படைக்கும் 'சூரிய பொங்கல்' வழிபாடும் நாளும் நிகழ்த்தும் கதிரவன் வழிபாடும் இன்றும் காண்பனவாகும்.

## முருக வழிபாடு

குறிஞ்சிக் கடவுளாகிய முருகனை நெய்தல் நிலத்திலும் வழிபட்டனர். முருக வழிபாடு அகப் பாடல்களிலும் புறப்பாடல்களிலும் குறிப்பிடப்பட்டுள்ளது. தலைவியின் துன்பத்தைப் போக்க பயன்படும் வெறியாட்டுதல் நிகழ்த்துவதற்கு வெறியாட்டு முருகன் ஏறப்பெற்ற பூசாரி நிகழ்த்துவதாகும். இது அகப்பாடல் தரும் செய்தி. போருக்குச் செல்லும் முன்னும் வெற்றிக்குப் பின்னும் முருகனைப் போற்றி வழிபடும் பழக்கம் கொண்டிருந்தனர் எனப் புறப்பாடல் கூறும். திருச்செந்தூர் முருகன் கோயில் பற்றிய குறிப்பு புறநானூற்றில் உள்ளது.

'' ...........தாழ்நீர்

வெண் தலைப் புணரி அலைக்கும் செந்தில்

நெடுவேள் நிலைஇய காமர் வியன்துறை''[31]

மலைப்பகுதியில் அல்லாமல் கடலோரத்திலும் அன்றே முருகனுக்குக் கோயில் இருந்தமையைப் பதிவு செய்துள்ளது புறநானூறு.

## கொற்றவை வழிபாடு

கொற்றமாகிய வெற்றி தரும் தெய்வம் கொற்றவை. வெற்றி தரும் கொற்றவை மறத்தொழில் புரியும் வீரர்கள் வணங்கும் தெய்வமாகத் திகழ்ந்தாள். சங்க இலக்கியத்தில் கொற்றவை, பாலை நிலத்து மக்களின் தெய்வமாகவும் போரில் வெற்றியைக் கொடுப்பவளாகவும் எல்லா வல்லமை படைத்த இவள் பெருங்காட்டினுள் உறைபவளாகவும் என்றும் கூறப்பட்டுள்ளாள். இத்தெய்வம் ஆரியர்களின் கலப்பினால் 'துர்க்கை' என அழைக்கப்பட்டாள். சங்க காலத்தில் பெண் தெய்வமான கொற்றவை போர்த் தெய்வமாகப் போற்றப்பட்டமையை அறியலாம்.

சங்க கால மக்கள், கொற்றவையை வெற்றித் தெய்வமாக வழிபட்டனர். கொற்றவைக்கு நோன்பு மேற்கொண்டு பலிகடன் செலுத்தியதைக் குறுந்தொகைப் பாடல் கூறியுள்ளது.

''விடர் முகை அடுக்கத்து விறல் கெழு சூலிக்குக்

கடனும் பூணாம்; கைந்நூல் பாவாம்''[32]

வேந்தன் பாசறையில் தங்கிச் செய்யும் போர் விரைவில் வெற்றியுடன் நிறைவு பெற வேண்டும் எனக் ''கொற்றவையை இறைஞ்சி

வழிபடும் பழக்கம்'' கொண்டிருந்தனர் என்பதை நெடுநல்வாடை மூலம் அறியலாம்.

**'' புலம் பொடு வதியும் நலம் கிளர் அரிவைக்கு**
**இன்னா அரும்படர் தீர, விறல் தந்து**
**இன்னே முடிக தில் அம்ம''[33]**

என்று வேண்டினர். கொற்றவையைப் போருக்கு முன்னும் போரின் போதும் போருக்குப் பின்னும் வழிபட்டமையை அறியலாம்.

இல்லத்திற்கு வருபவர்களை இனிய முகத்துடன் வரவேற்றல் இலக்கியத்தில் குறிப்பிடப்பட்டுள்ளது. விருந்தோம்பலைக் கடமையாகக் கொண்டவர்கள் கடன் பெற்றும் தம் கடமையைச் செய்தனர். விருந்தினர்களைப் போற்றி முதல் நாள் வாளை பணயம் வைத்துப் பொருள் பெற்றான். அடுத்துச் சீறியாழைப் பணயமாக வைத்துப் பொருள் ஈட்டினான்.

**'' நெருநை வந்த விருந்திற்கு மற்றுத்த ன்**
**இரும் புடைப் பழவாள் வைத்தனன்; இன்று இக்**
**கருங்கோட்டுச் சீறியாழ் பணயம், இது கொண்டு**
**ஈவதிலாளன் என்னாது நீயும்''[34]**

கொடுத்தாய் என்று புறநானூறு வள்ளலைப் போற்றியுள்ளது.

**விரிச்சி கேட்டல்**

மக்கள் துன்பமுற்ற நிலையில் நற்சொற் கேட்கும் பழக்கம் கொண்டிருந்தனர். நெல்லும் நீரும் தூவி, வருவதை அறிந்து

கொள்ள நற்செயல் கேட்டனர் என்பதை பின்வரும் அடிகள் மூலம் அறியலாம்.

**'' நெல்நீர் எறிந்து விரிச்சி ஓர்க்கும்**

**செம்முது பெண்டின் சொல்லும் நிரம்பா''** [35]

தெய்வம் உறையும் இடங்களுக்கு மகளிர் நெல்லும் மலரும் கொண்டு சென்று வழிபடுதல் சங்க காலப் பழக்கம். தாம் விரும்பி மேற்கொள்ளும் செயல் நன்கு நடைபெறுதலை விரும்பி அதற்கான ஊரின் புறத்தே படியில் நெல்லும் மலரும் கொண்டு தெய்வத்தை வழிபட்டனர். அவ்வழி செல்வோர் கூறும் சொல் இனிதே நிறைவேறும் என்று எண்ணினர் என்பதை பின்வரும் வரிகள் விளக்குகிறது.

**'' .................... நெல்லொடு**

**நாழி கொண்ட நறுவீ முல்லை**

**அரும்பவிழ் அலரி தூஉய்க்கை தொழுது**

**பெருமுது பெண்டிர் விரிச்சி நிற்ப''** [36]

என்றும் 'விரிச்சியும் நில்லாம்' [37] 'திருந்திழை மகளிர் விரிச்சி நிற்ப' [38] என்றும் விரிச்சிகேட்டமைக்குச் சான்றுகள் உள்ளன.

**கொல்லிப் பாவை**

அழகும் திறமையும் வாய்ந்த பாவை கொல்லிமலையில் இருந்ததை குறுந்தொகை, நற்றிணை, கலித்தொகை, அகநானூறு முதலான சங்கப் பாடல்கள் விளக்குகின்றன. இப்பாவை தெய்வத்தால் எழுதப்பட்டது என்று பலராலும் புகழப்படும் இயல்பு வாய்ந்தது. இது தலைவியின் இயல்பைக் குறிப்பிட உவமையாகப் பயன்படுத்தப் பட்டுள்ளது கொல்லி

மலையில் வாழ்ந்த மக்களின் வழிபாட்டுத் தெய்வமாக இருந்தது கொல்லிப்பாவை பற்றிய குறிஞூபபுகள் பின்வரும் பாடல் பகுதிகளில் விளக்கப்பெறுகின்றன.

'' பெரும்பூண் பொறையன் பேஎம் முதிர் கொல்லிக்
கருங்கட் தெய்வம் குடவரை எழுதிய
நல்லியல் பாவை''[39]

'' ............கொல்லி
ஒளிறு அடுக்கத்து வியலகம் பொறக்
கடவுள் எழுதிய பாவை'' [40]

'' நிலைபெறு கடவுளை ஆக்கிய
பலர் புகழ் பாவை'' [41]

'' ........... கொல்லிக் குடவரை
பூதம் புணர்த்த புதிது இயல் பாவை'' [42]

காற்று, இடி, மழை முதலியன தாக்கினாலும் வேறு பல இடையூறுகள் ஏற்பட்டாலும் இவ்வுலகமே பெயர்ந்தாலும் தன் அழகிய வடிவம் கெடாத இயல்புடையது கொல்லிப்பாவை என்பதைப் பின்வரும் நற்றிணைப் பகுதி உணர்த்தும்.

'' கால் பொருது இடிப்பினும், கதழ் உறைகடுகினும்,
உரும் உடன்று எறியினும், ஊறு பல தோன்றினும்
பெரு நிலம் கிளரினும், திரு நல உருவின்
மாயா இயற்கைப் பாவை''[43]

**தை நீராடல்**

சங்க கால மக்கள் தை மாதம் நீராடி நோன்பு இருந்து, பின்னர் உண்ணும் பழக்கம் கொண்டிருந்தனர் என நற்றிணை போற்றியுள்ளது.

**'' ........... நோன்பியர்**

**கை ஊண் இருக்கையின் தோன்றும் நாடன்''[44]**

என விருந்தோம்பும் பண்பிலும் தலைவனாக இருந்ததை இட்பாடல் அறிவிக்கின்றது. விரும்பிய கணவனை அடைதற் பொருட்டு, தைத் திங்களில் நீராடி மகளிர் நோன்பு மேற்கொண்டனர் என்பதைப் பூதன் தேவனார் குறிப்பிட்டுள்ளார்.

**'' தைஇத் திங்கள் தண்கயம் படியும்''[45]**

தைத்திங்கள் பனி மிகுதியாயிருப்பதினால் நீர் நிலைகள் குளிர்ச்சி பொருந்தி காணப்படும். அவற்றில் இளமகளிர் நீராடி நோன்பிருப்பர் என ஐங்குறுநூறு பாடியுள்ளது.

**'' தைஇத் திங்கள் தண்கயம் போல''[46]**

கன்னிப் பெண்கள், வைகறைப் பொழுதில், தாய் அருகில் நின்று தைநீராடினர். இவ்வாறு நீரில் நின்று தவம் செய்து அந்தணர் வேத நெறிப்படி வளர்த்த வேள்வித் தீயினை வலமாக வந்து வணங்கி வழிபட்டனர் என்பதைப் பின்வரும் பரிபாடல் வழி அறியலாம்.

**'' பொய் ஆடல் ஆடும் புணர்ப்பின் அவர், அவர்**

**தீ எரிப் பாலும் செறி தவம் முன் பற்றியோ,**

**தாய் அருகா நின்று தவத் தைந் நீராடுதல்**

**நீ உரைத்தி வையை நதி''**[47]

மங்கைப் பருவம் நிலையாக அமைந்திட வேண்டி மகளிர் தை நீராடல் மேற்கொண்டனர். மேலும் தாங்கள் செல்வத்தோடும், சுற்றத்தோடும் நிலைபெறும்படி அருள வேண்டும் எனவும் வேண்டிக் கொண்டனர் என்பதைப் பின்வரும் அடிகள் புலப்படுத்துகின்றன.

**'' கிழவர் கிழவியல் என்னாது, ஏழ்காறும்**

**மழ ஈன்று மல்லற்கேள் மன்னுக! என்மாரும்''**[48]

**'' தையில் நீராடிய தவந்தலைப் படுவாயோ''**[49]

எனும் கலித்தொகைப் பாடலிலும் இதே கருத்து கூறப்பட்டுள்ளது.

**தெய்வச் சீற்றம் தணித்தல்**

நற்றிணைப் பாடலில் தெய்வச் சீற்றம் தணிதல் பற்றிக் குறிப்பிடப் பட்டுள்ளது. வருந்துகின்ற சினம் கொண்ட தெய்வத்தின் முன்பு, பாணர் சீறியாழை மீட்டிப் பாடினால் தெய்வத்தின் சீற்றம் தணியும். அதுபோல் குருகு இசையை குரலில் எழுப்பியதாம்.

**'' தெறல் அருங் கடவுள் முன்னர், சீறியாழ்**

**நரம்பு இசைத்தன்ன இன் குரற் குருகு''**[50]

என்பதால் சீறியாழின் ஒலியே குருகின் ஒலி என அறியலாம்.

கானவர் சுற்றத்தோடு மலையில் சூழ்ந்ததும் மலைத் தெய்வத்திற்குப் பலி இட்டு வணங்கியமையும் மழை பொழிந்தால் தெய்வத்தின் சீற்றம்

தணியும் என்பதால் மழை பொழிய இறையை வேண்டியமையும் பற்றிய குறிப்புகளும் நற்றிணையில் உள்ளன.

**‘‘ ............கானவன்**

**அணங்கொடு நின்றது மலை, வான் கொள்க’ எனக்**

**கடவுள் ஓங்கு வரை பேண்மார், வேட்டு எழுந்து’’**[51]

**கடவுட் பலி**

இறையருளால் கிடைத்த இரையை இறைக்கு நன்றியுடன் படைத்து வழிபாடு செய்தனர். குறவர் தம் தோட்டத்தில் விளைந்த தினைக் கதிரைத் தாம் மட்டும் உண்ணுதல் கூடாது எனக் கருதி முதற் கதிர்களைத் தெய்வத்திற்குப் பலியாக இட்டனர். பின்னர் சுற்றத்தாருடன் உண்டனர் என்பதைப் பின்வரும் அடிகள் காட்டுகின்றன.

**‘‘ புனவன் துடவைப் பொன்போல் சிறுதினைக்**

**கடிஉண் கடவுட்கு இட்ட செழுங்குரல்’’**[52]

குறிஞ்சி நிலத்தில் முருகக்கடவுளுக்குப் பலியிட்டு வெறி எடுத்து வணங்கியமையை,

**‘‘ பலி பெறு கடவுட் பேணி கலி சிறந்து’’**[53]

என்பதால் அறியலாம்.

**‘‘ கணம் கெழு கடவுட்கு உயிர் பலி தூஉய்**[54]

நின்ற தலைவியைக் காட்டும் நற்றிணை தலைவியை ஒருபொழுதும் பிரிய மாட்டேன் என்று கடவுள் முன் சூளுரைத்துப் பொருள் பெறுவதற்காகச் சென்ற தலைவனுக்கு எவ்விதத் தீங்கும் நேராதவாறு காப்பதற்காகத் தலைவி தெய்வத்திற்குப் பலியிட்டு வணங்கினால் இது கடவுளுக்குப்

பலியிடும் பழக்கம் பண்டைக் காலத்தில் நிலவி இருந்ததைக் காட்டும். இன்றும் கோயில் முன் பலிபீடம் உள்ளதை காணலாம்.

**'' உயிர் பலி பெறூஉம் உருகெழு தெய்வம்''[55]**

எனும் தொடர் மேலும் ஒரு சான்றாகும்.

**காக்கைக்குப் பலியிடுதல்**

நொச்சி மாலையைச் சூடிய குயவர் பலி இடும் பழக்கம் இருந்தது. தாம் இடுகின்ற பலியை உண்ணுவதற்காகத் தெய்வங்களையும் காக்கைகளையும் குயவர் அழைப்பர். இவ்வாறு, காக்கைக்குச் சோற்றுப் பலியிடும் பழக்கம் சங்க காலம் முதலே இருந்தது.

**'' மணிக் குரல் நொச்சித் தெரியல் சூடி,**

**பலி கள் ஆர் கைப் பார் முது குயவன்**

**இடு பலி நுவலும் அகன்தலை மன்றத்து''[56]**

சோற்றுப் பலியைக் காக்கை உண்டதை பல பாடல்கள் காட்டும்.

**'' பலியுண் காக்கை''[57]**

**'' உகுபலி அருந்திய தொகுவிரற் காக்கை''[58]**

**'' செங்சோற்ற பலிமாற்றிய கடுங்காக்கை''[59]**

**'' விருந்து வரக் கரைந்த காக்கையது பலியே''[60]**

இவற்றிலிருந்து காக்கை பலிச் சோறு உண்பதற்காக காத்திருந்து ஆலமரத்தின் கீழ் இட்ட உதிர்ந்த சோற்றுப் பலியை உண்ணக் காக்கை தம் இனத்துடன் வந்ததை அறிய முடிகின்றது.

மக்கள் இடைவிடாது தெய்வத்திற்குப் பலி கொடுத்து வந்தனர் என்றாலும் பலிகொடாமலும் இருந்தமையை அறிய முடிகிறது.

'' ஒழுகு பலி மறந்த மெழுகாப் புன்திணை'' [61]

பலிகண் மாறிய பாழ்படு பொதியில்''[62]

காக்கை கரையின் விருந்தினர் வருவர் என்பது பண்டுதொட்டு நிலவி வரும் நம்பிக்கையாகும். காக்கைக்குப் பலியிடுதலும் பண்டை நாள் தொட்டுத் தமிழரிடையே நிலவி வரும் வழக்கமாகும். காக்கை கரைவது நல்ல நிமித்தமாகவும் ஆந்தையின் குழறல் தீ நிமித்தமாகவும் கருதப்பட்டன. எனவே, காக்கை கரைவதற்குக் கைம்மாறாக நல்லுணவு தருவதாகக் கூறி அழைத்தனராம்.

**நாட்பலி இடுதல்**

பண்டைக் காலத்தில் விடியற்காலையில் நாட்பலி கொடுக்கும் வழக்கம் இருந்ததை அறியலாம். மகளிர் காட்டு மல்லிகையைத் தம் கரிய மயிரிலே சூடிக் கொண்டு வைகறைப் பொழுதில் போர் முனையில் பகைவரை வென்று வந்ததற்காக, முதிர்ந்த கள்ளாகிய நறவினைப் பலியாகக் கொடுத்ததையும் வெண்மையான சோற்றினை உணவாக இட்டதையும் அகநானூற்றுப் பாடல் குறிப்பிட்டுள்ளது.

'' நனைமுதிர் நறலின் நாட்பலி கொடுக்கும்

வால்நிணப் புகவின் வடுகர் தேஎத்து''[63]

பலி இடாமைக்கு காரணத்தை ஓர் அகநானூற்றுப் பாடல் சுட்டியுள்ளது.

'' நாட்பலி மறந்த நரைக்கண் இட்டிகை,

புரிசை மூழ்கிய பொரிஅரை ஆலத்து''[64]

என்பதால் மழை பெய்யாமையும் அதனால் நாளும் இறைவனுக்கு இடுகின்ற விடியற்காலைப் பலியை இட மறந்ததையும் அதனால் பலிபீடம் பொலிவின்றிப் பாழ்பட்டுக் கிடந்ததையும் அறியலாம்.

மல்லிகை மலர்கள் கொண்டு நெடிது காலம் நிலைத்து நிற்கும் நடுகல் தெய்வத்திற்கு நாட்பலியிட்டு வழிபாடு செய்துள்ளனர்.

'' நெடுநிலை நடுகல் நாட்பலிக் கூட்டும்
சுரனிடை''[65]

என்பதால் நடுகல்லுக்கும் பலிநேர்ந்தமையை அறியலாம். உயிர்ப்பலி அன்றி உணவு, நறவு ஆகியவற்றைப் படைப்பதையும் பலியிடுதல் என்றே குறிப்பிட்டுள்ளமை எண்ணத்தக்கதாகும்.

**குருதிப் பலி கொடுத்தல்**

பால் தரும் ஆநிரை கொண்டவர் வெட்சி வீரர். இவர் கரந்தை வீரரோடு வலிய வாள் கொண்டும் அம்புகளை வில்லில் தொடுத்தும் போரிட்டு நெடுந்தொலைவு விரட்டி அடித்தனர். பின்னர், இவ்வெட்சி மறவர், கொற்றவை தெய்வத்திற்குக் குருதிப் பலியிட்டு வழிபட்டனர். தெய்வம் வாழும் வேப்ப மரத்தடியில், ஆநிரையைக் கொண்டு வந்து, அவற்றுள் கொழுப்புடைய ஆவினைக் கொன்று, அதன் குருதியை மரத்தின் மேல் தெளித்துப் பலியிட்டு, அதன் புலாலைச் சமைத்து உண்டனராம்.

'' தெய்வம் சேர்ந்த பராரை வேம்பில்
கொழுப்புஆ எறிந்து, குருதி தூஉய்;
புலவுப்புழுங்கு உண்ட வான்கண் அகல் அறை''[66]

அக்காலத்தில் நடைபெற்ற கொற்றவை வழிபாடும் குருதிப் பலியிடும் வழக்கத்தையும் அகநானூற்றின் மூலம் அறியலாம்.

**முருகனுக்குக் கொடுக்கும் பலி**

தினை அரிசிச் சோற்றுடன் குருதியைக் கலந்து வேலனுக்குப் பலியிட்டதையும் ஆட்டின் குட்டியைப் பலியிட்டதையும் அறிய முடிகின்றது.

> **‘‘ முருகு அயர்ந்து வந்த முதுவாய் வேல!**
> **சினவல் ஓம்புமதி வினவுவது உடையேன்;**
> **பல்வேறு உருவின் சில்அவிழ் மடையொடு**
> **சிறுமறி கொன்று, இவள் நறுநுதல் நீவி**
> **வணங்கினை கொடுத்தி ஆயின், அணங்கிய**
> **விண்டோய் மாமலைச் சிலம்பன்**
> **ஒண்தார் அகலமும் உண்ணுமோ பலியே’’**[67]

**இடுகாட்டில் இடும் பலி**

இறந்த பின்பு பிணத்தைப் பாடையிற் கொண்டு சென்று சிதையில் இடுவர். பின்பு உப்பின்றி வேக வைத்த சோற்றைப் பலி உணவாகப் படைத்து இச்சோற்றைப் புலையன் பின்புறம் பாராது நின்று மண்ணில் விட்டெறிவான். பிணத்தை எரியூட்டுவதற்கு முன்பு நிகழ்ந்த வழக்கம் இதுவாகும்.

> **‘‘ உப்பு இலாஅ அவிப்பு புழுக்கல்**
> **கைக் கொண்டு, பிறக்கு நோக்காது,**

**இழி பிறப்பினோன் ஈயப் பெற்று,**

**நிலம்கலன் அக, இலங்குபசி மிசையும்**

**இன்னா வைகல் வாரா முன்னே''**[68]

என்னும் புறநானூற்றுப் பாடல் அடிகள் இவ்வழக்கத்தினைக் காட்டும்.

**மலைவாழ் தெய்வத்திற்கு இட்ட பலி**

சங்க காலத்தில், குல தெய்வத்திற்குப் பலியிடும் வழக்கம் இருந்தது. தலைவனின் பிரிவினால் வருந்திய தலைவி தலைவன் விரைந்து வந்து தன்னைத் திருமணம் செய்யக் கோரி இல்லுறைத் தெய்வத்திற்குத் தன் மெல்லிய விரல்களைக் குவித்துப் பலியிட்ட செய்தியைப் பின்வரும் அகநானூற்றுப் பாடல்பகுதி வெளிப்படுத்தும்.

**'' வல்லே வருக, வரைந்த நாள்! என,**

**நல் இறை மெல்விரல் கூப்பி,**

**இல்உறை கடவுட்கு ஆக்குதும், பலியே''**[69]

கை குவித்து வணங்கி நிற்பதும் பலி என்றே கூறப்பட்டுள்ளது.

**வெண் சோற்றுப் பலி**

பேரரசர் வெற்றியை வேண்டித் தெய்வங்களுக்குப் பராய்க் கடன் வழங்க வெண்சோற்றைத் தூவினர். மன்னர் தம் அரண்மனை முற்றத்தில் வெற்றியை வேண்டித் தெய்வங்களுக்கு வெள்ளிய சோற்றுத் திரளைத் தூவி வணங்கினராம்.

'' காவல் மன்னர் கடைமுகத்து உகுக்கும்

போகுபலி வெண்சோறு போலத்

தூவும் வல்லன்''[70]

என்பதால் தூவப்பட்ட சோற்றைப் பற்றி அறியலாம். அது பறவை முதலியவற்றிற்கு உணவாகும்.

## ஆட்டினை பலி கொடுத்தல்

ஆட்டுக்கிடாயை வெட்டி அதன் இறைச்சியைக் கிழித்து சூட்டுக் கோலில் கோத்துச் சுட்டு தெய்வங்களுக்கு இலையில் பலியாகப் படைத்ததைப் பின்வரும் புறநானூற்று அடிகள் எடுத்துக் காட்டுகின்றன.

'' உழவுஒழி பெரும்பகடு அழிதின் றாங்கு,

அசெங்கண் மகளிரொடு சிறுதுனி அனைகு,

அமகட் தேறல் ஆய்கலத்து உகுப்ப,

கெடல் அருந் திருவ!

மடைவேண்டு நர்க்கு இடை அருகாது,

அவிழ்வேண்டு நர்க்கு இடை அருளி''[71]

## தேக்கிலையில் இடும் பலி

எயிற்றியர் தாம் சமைத்த புல்லரிசிச் சோற்றினைக் கருவாட்டோடு சேர்த்துத் தெய்வத்திற்குப் பலியாகத் தேக்கிலையில் குவித்துத் தந்தனர்.

'' முரவுவாய்க் குழிசி முரிஅடுப்பு ஏற்றி,

வராது அட்ட, வாடுஊன், புழுக்கல்

வாடாத் தும்பை வயவர் பெருமகன்,

ஓடாத் தானை ஒண்தொழிற் கழற்கால்,

செவ்வரை நாடன் சென்னியம் எனினே

தெய்வ மடையின் தேக்கிலைக் குலைஇ, நும்

பைதீர் கரும்பொடு பதம்மிகப் பெறுகுவிர்''[72]

என்று பெரும்பாணாற்றுப்படை சுட்டும்.

**பூப்பலி**

குன்றுகள் நிறைந்த ஊரிலே வேங்கை மரங்கள் நிறைந்திருக்கும். இவ்வேங்கை மரங்களின் பொன்னிறப் பூக்களை உதிர்த்துத் தூவி வீட்டு முற்றத்தினை அழகு செய்து அம்முற்றத்திலே குறவர் குரவைக் கூத்து ஆடி வேலனை அழைத்து வெறியாட்டு நடத்தினர். இவ்வாறு நாள்தோறும் காவல் தெய்வமான முருகனுக்குத் தமது இல்லத்தைத் தீங்கு நேரா வண்ணம் காத்தருளுமாறு வேண்டிப் பூப்பலி இட்டு வணங்கினர்.

'' குன்ற வேலிச் சிறுகுடி ஆங்கண்,

மன்ற வேங்கை மணநாட் பூத்த

மணிஏர் அரும்பின் பொன்வீ தாஅய்

வியல்அறை வரிக்கும் முன்றில், குறவர்

மனைமுதிர் மகளிரொடு குரவை தூங்கும்

ஆர்கலி விழவுக் களம்கடுப்ப, நாளும்,

விரவுப்பூம் பலியொடு விரைஇ அன்னை

கடியுடை வியல்நகர்க் காவல்கண்ணி,

'முருகு' என வேலற் தரூஉம்

பருவ மாகப் பயந்தன்றால், நமக்கே''[73]

என அகநானூறு உரைப்பதால் அறியலாம்.

தெய்வத்திற்கு வழிபாட்டின் போது பூக்களைப் பலியாக இட்டனர். பூக்களை உண்ணுவதற்காகத் தாம் வாழும் பாழான மன்றத்தை இடித்துக் கொண்டு பேய்கள் உணவு உண்ண வந்தனவாம்.

**'' வேனில் முருக்கின் விளை துணர் அன்ன**

**மாணா விரல வல் வாய்ப் பேஎய்**

**மல்லல் மூதூர் மலர்ப் பலி உணீஇய,**

**மன்றம் போழும் புன்கண் மாலை''**[74]

மேலும் 'மலரணி மெழுக்கம் ஏறி' என்ற பட்டினப்பாலையின் தொடரும் (248) மலர்ப்பலி இட்டதைக் குறிப்பிட்டுள்ளது.

**தினை அரிசியைப் பிரப்பங்கூடையில் நிரப்பிப் பலி கொடுத்தல்**

ஆட்டின் குட்டியை அறுத்தும் தினை அரிசியைப் பலியாகக் கூடையில் வைத்தும் வழிபட்டனர்.

**''மறிக்குரல் அறுத்து, தினைப் பிரப்பு இரீஇ''**[75]

என்னும் குறுந்தொகை அடியினால் இவற்றை அறியலாம். தலைவியைப் பேய் தீண்டியிருப்பதை நீக்கவே வெறியாடலை நிகழ்த்தினர். ஆட்டின் உதிரம் தோய்ந்த கையினால் வேலன் தலைவியின் மயிரை நீ வினான். அதனால் அவளை விட்டு நீங்கும் என்று நம்பினர்.

**''அறிதல் வேண்டும் எனப் பல்பிரப்பு இரீஇ''**[76]

**''சில்பலிச் செய்து பல்பிரப்பு இரீஇ''** [77]

தினையைப் பலியாக நிரப்பி வைத்து வேலனை அழைத்து, வெறியாட்டு நிகழ்ச்சிக் கடவுளை வாழ்த்திய வழக்கம் குறிஞ்சி மக்களிடையே இருந்தது.

**வணிகர்களின் வாழ்வு**

பட்டினப்பாலையில் வணிகரின் வாழ்க்கை முறை பற்றிக் குறிப்பிடப்பட்டுள்ளது. களவு கொலைத் தொழிலை நீக்கி வாழும் வாழ்க்கையை வணிகர் கடைப்பிடித்தனர் தேவர்களுக்குப் பலி தந்து வழிபட்டனர். வேள்வி செய்து அவற்றின் ஆவுதிப் பொருட்களைத் தெய்வங்களுக்குக் கொடுத்தனர். பசு முதலான உயிர்களைப் பாதுகாத்தனர். விளைந்த நெல், பாக்கு முதலானவற்றைப் பிறருக்குக் கொடுத்தனர். அறச் செயல் பலவற்றைச் செய்து புகார் நகர வணிகர் வாழ்ந்தனர் என்பதைப் பின்வரும் அடிகள் மூலம் அறிய முடிகிறது.

**'' கொலை கடிந்தும் களவு நீக்கியும்**
**அமர்ப் பேணியும் ஆவுதி அருத்தியும்**
**நல் ஆனொடு பகடு ஓம்பியும்**
**நான் மறையோர் புகழ் பரப்பியும்**
**பண்ணியம் அட்டியும் பசும்பதம் கொடுத்தும்**
**புண்ணியம் முட்டாத் தண்நிழல் வாழ்க்கை''**[78]

உதியன் சேரலாதன், வெளியன் வேண்மான் நல்லினி என்போருக்கு மகனாக இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன் தோன்றினான். இவன் ஆரிய மன்னரை வென்றான். கொடுஞ்சொற்கள் பேசிய யவனர்களைச் சிறைப்படுத்தித் தலையில் நெய்யை ஊற்றிக் கைகளைப் பின்புறமாகக் கட்டிவிட்டான். இவர்களை விடுவிக்க விலைமதிப்பற்ற அணிகலன்கள் வயிரங்களைப் பெற்றான் எனப் பாடியுள்ளது.

**'' நயன் இல் வன்சொல் யவனர்ப் பிணித்து,**

**நெய்தலைப் பெய்து, கை பிற் கொளீஇ**

**அரவிலை நன்கலம் வயிரமொடு கொண்டு**

**பெருவிறல் மூதூர்த் தந்து, பிறர்க்கு உதவி''[79]**

**பண்டட மாற்று வணிகப் பழக்க வழக்கம்**

உப்பை விற்று நெல்லைப் பெற்று, அதனை உரலில் போட்டுக் குற்றி அரிசியாக்கிச் சமைத்து உண்பதும் உமணர் வழக்கமாகும்.

நற்றிணை மற்றும் அகநானூற்றுப் பாடல்களில் பண்டமாற்று வாணிபம் பற்றிக் குறிப்பிடப்பட்டுள்ளது. மருத நிலத்தில் விளைந்த வெண்ணெல்லிற்கு விலையாக நெய்தல் நிலத்தில் விளைந்த உப்பை பெற்று மணற்பரப்பிய வழியில் வண்டிகளில் வரிசையாக வந்து பொருட்களை விற்றனர். உமணர்கள் எனப்படுபவர் உப்பு வணிகராவர்.

**'' தம் நாட்டு விளைந்த வெண்ணெல் தந்து**

**பிற நாட்டு உப்பின் கொள்ளை சாற்றி,**

**நெடு நெறி ஒழுகை நிலவு மணல் நீந்தி''[80]**

இப்பாடல் மூலம் அறியலாம்.

**'' நெல்லின் நேரே வெண்கல் உப்பு எனச்**

**சேரி விலைமாறு கூறலின்''[81]**

என இவ்வகநானூற்றுப் பாடல் பரதவ மக்கள் பெரிய உப்பங்கழிகளில் உப்பை விளைவித்து பல குன்றுகளைக் கடந்து சென்று வெண்ணிறக் கல் உப்பு நெல்லுக்கு ஒத்த அளவுடையதாகும் என்று கூறிப் பண்டமாற்று வாணிபம் செய்தனர் என்பதையும் அறிய முடிகிறது.

### நடுநிலை தவறா வணிகமுறை

வணிகர் பிறரிடமிருந்து வாங்கும் பொருளைத் தாம் கொடுக்கும் பொருளுக்கு மிகுதியாக வாங்காமலும் தாம் மற்றவர்களுக்குக் கொடுக்கும் பொருளை வாங்கிய பொருளுக்குக் குறைவாகக் கொடுக்காமலும் பல்வேறு பொருட்களையும் விலை கூறி விற்றனர். நடுநிலையில் இருந்து பொருள் ஈட்டினர் என்பதைப் பின்வரும் பட்டினப்பாலைப் பகுதி அறிவுறுத்தும்.

**''கொடுமேழி நசை உழவர்**
**நெடு நுகத்துப் பகல் போல**
**நடுவ நின்ற நன்னெஞ் சினோர்**
**வடுவஞ்சி வாய்மொழிந்து**
**தமவும் பிறவும் ஒப்ப நாடிக்**
**கொள்வதூஉம் மிகை கொள்ளாது கொடுப்பதுஉம்**
**குறை கெடாது பல்பண்டம் பகர்ந்து வீசும்''**[82]

எனும் பாடல் அடிகள் மூலம் அறியலாம்.

### ஏற்றுமதி இறக்குமதி பண்டங்களில் ஆட்சி இலச்சினை பொறித்தல்

சுங்கம் கொள்வோருக்குப் பொருட்கள் குறைவில்லாமல் கிடைக்கும் கப்பலில் வந்த பொருட்களை நிலத்தில் இறக்கியும் நிலத்தில் உள்ள பொருட்களைக் கப்பலில் ஏற்றியும் சுங்கம் கொண்டனர். பின்னர் சோழர்களின் புலியாகிய இலச்சினையை அப்பண்டங்களில் பொறித்தனர்.

**'' நீரினின்று நிலத்து ஏற்றவும்**
**நிலத்தினின்று நீர்ப் பரப்பவும்**
**அளந்து அறியாப் பல பண்டம்**

வரம்பு அறியாமை வந்து ஈண்டி
அருங் கடிப் பெருங்காப்பின்,
வலியுடைய வல் அணங்கின் நோன்
புலி பொறித்து, புறம்போக்கி
மதி நிறைந்த மலி பண்டம்
பொறி மூடைப் போர்''[83]

நாட்டின் வளம் குறித்து நின்றதாகும்.

பதிற்றுப்பத்தின் இரண்டாம் பத்து பதிகப் பாடலில் யவனர்களை விடுவிக்க விலைமதிப்பற்ற பொருட்களைக் கேட்கும் முறை இருந்தது பற்றிய செய்தி உள்ளது. ஏற்றுமதி இறக்குமதிப் பண்டங்களில் சுங்கவரி பெற்றமைக்கான ஆட்சி இலச்சினை பொறிக்கும் வழக்கம் இருந்ததை மேற்காண் பட்டினப்பாலைப் பாடற்பகுதி தெளிவு படுத்தும்.

**உப்பு வணிகர் பழக்கவழக்கம்**

தினைப்புனத்தில் யானை வராமற் காக்கும் காவலர் சகடம் வண்டி மேலே பரண் அமைத்துச் சிறுகுடில் கட்டி இருந்தனர். அக்குடிலின் வாயிலில் துளையிடப்பட்ட அறையை உடையதுமாகிய சிறிய உரலைக் கொண்டிருந்தனர். இந்த உரலின் நடுவிலுள்ள துளையில் கயிறிட்டுச் சகடத்தைக் கட்டியிருந்தனர். உமணர் இவ்வுரலைத் தாம் தங்கும் இடங்களில் நெல் முதலியன குத்துவதற்குத் தம்முடன் கொண்டு போயினர்.

சகடத்தின் முன்னே நுகத்தடி பிணிக்கப்பட்ட மரம் மூக்கு எனப்பட்டது. இன்றும் இது 'மூக்கணை' என்றே வழங்கி வருகின்றது. உமண மகளிர் சகடத்தின் மூக்கணையிலிருந்து எருதுகளைத் தூண்டி ஓட்டிக் கொண்டு வரும் வழக்கத்தை அறிய முடிகின்றது.

வண்டியின் அருகில் நடந்து வரும் உமணர் தம் பாண்டி நாட்டவர் என்பதற்கு அடையாளமாகவும் தங்களின் பாதுகாப்பிற்காகவும் வேப்பந்தழையுடன் பிற தழைகளையும் சேர்த்துத் தொடுத்த மாலையை உடலில் அணியும் பழக்கம் கொண்டிருந்தனர்.

சகடம் மணல் முதலிய இடங்களில் அழுந்தும்போது தள்ளவும் உப்பு மூட்டையை ஏற்றவும் நன்கு பயிற்சி பெற்றிருந்தனர். பாலை நிலத்தில் செல்லும் பொழுது எருதுகட்கு உண்ண வைக்கோலும் வண்டியிலேயே கொண்டு சென்றனர். வண்டிகளில் பூட்டப்பெற்ற எருதுகள் சோர்வுற்றால் மாற்றிப் பூட்டுவதற்காக வேறு எருதுகளையும் உடன் கொண்டு சென்றனர். உமணர் கல்லெனும் ஆரவாரத்தோடு எருதுகளை உரப்பியும் ஒருவரோடு ஒருவர் சொல்லாடியும் கூட்டமாகவும் செல்லும் வழக்கம் கொண்டிருந்தனர் எனப் பெரும்பாணாற்றுப்படை உமணர் தம் செயல்களை விவரித்துள்ளது.

'' கொழுஞ்சூட்டு அருந்திய திருந்து நிலை ஆரத்து
முழவின் அன்ன முழுமர உருளி
எழூஉப் புணர்ந்தன்ன பரூஉக்கை நோன்பார்
மாரிக் குன்றம் மழை சுமந்தன்ன
ஆரை வேய்ந்த அறைவாய்ச் சகடம்

**வேழம் காவலர் குரம்பை ஏய்ப்பக்**

**கோழி சேக்கும் கூடுடைப் புதவின்,**

**முளை எயிற்று இரும்பிடி முழந்தாள் ஏய்க்கும்**

**துளை அரைச் சீறுரல் தூங்கத் தூக்கி,**

**நாடக மகளிர் ஆடுகளத்து எடுத்த**

**விசிவீங்கு இன்இயம் கடுப்பக் கயிறுபிணித்து,**

**காடி வைத்த கலனுடை மூக்கின்,**

**மகவுடை மகடூஉப் பகடுபுறம் துரப்ப**

**கோட்டு இணர் வேம்பின் ஏட்டு இலை மிடைந்த**

**படலைக் கண்ணிப் பருஏர் எறுழ்த் திணிதோள்**

**முடலை யாக்கை, முழுவலி மாக்கள்**

**சிறுதுளைக் கொடுநுகம் நெறிபட நிறைந்த**

**பெருங்கயிற்று ஒழுகை மருங்கில் காப்ப**

**சில்பத உணவின் கொள்கை சாற்றி,**

**பல் எருத்து உமணர் பதிபோகு நெடு நெறி''[84]**

உப்பு வணிகர் செல்லும் ஊர்கள்தோறும் பகற்பொழுதினில் வணிகரும் சென்றனர். இவ்வணிகர் மலையில் உள்ள மணி, பொன், சந்தனம் முதலிய பொருட்களையும் கடலில் உள்ள முத்து, பவழம், சங்கு முதலிய பொருட்களையும் வாணிபம் செய்தனர். உயர்ந்த இப்பொருட்களைக் கொடுத்து விலையாக அரிய உணவுப் பொருளைப் பெற்று வணிகர் வாணிபம் செய்தனர். இவ்வணிகர் காலை மூடிய செருப்பு அணிந்திருந்தனர். உடம்பில் சட்டை அணிந்தனர். கள்வர் எய்யும்

அம்பினைக் கண்டு ஓடாமல் எதிர் நிற்கும் ஆற்றலை வணிகர் கொண்டிருந்தனர் என்பதையும் அறிய முடிகிறது.

**சுங்கவரி விதிப்புப் பழக்கம்**

மன்னர்கள் வணிகர்களிடம் இருந்து சுங்கப் பொருள் பெற்றனர். வில்லுடை மறவர்களால் சுங்கவரி வாங்குமிடம் பாதுகாக்கப்பட்டிருந்தது.

'' எல்லிடைக் கழியுநர்க்கு ஏமம் ஆக
மலையவும் கடலவும் மாண்பயம் தரூஉம்
அரும்பொருள் அடுத்தும், திருந்துதொடை நோன்தாள்
அடிபுதை அரணம் எய்தி, படம்புக்கு
பொருகணை தொலைச்சிய புண்தீர் மார்புன்,
விரவுவரிக் கச்சின், வெண்கை ஒள்வாள்,
வரைஊர் பாம்பின், பூண்டுபுடை தூங்க,
கரிகை நுழைந்த சுற்றுவீங்கு செறிவுஉடை,
கருவில் ஓச்சிய கண்அகன் எறுழத்தோள,
கடம்புஅமர் நெடுவேள் அன்ன, மீளி,
உடம்பிடித் தடக்கை ஓடா வம்பலர்
தடவுநிலைப் பலவின் முழுமுதற் கொண்ட
சிறுகளைப் பெரும்பழம் கடுப்ப, மிரியல்
புணர்ப் பொறை தாங்கிய வடுஆழ் நோன்புறத்து
அணர்செவிக் கழுதைச் சாத்தொடு, வழங்கும்
உல்குடைப் பெருவழிக் கவலை காக்கும்
வில்லுடை வைப்பின் வியன்காட்டு இயவின்''[85]

என்பதால் உல்கு என்னும் சுங்க வரி பெறுவதைப் பட்டினப்பாலையும் குறித்துள்ளது.

**'' வேலாழி வியன் தெருவின்**

**நல்லிறைவன் பொருள் காக்கும்**

**தொல் விசைத் தொழின் மாக்கன்**

**காய் சினத்த கதிர்ச் செல்வன்**

**தேர்பூண்ட மாஅ போல**

**வைகல் தொறும் அசைவின்றி**

**உல்கு செய''**[86]

சோர்வின்றிச் சுங்கம் பெற்றனர் என்பதால் போதிய பாதுகாப்பு ஏற்பாடும் செய்யப்பட்டிருந்ததில் வியப்பில்லை.

### சிறுவர் கிலு கிலுப்பை விளையாட்டு

உப்பு வணிகர் வண்டிகளில் ஏற்றி உப்பு மூட்டைகளை விற்கச் செல்லும் போது தம் மனைவி மக்களுடன் பிள்ளைகளைப் போல் வளர்த்த மந்தியையும் உடன் கொண்டு சென்றனர். அம்மந்திகளுக்கு நுணா மரத்தின் கட்டையில் மணிகள் கடைந்து அழகு செய்திருந்தனர். அம்மந்திகள் கிளிஞ்சல்களின் நடுவில் முத்துக்களை வைத்து கிலுகிலுப்பையாக்கி உமணர் குழந்தைகளுடன் விளையாடின நீர் நிலைகளில் விளைந்த முத்து தெருக்களில் கிடந்தன என்பதால் கடலில் விளைந்த முத்தே போற்றப் பெற்றமையை அறியலாம்.

**'' நோன் பகட்டு உமணர் ஒருகையோடு வந்த**

**மகா அர் அன்ன மந்தி, மடவோர்**

நகா அர் அன்ன, நளிநீர் முத்தம்

வாள்வாய் எருந்தின் வயிற்றகத்து அடக்கி

தோள்புறம் மறைக்கும், நல்கூர் நுசும்பின்

உளர் இயல் ஐம்பால் உமட்டியர் என்ற

கிளர் பூண் புதல்வரொடு கிலுகிலி ஆடும்''[87]

**உடை பழக்கவழக்கம்**

வணிகர் இல்லத்து மகளிர் நுண்மையான ஆடைகளை அணிந்திருந்தனர். கொன்றை அரும்புடைய கிளையில் பனி மாசு படர்ந்தால் போன்று அவ்வாடை இருந்தது.

'' கூழ் உடை நல் இல் கொடும்பூண் மகளிர்

கொன்றை மென்சினைப் பனி தவழ் பவை போல்

பைங்காழ் அல்குல் நுண் துகில் நடக்க''[88]

**அறச்சாலைகள்**

மதுரைக் காஞ்சியில் பலவகையான உணவு பற்றிக் குறிப்பிடப்பட்டுள்ளது. தேனும் பலாப்பழமும் இனிய மாங்கனியும் வேறுபட்ட வடிவினையுடைய வாழைக்காயும் வழுத்துணங்காயும் முந்திரிகைப் பழமும் வாழைப்பழமும் மெல்லிய இலைக்கறிகளும் இனிய பாகினால் கட்டிய சர்க்கரையும் நிலத்தின் கீழ் விளைந்த கிழங்குவகையும் இனிய பால் சாதமும் எனப் பலவகையான உணவுகள் வழங்குகின்ற அறச்சாலைகள் மதுரையில் பல இருந்தன என மதுரைக் காஞ்சி குறிப்பிட்டுள்ளது.

" வேறுபடக் கவினிய தேம் மாங்கனியும்

பல்வேறு உருவின் காயும், பழனும்

கொண்டல் வளர்ப்பக் கொடி விடுபு கவினி

மென்பிணி அவிழ்ந்த குறுமுறி அடகும்

அமிர்து இயன்றன்ன தீம்சேற்றுக் கடிகையும்

புகழ்படப் பண்ணிய பேர் ஊன் சோறும்

கீழ்செல வீழ்ந்த கிழங்கொடு பிறவும்

இன்சோறு தருநர் பல்வயின் நுகர"[89]

## விருந்தோம்பல்

தமிழர் தம் பண்பாட்டு மரபுகளுள் சிறந்தது விருந்தோம்பலாகும். விருந்தோம்பல் என்னும் குடும்பக் கடமையைக் கணவன் மனைவி இருவரும் உடனிருந்து ஆற்றுதலே மரபு. தலைவனும் தலைவியும் ஒருவருடன் ஒருவர் ஊடிக் கொண்டு பேசாதிருக்கும்போது விருந்தினர் யாரேனும் வந்து விட்டால் அவ்விருந்தினர் பொருட்டு அவர்கள் ஊடலைக் காட்டிக் கொள்ளாமல் விருந்திரைப் பேணினர்.

" விருந்துஎதிர் கொள்ளவும் பொய்ச்சூள் அஞ்சவும்

அரும்பெறல் புதல்வனை முயங்கக் காணவும்

ஆங்கு அவிந்து ஒழியும் என் புலவிதாங்காது"[90]

## திருமணம் பேசும் முறை பற்றிய பழக்கம்

குறிஞ்சி நில மக்கள் வேங்கை மலர் மலரும் காலத்தில் திருமணம் செய்யும் பழக்கம் கொண்டிருந்தனர்.

“வேங்கை விரிவு இடம் நோக்கி

வீங்கு இறைப் பணைத் தோள் வரைந்தனன் கொளற்கே”[91]

என்பதால் அறியலாம்.

நல்ல நிகழ்ச்சி நடத்துவதற்கு நல்ல நாள் நல்ல நேரம் பார்க்கும் பழக்கமும் மக்களிடத்தே இருந்தது. நன்னாளில் சுற்றத்தாரோடு மலையில் திருமணம் நிகழ வேண்டினர்.

“நெறி அறி செறி குறி புரிதிரிபு அறியா அறிவனை முந்துறீஇ”[92]

“ நன்று ஆகின்றால் - தோழி! நம் வள்ளையுள்

ஒன்றி நாம் பாட மறை நின்று கேட்டு அருளி

மென்தோட் கிழவனும் வந்தனன்; நுந்தையும்

மன்றல் வேங்கைக் கீழ் இருந்து

மணம் நயந்தனன் அம் மலைகிழவோற்கே”[93]

வேங்கை மரத்தின் கீழிருந்து திருமண முடிவு செய்தனர் என்பதை இப்பாடல் உரைத்துள்ளது. வேங்கை மரம் குறிஞ்சி மக்களின் பண்பாட்டிடமாக இருந்தது. மரவழிபாட்டின் தொன்மையை இச் செய்தி உரைக்கும்.

**தினைப்புனக் காவல்**

தினைப்புனத்தைக் காவல் காக்கும் கடமை பகலில் மட்டுமின்றி இரவிலும் உண்டு. ஆசினிப் பலவின் மீது பரண் அமைத்து அதன் மீது இருந்து காவல் புரிந்தனர். பகற்காவலுக்கு மகளிரும் இரவுக் காவலுக்கு ஆடவரும் செல்லும் வழக்கம் கொண்டிருந்தனர்.

“ பிடியொடு மேயும் புன்செய் யானை

அடிஒதுங்கு இயக்கம் கேட்ட கானவன்

நெடுவரை ஆசினிப் பணவை ஏறி,

கடுவிசைக் கவணையில் கல் கை விடுதலின்,

இறுவரை வேங்கை ஒள் வீ சிதறி

ஆசினி மென்பழம் அளிந்தவை உதிரா

தேன் செய் இறா அல் துளைபடப் போகி,

நறுவடி மாவின் பைந்துணர் உழக்கி,

குலையுடை வாழைக் கொழுமடல் கிழியா,

பலவின் பழத்துள் தங்கும் மலைகெழு வெற்பனை''[94]

ஆசிரியர் அழகிய கற்பனையும் படைத்துள்ளார். யானையின் காலடி ஓசைகேட்ட கானவன் விட்ட கவண்கல் இறுதியில் பலாப்பழத்துள் தங்கிய காட்சி இன்புறத்தக்கதாகும்.

### அந்தணர் தம் பழக்க வழக்கங்கள்

அந்தணர் சாணத்தால் தரையினை மெழுகும் பழக்கம் கொண்டவர். அந்தணர் இல்லங்களில் அவர்கள் வழிபடும் தெய்வங்களைக் காணலாம். கோழியும் நாய்களையும் காண இயலா. வேதம் ஓதுவதும் வேத ஒழுக்கத்தைப் பாதுகாப்பதையும் தங்களுடைய தொழிலாகக் கொண்டிருந்தனர். அவர் தம் இல்லத்தரசி கைகளில் வளையல் அணிவதை வழக்கமாகக் கொண்டிருந்தனர். அந்தணரின் இல்லங்களுக்குச் சென்று மாலைப்பொழுதில் தங்கினால் நெற் சோற்றையும் மிளகு கலந்து கருவேப்பிலை இட்டு வெண்ணெயில் வேக வைத்த மாதுளங்காய்ப் பொறியலையும் நெடிய மாமரத்தினது சிறிய வடுவினைப் பல நாளாகக் காயப்போட்டு வைத்த ஊறுகாயோடு உணவு சமைத்துப் பரிமாறுவர்.

“ செழுங்கன்று யாத்த சிறுதாட் பந்தர்
பைஞ்சேறு மெழுகிய படிவ நல் நகர்
மனை உறை கோழியொடு ஞமலி துன்னாது,
வளைவாய்க் கிள்ளை மறைவிளி பயிற்றும்
மறைகாப் பாளர் உறைபதிச் சேப்பின்
பெருநல் வானத்து வடவயின் விளங்கும்
சிறுமீன் புரையும் கற்பின் நறுநுதல்
வளைக்கை மகடூ வயின் அறிந்து அட்ட
சுடர்க்கடை பறவைப் பெயர்ப்படு வத்தம்
சேதா நறுமோர் வெண்ணெயின் மாதுளத்து
உருப்புற பசுங்காய்ப் போழொடு கறிகலந்து
கஞ்சக நறுமுறி அளைஇ பைந்துணர்
நெடுமரக் கொக்கின் நறுவடி விதிர்த்த
தகைமாண் காடியின் வகைபடப் பெறுகுவீர்”[95]

என உணவுப் பழக்க வழக்கத்தினைப் பெரும்பாணாற்றுப்படை பகர்ந்துள்ளது.

அந்தணர் துறவு உள்ளம் கொண்டிருந்தனர். பனி, மழை ஆகியவற்றின் இயல்பினை அறிந்து கூறினர். தலைமக்கட்கு நல்லவை உரைத்தனர். தலைவியும் தலைவனும் ஏவல் வழி நின்றால் அவர்களை அறிவுரை வழங்கி நன்னெறிப்படுத்தினர். அந்தணர் பிறர் இல்லங்களில் உணவு இரந்து உண்டும் வாழ்ந்தனர். அந்தணர் அகத் தூய்மையுடனும் புறத்தூய்மையுடனும் வாழ்ந்தனர். அவர் தம் துறவு வாழ்க்கையில் சோறும் நீரும் அன்றி வேறெதுவும் தேவையில்லை. எட்டு இல்லங்களில் கவளமாகப் பெறப்படாமல் தன் இல்லத்திலேயே உணவு முழுவதையும்

பிச்சையாக அந்தனர் ஏற்குமாறு தருவதாகத் தோழி உரைத்தமையால் பலரும் உணவளிக்க முன் வந்தமையும் ஒவ்வொருவரும் பசியாறும் அளவிற்கு தர முன்வந்தமையும் எண்ணத் தக்கன.

**''ஆசுஇல் தெருவின் ஆசுஇல் வியன்கடை,**
**செந்நெல் அமலை வெண்மை வெள் இழுது**
**ஓர்இல் பிச்சை ஆர மாந்தி,**
**அற்சிர வெய்ய வெப்பத் தண்ணீர்**
**சேமச் செப்பில பெறீஇயரோ, நீயே**
**மின்னிடை நடுங்கும் நடைப்பெயல் வாடை**
**எக்கால் வருவது? என்றி;**
**அக்கால் வருவர், எம் காதலர்ரே''[96]**

வெப்பத்தோடு கூடிய நீரை (வெந்நீர்) மூடியுடன் கூடிய கமண்டலத்தில் (சேமச் செப்பில்) இட்டுப் பயன்படுத்தியதையும் அறியலாம்.

அந்தணர் வேதம் நான்கினில் முதன்மையாய் விளங்கிய இருக்கு, யசூர், சாமம் மூன்று வேதங்களைத் தமக்குப் பொருள் தெரியும்படி ஓதினர். யாகம் முதலியவற்றைச் செய்தனர். அதர்வண வேதம் அந்தணரால் ஓதப்படவில்லை. உயர்ந்த நிலையையுடைய தேவர் உலகத்தை இவ்வுலகில் இருந்தவாறே பெறுகின்ற சிறப்புடையவர். அவர் அறத்தின் வழியிலிருந்து எக்காலத்து தப்பாது வாழ்ந்தனர். பல உயிர்களிடத்தும் அன்பு பொருந்திய நெஞ்சினைக் கொண்டு வேதத்தின் முடிந்த பொருளை (வேதாந்தம்) எக்காலத்திலும் நோக்கினர்.

வேதம் ஓதுதல், அன்புடைய நெஞ்சினராதல், தேவர் உலகம் இவண் நின்று எய்தல், ஒழுக்கத்து நீத்தல், வேதாந்த நிலை உணர்தல், முக்தி

நிலையை இவ்வுலகில் வாழும்போது பெறுதல் என்னும் அந்தணர்க்குப் பள்ளிகள் இருந்தன. பள்ளி என்பது வாழிடமாகும்.

''சிறந்த வேதம் விளங்கப் பாடி,
விழுச்சீா் எய்திய ஒழுக்கமொடு புணா்ந்து,
நிலம் அமா் வையத்து ஒரு தாம் ஆகி,
உயா்நிலை உலகம்இவண் நன்று எய்தும்
அறநெறி பிழையா அன்புடை நெஞ்சின்,
பெரியோா் மேஎய, இனிதின் உறையும்
குன்று குயின்றன்ன அந்தணா் பள்ளியும்''[97]

**பாணருக்கு மலா் சூட்டுதல்**

பண்டைக் காலத்துப் பாணர் முதலியோர்க்குப் பொற்பூச் சூட்டும் வழக்கம் அரசர்க்கு உண்டு. இதனை,

''பாணா் தாமரை மலையவும்''[98]

என்றும்

'' அழல் புரிந்த அடா் தாமரை
ஐது அடா்ந்த நூற் பெய்து,
புனை வினைப் பொலிந்த பொலன் நறுந் தெரியல்
பாறு மயிா் இருந் தலை பொலியச் சூடி
பாண் முற்றுக நின் நாள் மகிழ் இருக்கை''[99]

என்றும்

''எரி அகைந் தன்ன ஏடு இல் தாமரை
கரி இரும் பித்தை பொலியச் சூட்டி,

**நூலின் வலவா நுணங்கு அரில் மாலை**

**வால் ஒளி முத்தமொடு பாடினி அணிய''**[100]

என்றும்

**'' நீவயற் கண்ட பின்றைப் பூவின்**

**ஆடும் வண்டிமிராத் தாமரை**

**சூடா யாதல் அதனினும் இலையே''**[101]

என்றும் சங்கப் பாடல்கள் குறித்துள்ளன.

**வேட்டையாடுதல்**

பாலை நிலத்தில் நீர் வறண்டு காணப்படும். நீர் பெருகுவதற்காகக் குழிகளை உண்டாக்கி அவற்றிலிருந்து ஊறும் நீரைக் குடிப்பது பாலை நில மக்களின் வழக்கம். இரவு நேரங்களில் எங்கும் நீர் கிடைக்காத பன்றிகள் அக்குழிகளில் உள்ள நீரைப் பருக வரும்பொழுது அப்பன்றிகளைக் கொல்வதற்காக குழிகளைச் சூழ்ந்து குழி தோண்டி அதன் உள்ளே மறைந்து கொண்டிருந்து குழியில் விழும் பன்றிகளைக் கொன்றனர்.

இரவில் பன்றி வேட்டையாடும் வேடர் பகல் நேரத்தில் முயலையும் வேட்டையாடினர். முயல் பதுங்கியிருக்கும் புதர்களைக் கோலால் அடித்து வேலியில் வலையைக் கட்டி வெளியே வரும் முயலை அவ்வலையில் மாட்டச் செய்தனர். இவ்வாறு கிடைத்த முயல் பலவற்றை எல்லாரும் கூடி உண்டனர். பாலை நிலக் கானவர்கள் வேட்டையாடுவதைக் குறித்ததின் வழி பாலை நிலமக்களின் உணவுப் பழக்கத்தினையும் அறியலாம்.

**'' மான் அடி பொறித்த மயங்கு அதர் மருங்கின்**

**வான் மடி பொழுதில், நீர்நசை இக் குழித்த**

அகழ்சூழ் பயம்பின் அகத்து ஒளித்து ஒடுங்கி,
புகழா வாகைப் பூவின் அன்ன
வளை மருப்பு ஏனம் வரவுபார்த் திருக்கும்
அரைநாள் வேட்டம் அழுங்கின், பகல்நாள்
பகுவாய் ஞமலியொடு பைம்புதல் எருக்கி
தொகுவாய் வேலித் தொடர்வலை மாட்டி,
முள்அரைத் தாமரைப் புல் இதழ் புரையும்
நெடுஞ் செவிக் குறுமுயல் போக்கு அற வளைஇ,
கருங்கண் கானவர் கடறு கூட்டுண்ணும்
அருஞ்சுரம் இறந்த அம்பர்''[102]

## இடையர் (கோவலர்)

இடையர் ஆடு மாடு மேய்ப்பவர். ஆடுகளின் உணவு தழை. அத்தழையைத் தரையில் போட்டால் அவற்றில் மண் படியும் ஆடும் அவற்றை மிதித்துக் கெடுத்துவிடும். ஆகையால் ஆடுகள் தின்னும் தழையை இடையர்தம் குடிலின் கால்களில் கட்டி வைக்கும் வழக்கம் இருந்தது. அக்குடிலின் கதவுகள் மூங்கிலினால் செறிக்கப்பட்டு இருந்தன. அக்குடிசை வரகு வைக்கோற் கற்றையினால் வேயப்பட்டு இருந்தது. ஆயர் மகள் அதிகாலைப் பொழுதில் துயிலெழுந்து தயிர் கடைந்து வெண்ணெய் எடுத்த பின்னர் மோரைப் பானையிலே ஊற்றி அதைச் சும்மாடு வைத்து தலையில் ஏற்றிச் சென்று விற்று வந்தாள். ஆயர் மகள் நெய் விற்ற விலைக்குப் பசும் பொன் பெறாமல் எருமை, ஆ முதலிவற்றை வாங்கினாள். பொன்னைவிடப் பெரிதாக ஆநிரையை

போற்றப்பட்டுடிருந்தமையை அறியலாம். கீழ்க்காண் பெரும்பாணாற்றுப்படைப் பகுதி இடையர்வாழ்வை தெளிவாக விளக்கும்.

''குளகுஅரை யாத்த குறுங்கால் குரம்பை,
செற்றை வாயில், செறிகழிக் கதவின்,
கற்றை வேய்ந்த கழித்தலைச் சாம்பின்,
அதளோன் துஞ்சும் காப்பின் உதள,
நெடுந்தாம்பு தொடுத்த குறுந்தறி முன்றில்,
கொடுமுகத் துருவையோடு வெள்ளை சேக்கும்
இடுமுள் வேலி எருப்படு வரைபின்,
நள்இருள் விடியல் புள்ளழப் போகி,
புலிக்குரல் மத்தம் ஒலிப்ப வாங்கி,
ஆம்பி வால்முகை அன்ன கூம்புமுகிழ்
உறைஅமை தீம்தயிர் கலக்கி, நுரை தெரிந்து,
புகர்வாய்க் குழிசி பூஞ்சுமட்டு இரீஇ
நாள் மோர் மாறும் நல்மா மேனி,
சிறுகுழை துயல்வரும் காதில், பணைத்தோள்
குறுநெறிக் கொண்ட கூந்தல், ஆய்மகள்
அளைவிலை உணவின் கிளைஉடன் அருத்தி,
நெய்விலைக் கட்டிப் பசும்பொன் கொள்ளாள்,
எருமை, நல், ஆன், கருநாகு பெறூஉம்
மடிவாய்க் கோவர் குடிவயிர் சேப்பின்,
இருங்கிளை ஞெண்பின் சிறுபார்ப்பு அன்ன
பசுந்தினை மூரல் பாலொடும் பெறுகுவிர்'' [103]

இடையர் காடு மேடுகளில் திரிய வேண்டியிருப்பதால் எப்பொழுதும் தொடுதோல் (செருப்பு) அணிந்திருந்தனர். எனவே தோல் அழுந்திய தழும்பு அவரின் கால்களில் படிந்திருந்தன. கையிலே கோலை ஊன்றி இருந்தனர். அதனால் கோல் ஊன்றிய வடு கைகளில் இருந்தன. பால் சோற்றை மூட்டையாகக் கட்டிக் கோலில் முடிந்து அதனைத் தோளில் காவடி போல் போட்டுக் கொண்டு சென்றனர். அக்கோல் அழுந்திய வடு அவர் தம் தோள்களில் படிந்திருந்தன. காட்டில் கிடைக்கும் அழகான மலர்களை மாலையாகத் தொடுத்து அணிந்து கொள்வதில் இன்பம் அடைந்தனர். ஓர் ஆடை மட்டும் அணிந்திருந்தனர்.

கோவலர்க்குக் குழலோசை விருப்பமானதாகும். எனவே காட்டில் கிடைக்கும் மூங்கிலிலேயே துளை செய்து குழலை உருவாக்கிப் பாலைப் பண் இசைத்து மகிழ்ந்தனர். அவ்விசையை வெறுத்த பொழுது குமிழ மரத்தின் தோட்டை வளைத்து மரல் கயிறுகளையே நரம்பாகத் தொடுத்து யாழை உருவாக்கினர். அவ்யாழிலேயே குறிஞ்சிப் பண்ணை இசைத்து மகிழ்ந்தனர் என்பதைப் பின்வரும் பாடல் வரிகளால் அறிய முடிகிறது.

**“தொடுதோல் மரீஇய வடு ஆழ் நோன் அடி,**
**விழுத்தண்டு ஊன்றிய மழுத்தின் வன்கை**
**உறிக்கா ஊர்ந்த மறுப்படு மயிர்ச்சுவல்**
**மேம்பால் உரைத்த ஓரி, ஓங்குமிசைக்**
**கோட்டவும் கொடியவும் விரைஇ, காட்ட**
**பல்பூ மிடைந்த படலைக் கண்ணி**
**ஒன்று அமர் உடுக்கை, கூர்ஆர் இடையன்**
**கன்று அமர் நிரையொடு கானத்து அல்கி,**

அம்நுண் அவிர்புகை கமழ, கைம்முயன்று
ஞெலிகோல் கொண்ட பெருவிறல் நெகிழச்
செந்தீத் தோட்ட கருந்துளைக் குழலின்
இன்தீம் பாலை முனையின், குமிழின்
புழற்கோட்டுத் தொடுத்த மரல்புரி நரம்பின்
வில்யாழ் இசைக்கும், விரல் எறி, குறிஞ்சி,
பல்காற் பறவை கிளைசெத்து, ஓர்க்கும்
புல் ஆர் வியன்புலம் போகி''[104]

இசையில் திளைத்த கோவலர் வாழ்க்கையைப் பெரும்பாணாற்றுப்படை பெரிதும் போற்றியுள்ளது.

**கள்ளும் ஊனும்**

கள் விற்கும் இடம் என்பதைக் குறிக்க அடையாளக் கொடி பறக்க விடும் வழக்கம் இருந்தது. கள்ளை வீட்டிலேயே பெண்கள் உண்டாக்கினர். அக்கள்ளினை ஆண் பன்றியைப் பெண் பன்றியுடன் இணைய விடாது அரிசி மாவு கொடுத்துக் கொழுக்கச் செய்து நன்கு வளர்ந்தவுடன் அதனைக் கொன்று அதன் தசையை உண்டனர். பிறர்க்கு வழங்கினர்.

''............ முட்டு இல்,
பைங்கொடி நுடங்கும் பலப்புகு வாயில்
செம்பூத் தூஉய செதுக்குடை முன்றில்
கள் அடு மகளிர் வள்ளம் நுடக்கிய
வார்ந்து உகு சில் நீர் வழிந்த குழம்பின்

**ஈர்ஞ் சோறு ஆடிய இரும்பல் குட்டிப்**

**பல் மயிர்ப் பிணவொடு பாயம் போகாது**

**நெல்மா வல்சி தீற்றி பல்நாள்**

**குழிநிறுத்து ஓம்பிய குறுந்தாள் ஏற்றைக்**

**கொழுநிணத் தடியொடு கூர்நறாப் பெறுகுவீர்''**[105]

**உழவர்கள்**

உழவர் இல்லங்களில் எருதொடு கன்றுகளும் பெரிய கயிற்றினால் கட்டப்பட்டிருந்தன. பெரிய முதிர்ந்த நெற் கூடுகள் அவ்வில்லங்களில் காணப்பட்டன.

**''பகட்டுஆ ஈன்ற கொடுநடைக் குழவிக்**

**கவைத் தாம்பு தொடுத்த காழ் ஊன்று அல்குல்**

**ஏணி எய்தா நீள் நெடு மார்பின்**

**முகடு துமித்து அடுக்கிய பழம்பல் உணவின்**

**குமரி மூத்த கூடுஓங் நல் இல்''**[106]

உழவர் நன்கு நடை பயின்ற இரண்டு எருதுகளையும் கலப்பையையும் கொண்டு நிலத்தை உழுதனர். விதைகளை விதைத்தனர். நெற்பயிர்களிடையே களைகளைக் களைந்தனர். பயிர் அறுக்கும் பருவத்தில் உழவர் எழுப்பும் ஆரவாரத்திற்கு அஞ்சி அவ்விடத்திலுள்ள மரங்களில் வாழும் பறவைகள் காட்டிடை நோக்கிச் சென்றன. உழவர் தம் இடமும் தொழிலும் பெரும்பாணாற்றுப்படையால் வெளிப்படுத்தப் பட்டுள்ளது.

“ ..................ஞாங்கர்க்

குடிநிறை வல்சிச் செஞ்சால் உழவர்

நடை நவில் பெரும் பகடு புதவில் பூட்டி,

பிடிவாய் அன்ன மடிவாய் நாஞ்சில்

உடுப்பு முகமுழுக் கொழுமூழ்க ஊன்றி

தொடுப்பு எறிந்த உழுத துளர்படு துடவை

அரிபுகு பொழுதின், இரியல் போகி,

வண்ணக் கடம்பின் நறுமலர் அன்ன

வளர் இளம் பிள்ளை தழீஇ, குறுங்கால்

கறை அணற் குறும்பூழ் கட்சிச் சேக்கும்

வன்புலம்”[107]

உழவர் வயல்களில் வேலை செய்து கொண்டிருக்கும் பொழுது, உழவர் சிறார் களை பறிப்போர் பறித்துப் போட்ட புதுமலரைச் சூடியும் அவற்றை வெறுத்தால் முள்ளி மலரைப் பறித்து அதைக் கோரை நாரினால் தொடுத்து மாலையாகச் சூடியும் சம்பங் கோரையின் காயை முறித்து உள்ளே இருக்கும் மகரந்தப் பொடியைத் தம் உடம்பிலே தேய்த்துக் கொண்டும் பழஞ் சோற்றை வெறுத்தால் வீட்டின் முற்றத்தில் கிடக்கும் உரலில் அவல் இடித்தும் விளையாடி மகிழ்ந்தனர் என்பதை பின்வரும் பாடல் அடிகள் எடுத்துக்காட்டுகின்றன.

“ களைஞர் தந்த கணைக்கால் நெய்தற்

கள்கமழ் புதுப்பூ முனையின், முட்சினை

முகைசூழ் தகட்டபிறழ்வாய் முள்ளிக்

கொடுங்கால் மாமலர் கொய்து கொண்டு அவண

பஞ்சாய்க் கோரை பல்லின் சவட்டி,
புணர்நார்ப் பெய்த புனைவுஇன் கண்ணி
ஈருடை இருந்தலை ஆரச் சூடி
பொன்காண் கட்டளை கடுப்ப, கண்பின்
புன்காய்ச் சுண்ணம் புடைத்த மார்பின்
இரும்பு வடித்தன்ன மடியா மென் தோல்,
கருங்கை வினைஞர் காதல் அம் சிறா அர்
பழஞ்சோற்று அமலை முனைஇ வரம்பில்
புதுவை வேய்ந்த கவிகுடில் முன்றில்
அவல் எறி உலக்கைப் பாடுவிறந்து அயல
கொடுவாய்க் கிள்ளை படுபகை வெரூஉம்,
நீங்கா யாணர், வாங்குகதிர்க் கழனி''[108]

உழவர் முழு நெல்லை அறுத்து அகன்ற களங்கள் நிறையும்படி குவித்து வைத்தனர். நெற்கட்டுக்களை அடித்த பின்னர் நெல்லின் கண் உள்ள துகள் அறும்படி வைக்கோல் தூசு முதலானவற்றைப் போக்கி அவை உலர்ந்த பின்னர் கோடைக் காற்றில் தூற்றித் தூசி நீக்கி நெல்லைக் குவித்து வைத்தனர்.

''கடுப்புடைப் பறவைச் சாதி அன்ன,
பைது அற விளைந்த பெருஞ்செந் நெல்லின்
தூம்புடைத் திரள்தாள் துமித்த வினைஞர்
பாம்பு உறை மருதின் ஓங்க சினை நீழல்
பலிபெறு வியன் களம் மலிய ஏற்றி
கணம் கொள் சுற்றமொடு கை புணர்ந்து ஆடும்

துணங்கை அம்பூதம் துகில் உடுத்தலை போல்

சிலம்பி வால்நூல் வலந்த மருங்கின்

குழுமு நிலைப் போரின் முழுமுதல் தொலைச்சி

பகடு ஊர்பு இழிந்த பின்றை, துகள் தப

வையும் துரும்பும் நீக்கி, பைது அற

குடகாற்று எறிந்த குப்பை, வடபால்

செம்பொன் மலையின், சிறப்பத் தோன்றும்

தண்பணை தழீஇய, தளரா இருக்கை''[109]

என நெல்லை அறுத்துப் பார்த்த முறையைக் குறிப்பிட்டுள்ளது.

உழவர் தென்னந் தோப்பினை உழுது பயன்படுத்தினர். அதனால் இவர்தம் மனை, தெருவாக இல்லாமல் தோப்பு தோறும் தனித்தனியாக அமைந்திருந்ததைக் காண முடிகிறது. மேலும் அவர் மனை தென்னங் கீற்றினால் வேயப்பட்டிருந்தன. இவர்தம் குடியிருப்பில் பலாவும், தெங்கும் வாழையும் பனையும் மூதிர்முளைக் கிழங்கும் (பனங்கிழங்கு) இருந்தன. உழவர் குடில் அமைக்கத் தென்னங்கீற்றைப் பயன்படுத்தினர். உழவுத் தொழிலைச் சிறப்புடன் செய்து வந்தனர்.

'' ........................ கறை அடிக்

குன்று உறழ் யானை மருங்குல் ஏய்க்கும்

வண் தோட்டுத் தெங்கின் வாடுமடல் வேய்ந்த

மஞ்சள் முன்றில், மணம் நாறு படப்பை

தண்டலை உழவர், தனிமனைச் சேப்பின்

தாழ்கோட் பலவின் சூழ்சுளைப் பெரும்பழம்

வீழ் இல் தாழைக் குழவித் தீம்நீர்

**கவைமுலை இரும்பிடிக் கவுள் மருப்பு ஏய்க்கும்**

**குலை முதிர் வாழைக் கூனி வெண் பழம்**

**திரள் அரைப் பெண்ணை நுங்கொடு, பிறவும்**

**தீம்பல் தாரம் முனையின், சேம்பின்**

**முளைப்புற முதிர் கிழங்கு ஆர் குவிர்''[110]**

எனக் குறிப்பதால் பாலை நில மக்களின் இருப்பிடமும் தொழிலும் வேறுபட்டுள்ளமையைக் குறிப்பாக உணர்த்திய பெரும்பாணாற்றுப் படையின் சிறப்பு குறிப்பிடத்தக்கதாகும்.

## உணவும் விருந்தும்

உழவர் பசி, வறுமையை அறியாதவர்; சோம்பியிராதவர். விருந்தினர்க்குத் தம் உழைப்பால் பெற்ற வெண்மை நிற நெற்சோற்றையும் அவர்தம் மனையிடத்தே வாழும் கோழிப் பெடையோடு சமைத்த உணவினையும் அளித்து மகிழ்ந்தனர்.

**'' தொல்பசி அறியாத் துளங்கா இருக்கை**

**மல்லல் பேர்ஊர் மடியின், மடியா**

**வினைஞர் தந்த வெண்ணெல் வல்சி**

**மனைவாழ் அளகின் வாட்டொடும் பெறுகுவிர்''[111]**

என உறுதிப்படக் கூறியுள்ளது பெரும்பாணாற்றுப்படை.

## சிறுவர் விளையாட்டு

சிறுவர் விளையாட்டுக்களைப் பற்றிச் சங்க நூல்களில் குறிப்புகள் காணப்படுகின்றன. ஒரு சிறுவன் தலையில் மூன்றுவட முத்துமாலை கிடந்து ஒளி விட யானைப் பொம்மைகளைச் சக்கரத்தில் பொருத்திப் பூங்கயிற்றினால் கட்டி மெல்ல மெல்ல இழுத்துக் கொண்டு வந்தான்.

'' பயந்த எம் கண் ஆர யாம் காண நல்கி -
திகழ் ஒளி முத்து அங்கு அரும்பாகத் தைஇப்
பவழம் புனைந்த பருதி சுமப்ப
கவழம் அறியா நின்கைபுனை வேழம்
புரிபுனை பூங் கயிற்றின் பைய பைய வாங்கி
அரிபுனை புட்டிலின் ஆங்கண் ஈர்த்து ஈங்கே
வருக! - எம் பாகமகனே''[112]

யானையை ஈர்த்து பழக வேண்டுவதற்காகச் சிறுவயதில் யானைப் பொம்மையை ஈர்ப்பதில் ஆர்வம் கொள்ள வைத்த நிகழ்வைக் கலித்தொகை பாடியுள்ளது.

**போர்ப் பயிற்சி**

திருவிழா நாட்களில் வீரர்கள் ஒன்றுகூடி விளையாட்டுப் போர் நிகழ்த்தி மகிழ்ந்தனர். விழாவில் துணங்கையும் (ஆடவரும் மகளிரும் தழுவி ஆடும் கூத்து) மள்ளர்ப் போரும் ஒருங்கே நிகழ்ந்தன. இதனை மள்ளர் விழா என்றும் வழங்கினர். வீரரின் உடலில் புண்பட்டால் அதை விழுப்புண்ணாகக் கருதி மகிழ்ந்தனர்.

இவ்வாறு திருவிழாக் காலங்களில் வீரத்தை உயிரெனக் கொண்ட ஆடவர் தம் திறமையினை வெளிப்படுத்தும் பொருட்டும் பயிற்சியின் பொருட்டும், சேரிகளில் விளையாட்டுப் போர் நிகழ்த்திய செய்தியினை

'' மள்ளர் குழீஇய விழவினானும்,
மகளிர் தழீஇய துணங்கை யானும்''[113]

என்னும் குறுந்தொகை பாடலால் அறியலாம். இதனைச் 'சேரிப்போர்' என்றும் அழைத்தனர்.

## கோழிப் போர்

வீரத்தில் நாட்டமுடைய சங்க கால மக்களின் விளையாட்டுகளுள் ஒன்று ‘கோழிப்போர்’ ஆகும். கோழிகளைப் போரின் பொருட்டு வளர்த்துப் போரினை நிகழ்த்தினர். இப்போரானது பெருந்திரளான மக்களிடையே நிகழ்ந்தது. சேரிக் கோழிகளுக்கிடையே நிகழும் போரில் காண்போரும் களைவோரும் இருந்தனர். ஆனால் இதுவே குப்பைக் கோழியின் போராய் இருந்தால் காண்போரும் களைவோரும் இல்லாமல் கூடக் கோழிகள் தமக்குத் தாமே சண்டையிடும். மக்களால் போர்ப் பயிற்சி அளிக்கப்பட்டாலும், படாவிட்டாலும் கோழிகளுக்கு இயற்கையிலேயே போர் உணர்வு இருந்தமையால் அதனை விளையாட்டாக்கி மகிழ்ந்தனர். இன்று வரையிலும் மக்கள் விரும்பும் விளையாட்டாகக் ‘கோழிப்போர்’ நடைபெற்று வருகின்றது.

**‘‘குப்பைக் கோழித் தனிப்போர் போல**

**களைவோர் இலை - யான் உற்ற நோயே’’**[114]

அக்காலக் கோழிப்போர் சேவற் சண்டையாக நிகழ்த்தப்பட்டதாகும். சண்டையிடும் சேவலைச் ‘சண்டைச் சேவல்’ எனக் கூறாமல் சண்டைக் கோழி என்பதால் சேவலைக் கொண்டே கோழிப்போர் நடத்தியமை விளங்கும். இப்போர் இரு வகையாக உள்ளது. ஒன்று ‘கத்திக் கட்டுச் சேவற்போர்’, மற்றொன்று ‘வெற்றுக்கால் சேவற்போர்’. சண்டையிடும் சேவலின் காலில் கூர்மையான சிறிய கத்தியினைக் கட்டி ஒன்றோடு ஒன்று மோத விடுவதைக் கத்திக் கட்டுச் சேவற்போர் எனவும் கத்தியின்றி வெறும் கால்களுடன் சண்டையிடச் செய்வதை வெற்றுக்கால் சேவற்போர் எனவும் கூறுவர். சேவற்போர் இன்றைய தமிழகத்தில் விழாக் கால பொழுது

போக்காகவே நடத்தப்படுகின்றது. இவற்றுக்கென்று தனிக் கழகங்களும் உள்ளன.

**பாவை விளையாட்டு**

பாவை விளையாட்டு என்பது சிறிய, பசிய தாது முதலியவற்றால் பாவை செய்து, அப்பாவையைத் தான் ஈன்றெடுத்தக் குழந்தையைப் போலப் பேணி, மணம் செய்வித்த விளையாடும் விளையாட்டாகும். இவ்விளையாட்டு பெண்களுக்குரியது. இவ்விளையாட்டை மகளிர் பலர் கூடி விளையாடினர்.

**''நெய்தல் பரப்பில் பாவை கிடப்பி,**
**நின்குறி வந்தனென், இயல்தேர்க் கொண்க! -**
**செல்கம்; செல வியங் கொண்மோ - அல்கலும்,**
**ஆரல் அருந்த வயிற்ற**
**நாரை மிதிக்கும், என்மகள் நுதலே**[115]

எனும் பாடல் பாவை விளையாட்டைக் குறிப்பிட்டுள்ளது.

**சிற்றிலிழைத்தல்**

கடற்கரையில் மணற்பரப்பில் சிற்றில் கட்டி விளையாடும் விளையாட்டு சிற்றிலிழைத்தலாகும். இவ்விளையாட்டு அவர்களின் பொறுப்புணர்ச்சியைக் காட்டுகின்றது. கடற்ரைச் சோலையில் சிற்றிலிழைத்து மகிழ்ந்தனர் கீழ்க்காண் குறுந்தொகைப் பாடற்பகுதி காட்டுகிறது.

**''கடல் ஆடு மகளிர் கானல் இழைத்த**
**சிறுமனைப் புணர்ந்த நட்பே - தோழி!''**[116]

**சிறு தேரோட்டல்**

தச்சனால் செய்யப்பட்ட சிறிய குதிரை பூட்டிய சிறு தேரினை ஏறிச் செலுத்தி இன்பமடையா விட்டாலும் சிறுவர் அதனைக் கையால் இழுத்து இன்பம் காண்பர். தேரினை உருட்டியும் இழுத்தும் சிறுவர் விளையாடினர் என்பதைப் பின்வரும் குறுந்தொகைப் பாடல் மூலம் அறியலாம்.

**'' தச்சன் செய்த சிறுமா வையம்**
**ஊர்ந்து இன்புறாஅர் ஆயினும் கையில்**
**ஈர்த்து இன்புறூஉம் இளையோர்''**[117]

**பந்தாடல்**

சங்க காலத்தில் பந்தாடும் விளையாட்டு மகளிர்க்கு உரிய விளையாட்டாக இருந்தது. மகளிர் விருப்பமுடன் பந்து விளையாடியதையும் தலைவன் மீது கொண்ட காதல் நினைவால் தலைவி தான் மிக விருப்பம் கொள்ளும் பந்து விளையாட்டைப் பெரிதாக கருதவில்லை என்பதையும் குறுந்தொகை கூறயியுள்ளது.

**''பாலும் உண்ணாள், ப ந்துடன் மேவாள்''**[118]

இவ்விளையாட்டு இன்று, எறிபந்து, பூப்பந்து, கூடைப் பந்து, வளைபந்து, கால்பந்து, கைப்பந்து, தண்ணீர்ப் பந்து என்று வளர்ச்சி பெற்று இவை இன்று ஆடவராலும் விளையாடப் பெறுவதைக் காண முடிகிறது.

**கவண் கல்**

குறிஞ்சி நில மகளிர் தினைப்புனத்தில் பகலில் காவல் இருந்த போது பாடினர். ஆடவர் கவண் கல் வீசி விலங்கினை விரட்டினர்.

**''ஏனல் காவலர் கவண்ஒலி வெரீஇ''**[119]

காட்டு யானைகள் ஓடின. யானை அருகே வாராதபோதும் கவண் வீசி விளையாடி மகிழ்ந்தனர்.

**ஓரை விளையாட்டு**

ஓரை என்பது மகளிர் கடற்துறையின் வெண் மணலிடத்தே தம்முள் ஓடிப் பிடித்து ஆடி மகிழும் ஒரு வகை விளையாட்டு 'ஓர்தல்' அடிப்படையாதலால் ஓரை எனப்பட்டது.

விளையாட்டு மகளிரைக் கண்டு நண்டுகள் அஞ்சிக் கடலுக்குள் ஓடின. தலைவியும் தலைவனும் நகைத்து விளையாடியிருந்தமையைக் குறுந்தொகைக் குறிப்பிடுகிறது.

**'' ஓரை மகளிர் அஞ்சி, ஈர் ஞெண்டு**
**கடலில் பரிக்கும் துறைவனொடு ஒருநாள்**
**நக்கு விளையாடலும்''**[120]

**சுனை நீராடல்**

சுனை நீராடல் என்பது தினைப்புனங்களை காவல் காக்கச் சென்ற மகளிர் தம் களைப்பினைப் போக்கும் பொருட்டு அருகிலிருக்கும் சுனையில் நீராடியதைக் கீழ்க்காண் குறுந்தொகைப் பாடற்ப் பகுதி விளக்கும்.

**'' நிரைவளை முன்கை நேர்இழை மகளிர்**
**இருங்கல் வியல்அறைச் செந்தினை பரப்பிச்**
**சுனைபாய சோர்வுஇடை நோக்கி''**[121]

**கழங்கு ஆடுதல்**

செல்வம் மிக்க அழகிய வீட்டில் சிறுமியர் சிறிது நேரம் பந்து விளையாடினர். பின்பும் இளமையுடைய தோழியருடன் சேர்ந்து கழங்கு

ஆடினர் என பின்வரும் அகநானூற்றுப் பாடல் அடிகளால் அறியப் பெறலாம்.

**''இளந் துணை ஆயமொடு கழங்கு உடன் ஆடினும்''**[122]

எனும் தொடர் கழங்காடியமையைக் காட்டும்.

**பௌத்த பள்ளி**

மதுரை மாநகரில் பௌத்த பள்ளிகள் இருந்தமையும் அவற்றில் வழிபாடு செய்வோர் இயல்பும் சுட்டப்பட்டுள்ளன. இல்லறத்தில் வாழ்பவர் தங்கள் குடும்பத்துடன் ஒரு சேர சீலத்தால் சிறந்து விளங்கும்படி பூசைக்கு வேண்டும் பூவினையும் தூபங்களையும் கொண்டு வழிபட்டனர் என்பதைப் பின்வரும் அடிகள் எடுத்துக்காட்டுகின்றன.

**'' திண்கதிர் மதாணி ஒண் குறு மாக்களை**
**ஓம்பினர்த் தழீஇ தாம் புணர்ந்து முயங்கி**
**தாது அணி தாமரைப் போது பிடித்தாங்கு**
**தாமும் அவரும் ஓராங்கு விளங்கக்**
**காமர் கவினிய பேர் இளம் பெண்டிர்**
**பூவினர் புகையினர், தொழுவனர் பழிச்சிச்**
**சிறந்து புறங்காக்கும் கடவுட் பள்ளியும்''**[123]

**சமணப் பள்ளி**

சமண சமயத்தின் வழிபாட்டு முறையும் இயப்பும் மதுரைக் காஞ்சியின் வாயிலாக அறியலாம். சமணர் அறிவிற் சிறந்தவர்; எல்லா இடங்களிலும் நடக்கும் நிகழ்ச்சிகளைச் சென்று அறிந்தாற் போல, இருந்தவாறே இருந்து கூற வல்லவர்; விரதங்களால் உடல் மெலியாதவர்

அனுவிரதம் என்ற தங்கள் ''கொல்லா விரதத்தில்'' தலை நின்றவர்; மேட்டு நிலத்தில், ஓவியம் தீட்டப்பட்டு அவர்களுடன் குன்று போன்ற தோற்றம் உடைய கோயில்கள் இருந்தன; அக்கோயிலிடத்துச் சான்றோர் கூடியுள்ள ''அமண் பள்ளி'' அமைந்திருந்தது; இத்தகைய பள்ளிகளில் அதிசயங்கள் பல நிகழ்ந்தனவாம். துறவியர் தங்கும் இடம் அமண் பள்ளி என்றும் மதுரை நகரில் சமண சமயத்தினர் பலர் தம் சமயநெறியைப் பின்பற்றுவதற்கு எவ்வகை இடையூறுமின்றி இனிது வாழ்ந்தனர் என்றும் மதுரைக் காஞ்சி குறிப்பிட்டுள்ளது.

'' வண்டு படப் பழுநிய தேன் ஆர் தோற்றத்துப்
பூவும் புகையும் சாவகர் பழிச்ச,
சென்ற காலமும், வரூஉம் அமயமும்,
இன்று இவண் தோன்றிய ஒழுக்கமொடு நன்கு உணர்ந்து,
வானமும் நிலனும் தாம் முழுது உணரும்
சான்ற கொள்கை சாயா யாக்கை
ஆன்று அடங்கு அறிஞர் செறிந்தனர் நோன்மார்
கல் பொளிந்தன்ன இட்டுவாய்க் கரண்டைப்
பல் புரிச் சிமிலி நாற்ற, நல்கு வர
கயம் கண்டன்ன வயங்குடை நகரத்து
செம்பு இயன்றன்ன செஞ்சுவர் புனைத்து
நோக்க விசை தவிர்ப்ப மேக்குஉயர்ந்து ஓங்கி
இறும் பூது சான்ற நறும் பூஞ் சேக்கையும்
குன்று பல குழீஇப் பொலிவன தோன்ற''[124]

பௌத்த சமணப்பள்ளிகள் தமிழ்மக்களின் சமயப் பொறைச் சன்மார்க்கச் சின்னங்கள்.

**பொழுதறிதல்**

நெடுநல்வாடையில் நக்கீரர் பொழுது அறிதல் பற்றிக் குறிப்பிட்டுள்ளார். மழைக் காலங்களில் இரவு பகல் வேறுபாடின்றிக் காணப்படும். மகளிர் தோள்கள் மூங்கில் போன்று உள்ளன. கைகளில் சங்கினால் செய்யப்பட்ட வெண்ணிற வளையல்களும் முத்துப் போன்ற பற்களும் மடமை குணமும் கொண்டிருந்தனர். அம்மகளிர் காம்புகளுடன் கொண்ட முல்லை மொட்டுகளைத் தட்டில் வைத்திருந்தனர். அம்மலர்கள் மாலைக் காலத்தில் மலரும் இயல்பு கொண்டவை. அம்முல்லை மலர்கள் மலர்ந்து மணம் வீசுவதைக் கண்டவுடன் மகளிர் மாலைப்பொழுதில் நெய் விளக்கேற்றி முல்லை மலர் தூவிக் கடவுளை வழிபட்டனர்,

**“ செவ்வி அரும்பின் பைங்கால் பித்திகத்து**

**அவ்இதழ் அவிழ் பதம் கமழ, பொழுது அறிந்து”**[125]

விளக்கேற்றி கடவுளை வழிப்பட்ட செய்தியை நெடுநெல்வாடை வழி அறியலாம்.

**வேந்தர் கடமை தவறாமை**

பதிற்றுப்பத்தின் ஏழாம் பத்துப்பாடலில் கபிலர் முன்னோர்களுக்குச் செய்யும் கடமைகள் பற்றிக் குறிப்பிட்டுள்ளார்.

சேர மன்னன் வாய்மை, புறங்கூறாமை முதலிய குணங்களைக் கொண்டவன் என்றும் அமைச்சர் மற்றும் சுற்றத்தினருடன் கூடி வேள்விகளை நடத்தினான் என்றும் இதன் மூலம் தேவர்களுக்கு உரிய கடமைகளை நிறைவேற்றினான் என்றும் ஓதுதல் மூலமாக உயர்ந்த நிலையில் உள்ள முனிவர்களை இன்புறச் செய்தான் என்றும் மூத்தோரை

வணங்கும் முறையைக் கடைபிடித்தான் என்றும் தனக்குத் துணையாக இளம் புதல்வரைப் பெற்றான் என்றும் இவ்வாறு மன்னன் குலத்து முன்னோர்களைக் காத்து, இல்லக் கடமைகளைச் செய்து, மக்களைக் காத்து வந்தான் எனும் பெருமைகளைச் சேரன் பெற்றிருந்தான்.

**'' இளந்துணைப் புதல்வரின் முதியர்ப் பேணி**

**தொல் கடன் இறுத்த வெல் போர் அண்ணல்''**[126]

அச் சேரனின் ஒழுக்கம் தொன்மையானதாகும்.

**பெயரன்**

ஐங்குறுநூறு, நற்றிணைப் பாடல்களில் தந்தையின் பெயரை மகனுக்கு வைக்கும் முறை பற்றிக் குறிப்பிடப்பட்டிருப்பதைக் காணலாம்.

தலைவன், தலைவியைக் காட்டிலும், ''தன் மகன் மீது மிகுந்த அன்பு'' செலுத்தினான் தந்தையின் பெயரை மகனுக்கு இட்டான். அவனுக்கு மகன் நடை வண்டியில் செல்லும் பொழுது அன்பு பன்மடங்கு பெருகுகியது.

''தந்தையின் பெயரை மகனுக்கு வைப்பதும், தாயின் பெயரை மகளுக்கு இடுவதும்'' தொன்மையானதாகும். இவ்வாறு பெயரிடுவதால் ''பெயரன் பெயர்த்தி'' என்னும் சொற்கள் உருவாயிருந்தன. ''தன் தந்தையின் பெயரைத் தன் மகனுக்கு இடும் வழக்கம்'' தொன்மை வழக்கமாகும்.

**'' அகன் பெரும் சிறப்பின் தந்தை பெயரன்**

**முறுவலின் இன்நகை பயிற்றி''**[127]

தலைவியின் இல்லம் தென்னங்கீற்றுப் பந்தல் இட்டு அழகுடன் காணப்பட்டது. தலைவி எண்ணெய் தேய்த்து நீராடி, நெய் பூசிய

மென்மையான உடல் அழகுடன் உறங்கினாள்; அவள் பெற்ற, தன் தந்தையின் பெயர் கொண்ட மைந்தனை இடையாமத்து இருளிலே தலைவன் காண வந்தான் என்று நற்றிணை பாடும்.

**'' அகன் துறை ஊரனும் வந்தனன்**

**சிறந்தோன் பெயரன் பிறந்தமாறே''**[128]

பிறந்தவுடன் பிள்ளையைக்காண ஓடோடி வரும் வழக்கம் தொன்மையானது என்பதை நற்றிணை உறுதி செய்துள்ளது.

**தன் மகனுக்கு தன் பெயரை வைத்தல்**

மலைபடுகடாத்தில் ''மகனுக்குத் தன் பெயரிடும் முறை'' பற்றிய செய்தி குறிப்பிடப்பட்டுள்ளதைக் காணலாம்.

**'' நன்னன்சேய் நன்னற் படர்ந்த கொள்கையொடு**

**உள்ளினிர் சேறிர் ''**[129]

என மலைபடுகடாம் குறித்துள்ளது. தன் பெயரை வழி வழியாகப் பிள்ளைகளுக்குச் சூட்டும் மரபும் இருந்ததை அறியலாம். இப்பாடலில், மன்னன் நன்னன் தன் மகனுக்கு, ''நன்னன்'' என்று பெயரிட்டிருந்தது பற்றிக் கூறப்பட்டுள்ளது. புலவர் பரிசில் வேண்டி நன்னனிடம் சென்றனர். நன்னனின் புகழ் பற்றிக் கூறினார்.

மன்னன் பரிசுப் பொருட்களை வாரி வழங்குபவன். ஆக்கம் தரும் செயல்களைச் செய்வன். தொழிலில் வல்லவன். இத்தகைய சிறப்புகளையுடைய நன்னனின் மகனாகிய நன்னன் வள்ளல் தன்மை கொண்டவன் என்று குறிப்பிட்டுள்ளது மலைபடு கடாம்.

**புலிப்பல் தாலி**

குறுந்தொகைப் பாடலில், புலிப்பல் தாலியைச் சிறுவர் அணிந்த செய்தி உள்ளது.

''இரவு வேளையில் பேய்கள் அஞ்சும் வண்ணம் மழை பெய்கின்றது. தாய் புலிப்பல் தாலி அணிந்துள்ள தன் மகனைத் தழுவி அன்னையே என்று அழைத்து வருடுகின்றாள்.'' சிறு வயது முதல் அச்சமின்றி வளர்வதற்குப் புலிப்பல் தாலியை அணிவித்தனர்.

**''புலிப்பற் தாலிப் புதல்வற் புல்லி,**

**அன்னா! என்னும் , அன்னையும்; அன்னோ!''**[130]

**நெற்றியில் பொட்டு வைத்தல்**

நற்றிணைப் பாடலில், ''நெற்றியில் பொட்டு இடும்'' வழக்கம் இருந்ததைக் காணலாம்.

**'' திலகம் தை இய தேம் கமழ் திரு நுதல்**

**எமதும் உண்டு''**[131]

என்பதால் சங்க காலத்திலேயே மகளிர் நெற்றியில் பொட்டு இடும் பழக்கம் கொண்டிருந்தனர் என அறியலாம். தலைவன் பொருள் தேடச் செல்லுகின்றான். காட்டுப் பகுதியில் செல்லும்பொழுது ''வட்ட வடிவமான பொட்டு இட்டு மணம் கமழும் நெற்றியை உடைய திங்கள்'' எம்மிடத்தில் இருந்தது என்றும் அது இப்பொழுது இல்லை என்றும் தலைவன் வருந்திக் கூறுவதாக உள்ளது.

**நீராடுதல்**

களிமண் தேய்த்துக் குளித்தனர் மக்கள் என்பதை,

**'' கூழைக்கு எருமணம் கொணர்கம் சேறும்**

**ஆண்டும் வருகுவள் பெரும் பேதையே''[132]**

என வரும் குறுந்தொகைப் பாடலால் அறியலாம். சங்க கால மகளிர் கூந்தலில் உள்ள எண்ணெய்ப் பசையை நீக்குவதற்காகக் களிமண் தேய்த்து நீராடினர். தலைவியும் தோழியும் ஆற்றின் புறத்தே சென்று எருமண் கொணர்ந்து கூந்தலில் தேய்த்து நீராடினர் என உ.வே.சா. விளக்கம் கூறியுள்ளதையும் காண முடிகிறது. கூந்தலில் சூட்டுவதற்காகச் செங்கழுநீர் மலர்களைப் பறித்து வந்தனர் என்ற செய்தியும் கூறப்பட்டுள்ளது.

**காதில் தளிர்களைச் சூடுதல்**

திருமுருகாற்றுப்படை காதில் தளிர்கள் அணிந்தமையைக் குறிப்பிட்டுள்ளது.

திருப்பரங்குன்றில் உள்ள சூரர மகளிர், ஆடிப்பாடி மகிழும் இயல்பு கொண்டவர். தூய்மையும் அன்பும் உடையவர். தம் தலைமுடியினைச் சீராகத் திருத்தி அமைத்த கொண்டையில், வெட்சி, குவளை, சண்பகப்பூ மற்றும் மருத மலர்களைச் சூடிக் கொண்டனர். காதுகளில் அசோக மரத்தின் தளிர்களைக் குழைகளாக அணிந்திருந்தனர்.

**'' வண்காது நிறைந்த பிண்டி ஒண்தளிர்**

**நுண்பூண் ஆகம் திளைப்ப''[133]**

மகிழ்ந்த காட்சியில் காதில் குழையணிந்த பண்டைய நிலையை அறியலாம். பிற்காலத்தில் பொன் முதலிய உலோகமாக மாறியது.

**சுவரில் கோடிடுதல்**

குறுந்தொகை, ஏழாம் பத்து, அகநானூறு ஆகியவற்றில் சுவரில் கோடிடும் பழக்கம் உள்ளமை குறிக்கப்பட்டுள்ளது.

தலைவியைப் பிரிந்து சென்ற தலைவன் கார்கால வரவுக்குப் பின்னும் வாராமை கண்டு தலைவி வருந்தினாள். அக்கால மகளிர் தலைவன் வரவைக் கணக்கிடுவதற்காக சுவரில் கோடுகள் இட்டனர். கோவலர் சூடிவந்த மாலையில் முல்லை அரும்புகள் இருப்பதைக் கண்டு தோழி கார்கால வரவைத் தலைவிக்கு அறிவித்தாள் என்ற செய்தியைக் குறுந்தொகை பாடியுள்ளது.

**''எறிகண் பேதுறல்; ஆய்கோடு இட்டுச்**
**சுவர்வாய் பற்றும் நின் படர் சேண் நீங்க''**[134]

சேரனின் படை வீரர் போர் காரணமாக வேற்று நாட்டுப் பாசறையின் நடுவே வெற்றி முரசங்களுடன் இருந்தனர். வீரரின் பிரிவால் மகளிர் உறக்கமில்லாமல் துன்பத்துடன் உடல் மெலிந்தனர். அரண்மனையின் எல்லையில் உள்ள உயரமான மதில் தலைவன் பிரிந்து சென்ற நாட்களை முறையாகக் கோடுகளிட்டுக் கணக்கிட்டு வந்தனராம் அவற்றால் அவர்களின் கை விரல்கள் சிவந்தனவாம்.

**'' ஓவு உறழ் நெடுஞ் சுவர் நாள் பல எழுதிச்**
**செவ் விரல் சிவந்த, அவ் வரிக் குடைச்சூல்''**[135]

எனப் பதிற்றுப்பத்தின் வழி அறியலாம்.

தலைவன் பொருளீட்டுவதற்காக பாலை நிலத்தைக் கடந்து சென்றான் தலைவன் பிரிந்து சென்ற நாட்களை தலைவி முறையாகச் சுவரில் கோடிட்டு நாள்தோறும் கணக்கிட்டு வந்தாள். அவளது ஆற்றாமையால் காலம் வளர்வதை எண்ணிக் கண்ணீர்த் துளி பெருகிடப் படுக்கையை இருக்கையாகக் கொண்டு உறக்கமின்றி இருந்தாள் என்று அகநானூறு பாடியுள்ளது.

**'' சேண் உறை புலம்பின் நாள்முறை இழைத்த**
**திண் சுவர் நோக்கி, நினைந்து, கண்பனி''**[136]

இக்கோடிடும் முறையை பிற்காலத்தில் உரோம எண்ணாக வளர்ந்தது எனக் கருதலாம்.

**சுவரில் வட்டமிடுதல்**

தலைவன் வேற்று நாட்டில் பொருளீட்டி வீடு திரும்பும்பொழுது தலைவி ஆற்றியிருக்கும் நிலையை எண்ணினான். தலைவி இல்லச் சுவரில் நாள்தோறும் வட்டவடிவில் சுழியிட்டு கணக்கிட்டுக் காத்திருந்தாள். நாளும் சுழியிட்ட சுவரை எண்ணி அழுதாள் என்றும் அகநானூறு பாடியுள்ளது.

**'' செய்குறி ஆழி வைகல் தோறு எண்ணி**
**எழுது சுவர் நினைந்த அழுதுவார் மழைக்கண்**
**விலங்கு வீழ் அரிப்பனி பொங்குழைத் தெறிப்ப''**[137]

என்பதால் கோடிட்டும் சுழியிட்டும் கணக்கிட்ட நிலையில் அறியலாம்.

**மன்னனைத் துயில் எழுப்புதல்**

பொழுது புலர்ந்ததும் கிணைப் பொருநன் அரண்மனை முற்றத்தில் உள்ள தடாரிப் பறையறைந்து ஒலியெழுப்பிய அளவிலேயே மன்னன் கிள்ளிவளவன் எழுந்து தன்னை நாடி வருபவரின் இடர் நீக்கும் குணம் கொண்டிருந்தான் என்பதை,

**'' வைகறை அரவம் கேளியர்! பலகோள்**
**செய்தார் மார்ப! எழுமதி துயில் என**
**தெண்கண் மாக்கிணை தெளிர்ப்ப ஒற்றி**
**நெடுங்கடைத் தோன்றி யேனே''**[138]

இப்பாடல் அடிகள் குறிப்பிட்டுள்ளதை அறியலாம்.

**காவல் மரத்தை வெட்டுதல்**

நற்றிணை, ஐந்தாம் பத்து, அகநானூற்றுப் பாடல்களில் காவல் மரத்தை வெட்டும் பழக்கம் பற்றிக் குறிப்பிடப்பட்டுள்ளது.

குறுகை எனும் இடத்தில் அன்னி என்பவனும் தேரழுந்தூரைச் சார்ந்த திதியன் என்பவனும் போரிட்டனர். போர்க்களத்தில் அன்னி, மொட்டும் மலரும் உள்ள காவல் மரமாகிய புன்னை மரத்தை வெட்டினான் என்பதைப் பின்வரும் நற்றிணைப் பாடல் பகுதி குறிப்பிடும்.

**''அன்னியும் பெரியன்; அவனினும் விழுமிய**
**இருபெரும் வேந்தர், பொரு களத்து ஒழித்த**
**புன்னை விழுமம் போல''**[139]

அறுகை எனும் மன்னன் மோகூர்ப் பழையனின் பகைவன் ஆவான். அறுகை பழையனின் அரணை முற்றுகையிட்டான். பழையனின் காவல்

மரமான வேப்ப மரத்தின் அடி மரத்தை வெட்டி, முரசு செய்வதற்காகத் துண்டுகளாக்கி அவற்றை எடுத்துவர ஆண் யானைகளைப் பூட்டினான் என்று பதிற்றுப்பத்து பாடும்.

**'' மோகூர் மன்னன் முரசம் கொண்டு**

**நெடுமொழி பணித்து, அவன் வேம்பு முதல் தடிந்து,**

**முரசு செய முரச்சி, களிறு பலபூட்டி''**[140]

இழுத்து வந்ததைப் பாடல் அறிவக்கின்றது.

இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன் தன்னை எதிர்த்து வரும் பகை வீரர்களைப் புறங்காட்டி ஓடச் செய்தவன். பகைவரின் காவல் மரமாகிய கடம்ப மரத்தினை வெட்டி முரசு செய்து அறைந்தான் என்று அகநானூறு பாடும்.

**'' சால் பெருந்தானைச் சேரலாதன்**

**மால் கடல் ஓட்டி, கடம்பு அறுத்து, இயற்றிய**

**பண் அமை முரசின் கண்''**[141]

காவல் மரத்தை வெட்டும் ஒலி பெரிய மதிலுக்குள் இருக்கும் அரண்மனைக்குள் கேட்டதாம்.

**'' கடி மரம் தடியும் ஓசை தன் ஊர்**

**நெடு மதில் வரைப்பின் கடி மனை இயம்ப''**[142]

என்று புறநானூறு பாடும் மரத்தினைப் போற்றும் தொன்மம் இப்பாடல் வழி புலனாகின்றது.

**சகுனம்**

பழங்காலத்திலிருந்தே சகுனம் பார்க்கும் பழக்கம் இருந்து வருகின்றது. சகுனம் அறிவிப்போரையும் சகுனத்தின் பலன்களைக் கூறுவோரையும் 'நிமித்தகர்' என்று கூறுவர். செயலின் தொடக்கத்தில் பிறர் சொல்லும் சொற்களைச் சகுனமாகக் கருதி அதனை 'விரிச்சி கேட்டல்', 'நற்சொல் கேட்டல்' என்றும் கூறினர். இவ்வாறு கூறும் நிகழ்வைத் தொல்காப்பியர் 'பாக்கத்து விரிச்சி' என்பர். பெண் நிமித்தகரை 'முதுசொல் பெண்டிர்' என முல்லைப்பாட்டு குறிக்கும்.

சங்க காலத்தில் வல்வில் ஓரியிடம் கழைதின் யானையார் பரிசில் நாடிச் சென்றபோது அவருக்கு பரிசு மறுக்கப்பட்டது. அதற்காக மன்னனைப் பழிக்காமல் தம் வழியிடையே எதிர்ப்பட்ட பறவையின் தீச்சகுனத்தையும் தாம் வந்த நேரத்தையும் பரிசில் பெற வந்தோர் பழிப்பர் என்று புறநானூறு பாடும்.

**'' புள்ளும் பொழுதும் பழித்தல் அல்லதை**
**உள்ளி வருநர் பழியவர் அதனால்**
**புலவேன் வாழியர் ஓரி''**[143]

பாலை நிலத்தில் ''ஓணான் சகுனம்'' பார்க்கப்பட்டது. பறவைச் சகுனமும் பார்க்கப்பட்டதைக் குறுந்தொகை பாடும்.

**'' வேதின வெரிநின் ஓதிமுதுபோத்து**
**ஆறுசெல் மாக்கள் புட்கொளப் பொருந்தும்''**[144]

பிரிந்து சென்ற செல்லும் தலைவன் வருவான் என்று பல்லியின் நாகேட்டுத் தலைவி மகிழ்ந்தாள். குயில் கூவி அவன் வரவை அறிவிக்கும் என நற்றிணைப் பாடும்.

**'' இடூஉ வாங்கண் இனிய படூஉம்**

**நெடுஞ்சுவர்ப் பல்லியும் பாங்கின் தேற்றும்**

**மனைமர நொச்சி மீமிசை மாச்சினை**

**வினைமாண் இருங்குயில் பயிற்றும்''**[145]

விருந்து வருவதைக் காக்கை அறிவிக்கும் என்னும் நம்பிக்கையைக் குறுந்தொகையால் அறியலாம்.

**''விருந்து வரக் கரைந்த காக்கை''**[146]

தலைவனுடன் சென்றுவிட்ட தலைவி விருந்தாக வரவேண்டி நற்றாய் காக்கைக் கரையுமாறு வேண்டுகிறாள்.

**'' மறுவில் தூவிச் சிறுகருங் காக்கை**

**அன்புடைய மரபனின் கிளையொ டாரப்**

**பச்சூன் பெய்த பைந் நிண மாதோ**

**வெஞ்சின விறல் வேற் காளையொ**

**டஞ்சி லோதியை வரக்கரைந் தீமே''**[147]

என்ற பாடல் வரிகள் மூலம் அறியப் பெறலாம்.

நற்பயன் தரும் அறிகுறிகளையும் தீய அறிகுறிகளையும் கண்டு அவற்றின் பயனையும் தெரிந்திருந்தனர் சங்க கால மக்கள். நண்பகலில் தும்முதல், ஆந்தை அலறுதல், நகர்ப்புறத்தில் உள்ள விளக்கு அணைதல், பெருந்தூக்கம் ஏற்படல் முதலானவை தீய சகுனங்கள் என மக்கள் கருதினர்.

**'' நடுநாள் வந்து தும்பியுந் துவைக்கும்**

**நெடுநகர் வரைப்பின் விளக்கும் நில்லா**

**துஞ்சாக் கண்ணே துயிலும் வேட்கும்**

**அஞ்சுவரும் குரா அல் குரலுந் தூற்றும்''[148]**

என்று புறநானூறு பட்டியலிட்டுள்ளது. மேலும் எட்டுத் திசைகளிலும் எரிகொள்ளி எரிந்து வீழ்தல், மரக்கிளைகள் உலருதல், தீப்பற்றிக் கொள்ளுதல், வெய்ய கதிரையுடைய ஞாயிறு பல இடங்களில் செறிந்து தோன்றுதல், தீய செய்திகள் வருவதை முன்னரே அறிந்து பறவை கூவுதல் முதலியன தீய அறிகுறிகள் என்றும் புறநானூறு பாடியுள்ளது.

**'' திசையிரு நான்கு முற்க முற்கவும்**

**பெருமரத்திலைய நெடுங்கோடு வற்றல் பற்றவும்**

**வெங்கதிர்க் கனலி துற்றவும் பிறவும்**

**அஞ்சுவரத் தகுந புள்ளுக்குர லியம்பவும்**

**எயிறு நிலத்து வீழவும் எண்ணெயாடவும்**

**களிறு மேல் கொள்ளவுங் காழக நீப்பவும்**

**வெள்ளி நோன் படை கட்டிலொடு கவிழவும்**

**கனவில் அரியன''[149]**

கண்டமையைப் புறநானூறு பாடியுள்ளது. தீய அறிகுறிகளை கனவிலும் காணக் கூடாது என்பதையும் அவற்றால் தீமைகள் விளையும் என்பதையும் அக்கால மக்கள் நம்பினர் என அறிய முடிகின்றது.

மலையில் உள்ள தினைப்புனத்தில் பன்றி உணவு உண்ண எண்ணி குறுகிய வழியிலே நுழையும்பொழுது பல்லியின் ஓசையைக் கேட்டு துன்பம் வரும் என்பதை அறிந்து மெல்ல மெல்ல பின்னோக்கிச் சென்றதாம். மக்களல்லாமல் விலங்கும் சகுனம் பார்த்ததாக நற்றிணைப் பாடியுள்ளது.

'' எய்ம் முள் அன்ன பரூஉ மயிர் எருத்தின்

செய்யும் மேவல் சிறுகட் பன்றி

ஓங்கு மலை வியன் புன் படீஇயர், வீங்கு பொறி

நூழை நுழையும் பொழுதில், தாழாது

பாங்கர்ப் பக்கத்துப் பல்லி பட்டென''[150]

**மக்களை நெறிப்படுத்தல்**

சங்க இலக்கியத்தில் மக்கள் நல்வாழ்வு வேண்டி மக்களை நெறிப்படுத்தினர். பிறருக்குத் தீமை செய்தல் கூடாது, சிறியோரை இகழ்தல் கூடாது என்னும் வாழ்வியல் நெறிகளைக் கடைபிடித்தனர் என்பதைப் பின்வரும் பாடல் மூலம் அறியப் பெறலாம்.

'' நல்லது செய்தல் ஆற்றீர் ஆயினும்

அல்லது செய்தல் ஓம்புமின்''[151]

'' பெரியோரை வியத்தலும் இலமே

சிறியோரை இகழ்தல் அதனினும் இலமே''[152]

சங்கத் தமிழர்கள் பண்போடு வாழ்ந்து வந்துள்ளனர். எல்லா ஊரும் சொந்த ஊர் என்றும் எல்லாரும் சுற்றத்தினர் என்ற நல்வழியைக் கடைபிடித்தனர் என்பதைப் பின்வரும் பாடல் எடுத்துரைக்கின்றது.

''யாதும் ஊரே யாவரும் கேளிர்''[153]

இப்பிறவியில் நன்மை செய்தவர்களுக்கு நன்மையே விளையும் என்னும் நம்பிக்கை கூறப்பட்டுள்ளது.

" .................. இம்மை

நன்று செய் மருங்கில் தீது இல் என்னும்

தொன்றுபடு பழமொழி இன்று பொய்த்தன்று கொல்?"[154]

**வேந்தர் வெற்றி தோல்விக்கு நிமித்தம் பார்த்தல்**

"உன்னம் என்பது ஒருவகை மரம். வேந்தர்க்கு வெற்றி உண்டாகு மாயின் உன்ன மரம் செழித்தும் தோல்வி உண்டாகுமாயின் கரிந்தும் காட்டும் இயல்புடையது" என்று நம்பினர். இரும்பிடர்த் தலையார் எனும் புலவர் புறநானூற்றுப் பாடலில், கவலைக்குரிய தீர்வை உன்ன மரம் காட்டும் என்று நம்பியதை குறித்துள்ளார்.

"உன்ன மரத்து துன்னருங் கவலை"[155]

" அலந்தலை உன்னத்து அங்கவடு பொருந்திச்

சிதடி கரைய..."[156]

" புன்கால் உன்னம் சாய"[157]

என்று தீ நிமித்தங்கள் தோன்றினாலும் அந்த உன்னமரம் தெரிவித்த கருத்துகளைப் பொய்யாக்குபவன் சேரன் என்று பதிற்றுப்பத்து பாடும் .

" பொன்னின் அன்ன பூவிற் சிறியிலைப்

புன்கால் உன்னத்துப் பகைவன் எங்கோ"[158]

என்பதால் அறியலாம்.

**அந்தணர்களுக்குப் பசு கொடுத்தல்**

ஆறாம் பத்து பதிகப் பாடலில் காக்கைப் பாடினி நச்செள்ளையார் என்பவர் அந்தணர்களுக்குப் பசு கொடுக்கும் பழக்கத்தினைக் குறிப்பிட்டுள்ளார்.

ஆடுகோட்பாட்டுச் சேரலாதன் அறத்தை விரும்பும் அன்பு நெஞ்சம் கொண்டவன். தண்டகாரணியத்தில் உள்ளவர்களால் கொள்ளப் பெற்ற மலை ஆடுகளை வென்று சேர நாட்டின் மேல் கடற்கரையிலுள்ள தொண்டி என்னும் ஊருக்குக் கொணர்ந்தவன். சேரலாதன் அந்தணர்களுக்குப் பசுக்களோடு குட நாட்டில் உள்ள ஊரையும் அளித்தான் என்று பதிற்றுப்பத்து பாடும்.

**'' தொண்டியன் தந்து கொடுப்பித்து, பார்ப்பார்க்குக்**
**கபிலையொடு குடநாட்டு ஓர் ஊர் ஈந்து**
**வான் வரம்பன் எனப் பேர் இனிது விளக்கி**
**ஏனை மழவரைச் செருவில் சுருக்கி''**[159]

**மாலை வழிபாடு**

கலித்தொகையில் நல்லந்துவனார் எனும் புலவர் மாலை வழிபாடு பற்றிக் குறிப்பிட்டுள்ளார்.

**'' மா வதி சேர, மாலை வாள் கொள**
**அந்தி அந்தணர் எதிர்கொள, அயர்ந்து**
**செந்தீச் செவ்வழல் தொடங்க''**[160]

மாலை வழிபாடு தொடங்கியதாம். அந்திக் கால வழிபாடு மேற்கொண்டனர். மகளிர் செந்தீயின் விளக்குகள் ஏற்றி வழிபட்டனர் என்ற கருத்தைக் குறிப்பிட்டுள்ளதை அறியலாம்.

**ஏழடி பின் சென்று வழியனுப்புதல்**

பொருநராற்றுப்படையில் முடத்தாமக்கண்ணியார் எனும் புலவர் ஏழடி பின் சென்று வழியனுப்பும் பழக்கம் இருந்தமையைக் குறிப்பிட்டுள்ளார்.

**'' பால் புரை புரவி நால்கு உடன் பூட்டி**
**காலின் ஏழ் அடிப் பின் சென்று, 'கோலின்**
**தாற்களைந்து, ஏறு' என்று ஏற்ற''**[161]

என இப்பாடலில், கரிகாலன் தன்னை நாடி வருபவர்களை மதிக்கும் குணம் கொண்டவன் என்பதைக் குறிப்பிட்டுள்ளார். உயர்ந்த குடியில் பிறந்தவர்கள் தங்களை நாடி வருபவர்களை வரவேற்பதுவும் பின் சென்று வழியனுப்புவதும் மரபு கரிகாலன் கலைவாணர் பொருட்களை வாரி வழங்குவான். கலைவாணர்கள் தேரில் செல்லாதவர்கள். தேரில் வெண்மையான நான்கு குதிரைகளைப் பூட்டி, தம் காலால் ஏழடி பின் சென்று தாற்றுக் கோலால் தூண்டிச் செலுத்துதற்குரிய தாற்று முள்ளை அகற்றிவிட்டு, தேரில் ஏற்றி வழியனுப்புவார். இவ்வாறு தம்மை நாடி வரும் பாணர், பொருநர்களுக்குப் பொருட்களை வழங்கி தம்மோடு ஒத்தவராக மதித்துப் போற்றும் பெருந்தன்மையுடையவன் என்னும் செய்தி உள்ளது.

**திருமணச் சடங்குகள்**

வெள்ளி வீதியாரின் குறுந்தொகைப் பாடலில், தலைவன் மணம் பேச வருதல் பற்றிக் குறிப்பிட்டுள்ளதைக் காணலாம். தலைவன் மணம் முடிக்கப் பொருளோடு வந்து, மணம் பேசிய போது, தலைவி இல்லத்தினர் நன்று நன்று எனக் கூறி மகனைக் கொடுத்தனர் என்பதை பின்வரும் பாடலால் அறியலாம்.

**'' தண்டுடைக் கையர், வெண் தலைச் சிதவலர்,**

**'நன்று நன்று' என்னும் மக்களோடு''**[162]

மேலும் நற்றிணைப் பாடலில்,

**''வரைய வந்த வாய்மைக்கு ஏற்ப,**

**நமர் கொடை நேர்ந்தனர் ஆயின் அவருடன்''**[163]

தலைவன் தலைவியை மணக்க வேண்டி பெண் கேட்டு வருதல் பற்றியும், சுற்றத்தார் மகள் கொடுக்க உடன்படுதல் பற்றியும் கூறப்பட்டுள்ளதை அறியலாம்.

பெண் வீட்டில், திருமணச் சடங்கினை நிகழ்த்தினர் என்பதைப் பின்வரும் ஐங்குறுநூற்றுப் பாடலால் அறியலாம்.

**''எம் மனை வதுவை நல் மணம் கழிக' எனச்**

**சொல்லின் எவனோ மற்றே - லென் வேல்''**[164]

மணமகளை மங்கல நீராட்டி, தழைத்த கூந்தலைப் பின்னி, முடிச்சிட்டு அழகு செய்யும் வழக்கம் இருந்தது என்பதைப் பின்வரும் பாடல் அடிகளால் அறியப் பெறலாம்.

"இன்று நின் ஒலிகுரல் மண்ணல் என்றதற்கு

எற்புலந்து அழிந்தன ளாகி தந்தகத்"[165]

தந்தையின் இல்லத்தில், சான்றோர் மணஞ் செய்விக்க நிகழும் மண விழாவில் அவர்களுக்கு மயிர்சாந்து பூசி, மங்கல நீராட்டிப் பல சிறப்புக் களையும் செய்வித்தனர் என்பதை பின்வரும் பாடல் விளக்குகின்றது.

"பொன்னுடை நெடுநகர், புரையோர் அயர,

நல்மாண் விழவில் தகரம் மண்ணி,

யாம்பல புணர்ப்பச் சொல்லாள், காம்பொடு"[166]

திருமண நாளில், அந்தணர்கள் வேதம் ஓத, மணமக்கள் நெருப்பை வலம் வந்தனர் என்பதை பின்வரும் கலித்தொகைப் பாடலால் அறியலாம்.

"மாதர் கொள் மான் நோக்கின் மடந்தை தன் துணையாக,

ஓதுடை அந்தணன் எரிவலம் செய்வான் போல்

ஆய்தூவி அன்னம் தன் அணி நடைப் பெடையொடு

மேதகத் திரிதரூஉம் மிகுபுனல் நல் ஊர"[167]

**அருந்ததி காணல்**

திருமண காலத்தில், மணப்பெண் அருந்ததி பார்க்கும் வழக்கம் உண்டு என்பதையும், மக்கள் தம் வாழ்நாளின் அளவை அறிய அருந்ததியைப் பார்த்தனர் என்பதையும், அது அவருக்குத் தெரிந்தால் அவர் மேலும் வாழ்வீரென்றும், தெரியாவிட்டால், அவர் வாழ்வின் முடிவு நெருங்கிவிட்டதென்றும் நம்பினர் என்ற கருத்தை பின்வரும் பாடலடிகள் விளக்குகின்றன.

'' வதுவை மகளிர் நோக்கினர், பெயர்ந்து
வாழ்நாள் அறியும் வயங்கு சுடர் நோக்கத்து
மீனொடு புரையும் கற்பின்,
வாள் நுதல் அரிவையொடு காண்வரப் பொலிந்தே''[168]

திங்கள் ரோகிணியோடு கூடிய நாள், திருமணத்திற்குரிய சிறந்த நாளாகக் கருதப்பட்டது என்பதையும், வீட்டிற்கு முன் வரிசையாகக் கால்களை நட்டுப் பந்தலிட்டனர் என்பதையும், பந்தலின் கீழ் புதுமணல் பரப்பினர் என்பதையும், மனை விளக்கு ஏற்றி, மாலைகளைத் தொங்க விட்டனர் என்பதையும், மணஞ் செய்து வைக்கும் மூதிய மங்கள மகளிர், தலையில் நீர்க்குடத்தினைச் சுமந்து கொண்டும், கைகளில் கலத்தினை ஏந்தியும் ஒன்று கூடினர் என்றும், புதல்வனைப் பெற்றெடுத்த, மங்கல மகளிர் நால்வர் கூடிக் 'கற்பினின்றும் வழாது தற்கத்துத் தற்கொண்டானைப் பேணும் தகை பிறந்தாள் ஆகுக' என மணமக்களை வாழ்த்தினர் என்பதையும், நீரோடு, நெல்லும் மலரும் கலந்து மணமகளின் கூந்தலில் தூவினர் என்பதையும் இவ்வாறு திருமணம் செய்யும் வழக்கம் கொண்டிருந்தனர் என்பதை பின்வரும் அடிகளால் அறியப் பெறலாம்.

'' உழுந்து தலைப் பெய்த கொழுங் களி மிதவை,
பெருஞ் சோற்று அமலை நிற்ப, நிரை கால்
தண் பெரும் பந்தர்த் தரு மணல் ஞெமிரி
மனை விளக்குறுத்து, மாலை தொடரி
கனை இருள் அகன்ற கவின் பெறு காலை,
கோள் கால் நீங்கிய கொடு வெண் திங்கள்
கோடு இல் விழுப் புகழ் நாள் தலை வந்தென

**உச்சிக் குடத்தர், புத்தகல் மண்டையர்,**

**பொது செய் கம்பலை முது செம் பெண்டிர்**

**முன்னவும் பின்னவும் முறை முறை தரத்தர**

**புதல்வற் பயந்த திதவை அவ்வயிற்று**

**வால் இழை மகளிர் நால்வர் கூடி**

**'கற்பின் வழாஅ; நற் பல உதவிப்**

**பெற்றோற் பெட்கும் புணையை ஆக!' என**

**நீரொடு சொரிந்த ஈர் இதழ் அலரி**

**பல் இருங் கதுப்பின் நெல்லொடு தயங்க**

**வதுவை நல் மணம் கழிந்த பின்றை''**[169]

மேலும்,

**'' தொன்று இயல் மரபின் மன்றல் அயர,**

**பெண் கோள் ஒழுக்கம் கண் கொள நோக்கி**

**நொது மல் விருந்தினம் போல, இவள்,**

**புது நாண் ஒடுக்கமும் காண் குவம் யாமே''**[170]

என இப்பாடலிலுள், தொன்று தொட்டு முறைப்படி திருமணம் நடத்தும் ஒழுக்கத்தினை குறிப்பிட்டிருக்கக் காணலாம்.

**சிலம்பு கழி நோன்பு**

பெண்பாலார்க்கு மணமாவதற்கு முன்பு, பெற்றோர் அணிவிக்கும் கன்னிச் சிலம்பினைத் திருமண வினைக்கு முன்னர் கழிப்பது மரபாகும். அதனை 'சிலம்பு கழி' என வழங்குவர். இதனைத் தாய் தன் இல்லத்தில் நிகழ்த்துவதனை ஒரு செல்வமாகவே கருதினாள் என்பதையும், இவ்வாறு

தாய் மகளை வரவேற்று மணத்திற்கு முன் சிலம்பு கழி நோன்பினைச் செய்தார் என்பதையும் பின்வரும் பாடல் விளக்குகின்றது.

'' நும் மனைச் சிலம்பு கழீஇ அயரினும்
என் மனை வதுவை நல் மணம் கழிக''[171]

'' சிலம்பு கழீஇய செல்வம்,
பிறருழைக் கழிந்த என் ஆயிழை அடியே?''[172]

'' ................தன்கால்
அரியமை சிலம்பு கழீஇ''[173]

என்ற நற்றிணைப் பாடலிலும்,

'' ................தொடியோள்
மெல்லடி மேலவும் சிலம்பே''[174]

என்ற குறுந்தொகையிலும்,

''தான் அமர் துணைவன் ஊக்க ஊங்கி
உள்ளாது கழிந்த முள் எயிற்றுத் துவர்வாய்ச்
சிறுவன் கண்ணி சிலம்பு கழீஇ
அறியாத தேஎத்தள் ஆகுதல் கொடிதே''[175]

'' சிறப்பும் சீரும் இன்றி, சீறூர்
நல்கூர் பெண்டின் புல்வேய் குரம்பை
ஓர்ஆ யாத்த ஒரு தூண் முன்றில்,
ஏதில் வறுமனைச் சிலம்பு உடன் கழீஇ
மேயினள் கொல்லென நோவல் யானே''[176]

**''அருங்காடி வியன்நகர்ச் சிலம்பு கழியாள்''[177]**

என்ற அகநானூற்று பாடல்கள் எடுத்துரைக்கின்றன.

**பார்ப்பார்க்கு நீர் வார்த்துக் கொடுத்தல்**

பொருளை யாசித்து வரும் பார்ப்பார்க்கு, (பிராமணர்களுக்கு) குளிர்ந்த கை நிறையுமாறு பொற்பூவும், பொற்காசும் நீருடன் தாரை வார்த்துக் கொடுத்ததைப் பின்வரும் பாடல் விளக்குகின்றது.

**'' ஏற்ற பார்ப்பார்க்கு ஈர்ங்கை நிறையப்**
**பூவும் பொன்னும் புனல்படச் சொரிந்து''[178]**

மேலும்,

**'' கை பெய்த நீர் கடற்பரப்ப''[179]**

என்ற புறநானூற்றுப் பாடலும், இக்கருத்தையே எடுத்துக்காட்டுகின்றன.

**கையில் காப்பு நூல் கட்டுதல்**

அரசி, பொன்னால் செய்த வளையல் அணிந்திருந்ததால், தழும்புகள் ஏற்பட்டன. மயிர் ஒழுங்கினைக் கொண்ட முன் கைகளில் இப்பொழுது, வலம்புரிச் சங்கினை அறுத்துச் செய்யப்பட்ட வளையல்களை அணிந்து, காப்பு நாணும் கட்டியிருந்தாள் என்பதைப் பின்வரும் பாடல் மூலம் அறியலாம்.

**'' பொலந்தொடி தின்ற மயிர் வார் முன்கை,**
**வலம்புரி வளையொடு கடிகை நூல் யாத்து''[180]**

**யானைக்கு மொழி பயிற்றுவித்தல்**

அகநானூறு, மலைபடு கடாம் மற்றும் முல்லைப்பாட்டில் யானைக்கு மொழி பயிற்றுவிக்கு பழக்கம் பற்றிக் குறிப்பிடப்பட்டுள்ளது.

**'' திரு வீழ் மார்பின் தென்னவன் மறவன் -**
**குழியில் கொண்ட மராஅ யானை**
**மொழியின் உணர்த்தும் சிறுவரை அல்லது,**
**வரைநிலை இன்றி இரவலர்க்கு ஈயும்''**[181]

என இப்பாடலில் கருத்தை அறிவிக்க யானைக்கு மொழி பயிற்றுவித்த செய்தியைப் புலவர் பெருந்தகைச் சாத்தனார் குறிப்பிட்டுள்ளார். பாண்டியனது படைத் லைவன் பண்ணி என்பான். அவன் யானைகளைப் பள்ளங்களில் வீழ்த்தி பழக்குவான். கருத்தை அறிவிக்க மொழிகளால் தொழில் பயிலச் செய்வான். ஒரு வரையறை இன்றி இரவலர்க்கு யானையை இல்லையென்று கூறாது வழங்குவான். தலைவன் கருத்தை சொல்ல மொழி பயிற்றுவித்தான் என்ற செய்தி குறிப்பிடப் பட்டுள்ளதைக் காணலாம்.

நப்பூதனால் எனும் புலவர் முல்லைப்பாட்டில் இக்கருத்தையே குறிப்பிட்டுள்ளார்.

**''கவை முட் கருவியின், வடமொழி பயிற்றி,**
**கல்லா இளைஞர் கவளம் கைப்ப''**[182]

என இப்பாடலில் பாகர் யானைக்கு வடமொழிச் சொற்கள் பயிற்றுவித்தல் பற்றி குறிப்பிடப்பட்டுள்ளது. யானையைக் காட்டிலிருந்து கொணரும் பாகர்கள் அவற்றைப் பழக்க வடமொழி சொற்களைக் கையாண்டனர். அப்புது, ஆது, ஐ போன்ற வடமொழிச் சொற்களைப் பயிற்றுவித்தனர்.

யானைப் படையின் செழிப்பை விளக்கிய புலவர் பாகர் யானைக்கு வடமொழி பயிற்றுவித்தனர் என்ற கருத்தையும் எடுத்துக் காட்டியுள்ளதை அறியலாம்.

**“ ............... பிணிமார்,**

**விரவு மொழி பயிற்றும் பாகம் ஓதை”** [183]

என இப்பாடலில் காட்டாற்றின் பெரிய சுழியில் விழுந்து அகப்பட்ட, யானையின் சினத்தைத் தணித்து பெரிய கம்பத்தில் பிணித்தற்கும், தாம் கூறிய தொழிலைச் செய்தற்கும் காரணமான மொழிகளைப் பேசி அவற்றை பாகர், யானைகளுக்கு பயிற்றுவித்தனர் எனும் பழக்கம் பற்றி கூறப்பட்டுள்ளது.

சங்கப் பாடல்களில் யானைக்கு மொழியைக் கற்பிக்கும் பழக்கம் பற்றி குறிப்பிடப்பட்டுள்ளது.

**தேரில் செல்லுதல்**

அகநானூற்றுப் பாடலில் மருதன் இளநாகனார், மதுரைக் கூத்தனார், உலோச்சனார் எனும் புலவர்கள் தேர்க்கு நான்கு குதிரைகள் பூட்டும் பழக்கம் பற்றிக் குறிப்பிட்டுள்ளனர்.

**“ நல் நால்கு பூண்ட கடும் பரி நெடுந்தேர்,**

**வாங்கு சினை பொலிய ஏறி; புதல:”** [184]

என இப்பாடலில், “உலகம் முழுவதும் தம்முடைய ஒரு பொழுது ஓட்டத்தும் போதாது என்று கூறுமாறு நேர் ஓட்டம் கொண்ட நல்ல நான்கு குதிரைகள் பூட்டப்பட்ட தேரில் வளைந்த கொடிஞ்சி பொலிவு பெறுமாறு தேர்ப்பாகன் ஏறி அமர்ந்தான். அரசன் போர் வினையை முடித்து வெற்றி

வாகை சூடினான். வெற்றி பொருந்திய வீரர்கள் மகிழுமாறு தேர்ப்பாகன் கடிவாள வாரினைப் பிடித்துச் செலுத்தினான்'' என்பதன் மூலம் தேரில் நான்கு குதிரைகள் பூட்டிய பழக்கம் இருந்திருப்பதை அறியப் பெறலாம்.

**'' நால்கு உடன் பூண்ட கால்நவில் புரவிக்**

**கொடிஞ்சி நெடுந்தேர் கடும்பரி தவிராது''[185]**

என இப்பாடலில், ''காற்றைப் போல் விரைந்து செல்லும் குதிரைகள் நான்கினையும், தாமரை மொட்டின் வடிவமாகச் செய்து தேர் முன் நடப்பட்டிருக்கும் கொடிஞ்சினையும் ஒரு சேரத் தேரில் பூட்டி தலைவன் தலைவியைக் காண வருகின்றான். கார் காலத்து முல்லை நிலத்தில் தேர்ச் சங்கரங்கள் கிழித்துச் செல்லுமாறு தேரினைச் செலுத்தினான் என்பதி லிருந்து தேரில் நான்கு குதிரைகள் பூட்டும் வழக்கத்தினை அறிய முடிகிறது.

**'' ...............செந்தினைக்**

**குரல் வார்ந் தன்ன குவவுத் தலை, நல்நான்கு**

**வீங்கு சுவல் மொசியத் தூங்கு நுகம் தழீஇ**

**பூம்பொறிப் பல்படை ஒலிப்பப் பூட்டி**

**மதியுடை வலவன் ஏவலின் இகுதுறைப்**

**புனல் பாய்ந் தன்ன வாம்மான் திண்தேர்க்''[186]**

என இப்பாடலில் தலைவன் நான்கு குதிரைகள் பூட்டப்பட்ட தேரில் தலைவியைக் காண வருதல் பற்றி குறிப்பிடப்பட்டுள்ளது. நீல மணியிலான நெற்றிச் சுட்டியையும், மயிர் அடர்ந்த பிடரியினையும், வரிசையாக ஒரே விதமாக ஓடும் ஓட்டத்தையும், நீண்டு வளைந்தாற் போன்ற கழுத்தினையும், கொழுவிய சோற்றை உண்டு, புரவி நூல் கூறும் இலக்கணப்படிப் பிறந்த நான்கு குதிரைகள் பூட்டப்பட்ட தேரை

மணற்பரப்பு, வாய்கால் போன்ற இடங்களில் அறிவுடைய தேர்ப்பாகன் செலுத்தினான் என்ற செய்தி குறிப்பிடப்பட்டிருப்பதன் மூலம் தேர் செலுத்தும் முறை பற்றி அறியலாம்.

இப்பாடல்கள் மூலம் சங்க கால மன்னர்கள் நான்கு குதிரைகள் பூட்டி செலுத்தும் பழக்கம் கொண்டிருந்தனர் என்பதை அறிய முடிகிறது.

**நடுகல் வழிபாடு**

பட்டினப்பாலையில் நடுகல் வழிபடும் பழக்கம் பற்றி பின்வருமாறு கூறப்பட்டுள்ளது.

**'' கிடுகு நிரைத்து எஃகு ஊன்றி**
**நடு கல்லில் அரண் போல''**[187]

என இப்பாடலில், போரில் உயிர் நீத்த வீரனுக்கு நடுகல் நட்டு, வைக்கப்பட்டுள்ள கல்லைச் சுற்றி கேடயத்தை வரிசையாக வைத்து, அவற்றைச் சுற்றி வேல்கள் ஊன்றப் பெற்று, அரண் போல் பாதுகாத்து வழிபட்டனர் என்ற செய்தியைக் காணலாம்.

**'' வரும் புனல் தந்த வெண் மணற் கான் யாற்று**
**உரு கெழு கரும்பின் ஒண்பூப் போல**
**கூழுடைக் கொழு மஞ்சிகை,**
**தாழுடைத் தண் பணியத்து,**
**வால் அரிசிப் பலி சிதறி**
**பாகு உகுத்த பசு மெழுக்கின்**
**காழ் ஊன்றிய கவி கிடுகின்ற**
**மேல் ஊன்றிய துகிற் கொடியும்''**[188]

என இப்பாடலில், நடுகல் நட்ட இடத்தில் புது மெழுகினைப் பூசி, கலங்களில் சாதம் மற்றும் பண்டங்கள் இட்டு, அவ்விடத்தில் வெற்றிலை, பாக்கு வைக்கப் பெற்று, அரிசியை பலியாகத் தூவி, வெண்ணிறத் துகில் கொடிகள் நடப்பட்டு வழிபாடு நடத்தினர் என்பதை அறியப் பெறலாம்.

பகைவர்களை போர் முனையில் எதிர்த்து நின்று, தடுத்து அவர்களது யானைகளைக் கொன்று இறந்தவர்களுக்கு வைக்கப்பட்டுள்ள நடுகல்லைத் தெய்வமாக எண்ணி நெல்தூவி வழிபடும் பழக்கம் கொண்டிருந்தனர் என்பதை மாங்குடி கிழார் எனும் புலவர் பின்வரும் அடிகள் மூலம் எடுத்தியம்பியுள்ளதை அறியலாம்.

**'' ஒளிறு ஏந்து மருப்பின் களிறு எறிந்து வீழ்ந்ததென**

**கல்லே பரவின் அல்லது**

**நெல் உகுத்துப் பரவும் கடவுளும் இலவே''**[189]

வடக்கிருந்த பொத்தியார் எனும் புலவர் நட்புரிமை பூண்டு கோப்பெருஞ்சோழன் கல்லாகும். இவ்விடத்து தாமும் விரும்பி இடம் கேட்பின் அளிப்பீராக என்று வேண்டியதைப் பின்வரும் பாடல் அடிகள் மூலம் அறியலாம்.

**''............. சிறுவழி மடங்கி**

**நிலை பெறு நடுகல் ஆகியக் கண்ணும்''**[190]

நடுகல்லில் தெய்வமாக நின்றவனுக்கு, விரும்பும் வண்ணம் யாழை இசைத்து வணங்கிச் செல்கின்றனர் என்பதை பின்வரும் வரிகள் மூலம் குறிப்பிடப்பட்டுள்ளது.

" இன்புறு முரற்கை நும்பாட்டு விரும்பு ஆக

தொன்று ஒழுகு மரபின் நும் மருப்பு இகுத்துத் துனைமின்" [191]

**அறச்சாலையில் இலவச உணவு வழங்குதல்**

காவிரிப்பூம்பட்டினத்தில் புலி அடையாளம் பொறித்த கதவுகளை யுடைய மதில் சூழ்ந்த அட்டிற் சாலைகள் இருந்தன என்பதையும், அந்த அட்டிலறச் சாலைகளிலும் சாதம் வடித்த பொழுது வெளிவந்த கொழுவிய கஞ்சி ஆறு போல் தெருக்களில் ஓடிக் கொண்டிருக்கும் மக்கட்கு எப்போதும் அறச்சாலையில் உணவு வழங்கப்பெற்று வந்தமையைப் பட்டினப்பாலை குறிப்பிடுகிறது.

" புலிப் பொறிப் போர்க் கதவின்

திருத்துஞ்சும் திண்காப்பின்

புகழ்நிலை இய மொழிவளர

அறம் நிலை இய அகன் அட்டில்

சோறு வாக்கிய கொழுங் கஞ்சி

யாறு போலப் பரந்து ஒழுகி" [192]

**அறம் கூறும் அவையம்**

பாண்டிய நாட்டில் அறம் நிலைபெறுவதற்காக, அறம் கூறும் அவயங்கள் அமைக்கப்பட்டிருந்ததைக் காண முடிகின்றது. அறம் கூறும் அவையத்தார் தற்கால நீதிமன்றம் போன்று, தாம் பயின்ற தரும நூல் முறைப்படி அறம் கூறி வந்தனர். தாங்கள், அறநூல் காட்டிய வழியில் சென்றதோடு, அனைவரையும் அறநெறி வழியில் நிற்கக் கோரினர். பகை, நட்பு என்று பாராமல், பிறழாது, துலாக்கோல் போன்று, சமமாக நின்று

நீதியைக் காத்தனர். இவ்வாறு மக்கள் அறநெறி பிறழாது வாழ்வதற்காக அறம் கூறும் அவையங்களே காரணமாயிருந்தன என்பதைப் பின்வரும் பாடல் அடிகளால் உணரப் பெறலாம்.

'' அச்சமும் அவலமும் ஆர்வமும் நீக்கி,
செற்றமும் உவகையும் செய்யாது காத்து,
ஞெமன் கோல் அன்ன செம்மைத்து ஆகி,
சிறந்த கொள்கை அறம் கூறு அவையமும்''[193]

அமைச்சர் அஞ்சாது அரசர்களை இடித்துரை வழங்கி அறநெறிப்படுத்தி வந்தனர். பழிபாவத்திற்கு அஞ்சியும், அடக்கம் உடையவராயும், புகழால் உயர்ந்தவர்களாகவும், அறிவில் சிறந்தவர்களாகவும் அமைச்சர்கள் விளங்கினர் என்பதை அறியலாம். அரசனிடம் உள்ள நன்மைகளையும், தீமைகளையும் ஆராய்ந்து காவிதிப்பட்டின அமைச்சர்கள், மன்னரை நன்னெறிப் படுத்தியதை அறிய முடிகிறது. ஏனாதி, காவிதி போன்ற பட்டங்கள் மன்னரால், அமைச்சருக்கு வழங்கப்பட்டிருந்தது. பின்வரும் பாடல் வரிகளால் அந்தணர்களும் அமைச்சர்களும் அரசரை நல்வழிப்படுத்தி வந்ததை அறியப் பெறலாம்.

'' நறுஞ் சாந்து நீவிய கேழ் கிளர் அகலத்து,
ஆவுதி மண்ணி, அவிர் துகில் முடித்து,
மா விசும்பு வழங்கும் பெரியோர் போல,
நன்றும் தீதும் கண்டு ஆய்ந்து அடக்கி,
அன்பும் அறனும் ஒழியாது காத்து,
பழி ஒரீஇ உயர்ந்து, பாய் புகழ் நிறைந்த
செம்மை சான்ற காவிதி மாக்களும்''[194]

மதுரையில் மோகூரில் பழையன் என்னும் குறுநில மன்னன், நாற்பெருங் குழு அமைத்து மக்களைக் காத்து வந்ததை பின்வரும் பாடலால் அறியலாம். புரோகிதர், படைத் தலைவர், தூதர், ஒற்றர் என்று நான்கு குழுக்கள் இருந்தன. இந்நாற் பெருங்குழுவினர் வாய்மையில் பிறழாதவராய் மன்னனை வழிநடத்திச் சென்றிருந்ததை அறியலாம்.

**'' மழை ஒழுக்கு அறாஅப் பிழையா வினையுள்,**
**பழையன் மோகூர் அவையகம் விளங்க,**
**நான் மொழிக் கோசர் தோன்றியன்ன,**
**தாம் மேஎந் தோன்றிய நாற்பெருங்கு ழுவும்''**[195]

**சிற்பக் கட்டிடக்கலை**

சங்க காலத்தில், சிற்ப நூல் வல்லவர்கள் இருந்ததையும், கோயில்களும், அரண்மனைகளும் சிற்ப நூலின் மரபு பிறழாமல், சிற்ப நூல் இலக்கணத்தின் படி அமைக்கப் பெற்றிருந்ததையும் அறிய முடிகிறது. நாள், நாழிகை ஆகியவை பார்த்து மனைகளை வகுத்தனர். காலத்தை அறிவதற்காகக் கோல்களை நட்டு, அவற்றின் நிழலின் அளவினைக் கொண்டு காலத்தை அறியும் முறை இருந்தது. கயிறு இட்டு மனை வகுக்கும் முறையும், திசைக்காவல் தெய்வங்களை வழிபடும் முறையும் சிற்ப நூல்களில் கூறப்பட்டதையும், பயன்பாட்டில் இருந்தமையும் அறியப் பெறலாம். சித்திரைத் திங்களில், முதல் பத்து நாட்களும், இறுதிப் பத்து நாட்களும் நீக்கி, நடுவில் நின்ற பத்து நாட்களில் ஏதேனும் ஒரு நாளில், பகற் பொழுது பதினைந்தாம் நாழிகையில் வடக்கு தெற்காக அமைந்த கோல்களிடையே இரு கோல்களின் நிழலும் ஒன்றன் மேல் ஒன்றாய் ஒரே நேர்கோட்டில் விழும். அந்நாளில் அவ்வமயத்தில் அரசனுடைய அரண்மனை அமைப்பதற்காகத்

'திருமுளைச் சார்த்து' என்னும் சடங்கு செய்யப்பட்டதையும் அறியலாம். சிற்ப நூலை அறிந்த தச்சர்கள், நுட்பமாக, நூல் பிடித்துப் பார்த்து கட்டடங்களை அமைத்தனர். அவர்கள், அரண்மனையின் ஒவ்வொரு பகுதியும் அமைய வேண்டிய திசைகளைக் கருத்தில் கொண்டு அத்திசைகளில் காவலாக நிற்கும் தெய்வங்களால் எக்குறையும் நேராத வண்ணம், அவற்றிற்கு வழிபாடுகளை நிகழ்த்தினர். பெரும் புகழுடைய மன்னவர்களின் தகுதிக்கும், தேவைக்கும் ஏற்ப மனைகளும், மண்டபங்களும், வாயில்களும் பாகுபடுத்தப்பட்டு அமைக்கப் பெற்றிருந்ததையும் பின்வரும் பாடல் அடிகளால் உணரலாம்.

**'' விரிகதிர் பரப்பிய வியல்வாய் மண்டிலம்**
**இடு கோல் குறிநிலை வழுக்காது குடக்கு ஏர்பு,**
**ஒரு திறம் சாரா அரைநாள் அமையத்து,**
**நூல் அறி புலவர் நுண்ணித்தின் கயிறு இட்டு,**
**தேயும் கொண்டு, தெய்வம் நோக்கி,**
**பெரும்பெயர் மன்னர்க்கு ஒப்ப மனைவகுத்து''**[196]

அரண்மனையின் அனைத்துப் பகுதிகளில் மதில் அமைக்கப் பட்டிருந்தன. கட்டங்கள் அனைத்தையும் ஒருசேர வளைத்து, மதிலின் கோபுர வாயில் உருவாக்கப்பட்டது. மதிலின் வாயிலில் உள்ள கதவுகள், ஆணிகளும் இரும்பினால் பிணிக்கப் பெற்றிருந்தன. அவை, சாதிலிங்கக் குழம்பினால் செவ்வண்ணம் பூசப் பெற்றிருந்தன. இதிலிருந்து அக்கால மக்கள் வாசல் கதவிற்கு (Gate), வண்ணம் பூசும் (Paint) அடிக்கும் முறையை பின்பற்றி இருந்ததை அறியலாம். வாயில்களில் வெற்றித் தெய்வம் உறைவதாகக் கருதியதனால், அவற்றிற்கு நெய்யும், வெண்சிறு

கடுகும் இட்டு வழிபடும் மரபு இருந்ததையும், நெய்யும், ஐயவியும் தெய்வங்களால் விரும்பப்படுவன என்பதையும் அறியலாம். வாயில்களின் மேல் உள்ள கற்பலகையில் திருமகளை, இருத்தி இரண்டு யானைகள் இரு பக்கமிருந்து நீர் சொரிவதாக அமைந்திருந்தனர். கோயில்களிலும், அரண்மனைகளிலும் செல்வர் மாளிகைகளிலும் இவ்வடிவு உடைய உருவச்சிலை நுழைவாயிலில் காணப்படும் என்பதைப் பின்வரும் பாடல் அடிகள் எடுத்துரைக்கின்றன.

**''ஒருங்கு உடன் வளைஇ ஓங்குநிலை வரைப்பின்**
**பரு இரும்பு பிணித்து, செவ்வரக்கு உரீஇ**
**துணைமான் கதலம் பொருத்தி, இணை மாண்டு,**
**நாளொடு பெயரிய கோள் அமை விழு மரத்து,**
**போது அவிழ் குவளைப் புதுப்பிடி கால் அமைத்து,**
**தாழொடு குயின்ற, போர்அமை புணர்ப்பின்,**
**கைவல் கம்மியன் முடுக்கலின், புரைதீர்ந்து,**
**ஐயவி அப்பிய நெய்அணி நெடுநிலை,**
**வென்று எழு கொடியொடு வேழம் சென்று புக,**
**குன்று குயின்றன்ன ஓங்குநிலை வாயில்;**[197]

திருமகள் நிலையாகத் தங்கும் குற்றமில்லாத சிறப்புடையதாக அரண்மனை முற்றம் விளங்கியிருந்ததைக் காண முடிகின்றது. ஆற்று நீரினால் கொண்டு வரப்பட்ட புதுமணலைப் பரப்பி அரண்மனை முற்றத்தை அழகுபடுத்தியிருந்தையும், கவரிமான்களையும், அன்னப் பறவைகளையும் அரண்மனை வாயில் முற்றத்தில் விட்டு, அலைந்து தாவி விளையாடும் அழகினர் என்பதையும் பின்வரும் அடிகள் எடுத்தியம்புகின்றன.

''திருநிலை பெற்ற தீதுதீர் சிறப்பின்

தரு மணல் ஞெமிரிய திருநகர் முற்றத்து

நெடுமயிர் எகினத் தூநிற ஏற்றை,

குறுங்கால் அன்னமொடு உகரும் முன்கடை,''[198]

அக்காலத்தில், நிலா முற்றத்தில் பெய்த மழைநீரை வெறியேற்றும் குழாய்கள் கலைத்திறனுடன், மகரமீனின் வாய் போல வடிவமைக்கப் பட்டிருந்ததையும் அறிய முடிகிறது. மழைநீர், மரங்களிலிருந்து வெளிப்படும் ஒலியை அருவியுடன் ஒப்பிட்டுக் கூறியுள்ளதை பின்வரும் அடிகளால் காணலாம்.

'' பணைநிலை முனைஇய பல்உளைப் புரவி

புல் உணாத் தெவிட்டும் புலம்புவிடு குரலொடு,

நிலவுப் பயன் கொள்ளும் நெடுவெண் முற்றத்து,

கிம்புரிப் பகுவாய அம்பணம் நிறைய,

கவிந்து வீழ் அருவிப் பாடுவிறந்து, அயல

ஒலி நெடும் பீலிஒல்க, மெல் இயல

கலி மயில் அகவும் வயிர் மருள் இன்இசை,

நளி மலைச் சிலம்பின் சிலம்பும் கோயில்'' [199]

நாட்டினை ஆளுவதற்குரிய அடுத்த தலைமுறையுடன் பிறப்பிற்குக் காரணமாக விளங்கும் அந்தப்புரம் கருவறை என அழைக்கப் பெற்றிருந்தது. அரசமாதேவி தங்கியிருக்கும் அந்தப்புரத்தில் அரசனைத் தவிர, பிற ஆடவர் உள்ளே புக முடியாது. அந்தப்புரங்களை அலங்கரிக்க, யவன நாட்டிலிருந்து பாவை விளக்குகளை கொண்டு வந்தனர். அரண்மனைப் பகுதிகளில் இரவுப் பொழுதில் ஒளிக்காக இப்பாவை

விளக்குகளை ஏற்றும் பழக்கம் இருந்து வந்ததை அறியலாம். இப்பாவை விளக்குகளில் நெய் ஊற்றித் திரியை தூண்டிவிடும் பணியைக் குற்றேவல் மகளிர் புரிந்ததையும் காணலாம். அந்தப்புரத்தின் உட்பகுதி, சாந்து பூசப்பட்டு, தூண்களை உடையதாக பல்வல்லி சாதியாகிய கொடிகளுடன் அழகுடன் விளங்கியதையும், அந்தப்புரத்தின் மேல், கொடி கட்டப்பெற்று விளங்கியதையும் பின்வரும் பாடல் அடிகள் எடுத்தியம்புகின்றன.

**'' யவனர் இயற்றிய வினை மாண் பாவை**
**கை ஏந்து ஐஅகல் நிறைய நெய் சொரிந்து,**
**பரூஉத்திரி கொளீஇப் குரூஉத்தலை நிமிர்எரி,**
**அறுஅறு காலை தோறு, அமைவரப் பண்ணி,**
**பல்வேறு பள்ளிதொறும் பாய் இருள் நீங்க;**
**பீடு கெழு சிறப்பின் பெருந்தகை அல்லது,**
**ஆடவர் குறுகா அருங்கடி வரைப்பின்,**
**வரை கண்டன்ன தோன்றல, வரை சேர்பு,**
**வில் கிடந்தன்ன கொடிய, பல்வயின்,**
**வெள்ளி அன்ன விளங்கும் கதை உரீஇ,**
**மணி கண்டன்ன மாத்திரள் திண்காழ்**
**செம்பு இயன்றன்ன செய்வு உறு நெடுஞ்சுவர்,**
**உருவப் பல்பூ ஒரு கொடி வளைஇ,**
**கருவொடு பெயரிய காண்புஇன் நல்இல்''**[200]

நாற்பது ஆண்டுகள் நிரம்பப் பெற்ற, போரில் இறந்துபட்ட யானையின் தானே வீழ்ந்த தந்தங்களை எடுத்து, அவற்றின் செம்மை விளங்குமாறு, யானைத் தந்தத்தினால் கால் அமைத்து, வட்டக் கட்டில் உருவாக்கப் பட்டது. இக்கட்டிலை, தச்சன் தன்னுடைய கூர்மையான சிற்றுளியால்

நுட்பமாக செதுக்கி, பெரிய இலை வடிவம் இடையே விளங்குமாறு செய்தான். இக்கட்டில் அகன்ற அளவுடன், அரசமாதேவி பள்ளி கொள்வதற்காக அமைக்கப்பட்டதாகும். பின்வரும் பாடல் அடிகளால் யானைத் தந்தம் கட்டில் செய்யப் பயன்பட்டிருந்ததை அறியலாம்.

**'' தச நான்கு எய்திய பணைமருள் நோன்தாள்,**
**இகல் மீக்கூறும், ஏந்து எழில் வரிநுதல்**
**பொருது ஒழி, நாகம் ஒழி எயிறு அருகு எறிந்து**
**சீரும் செம்மையும் ஒப்ப, வல்லோன்**
**கூர் உளிக் குயின்ற, ஈர்இலை இடை இடுபு,**
**தூங்கு இயல் மகளிர் வீங்குமுலை கடுப்ப**
**புடைதிரண்டிருந்த குடத்த, இடை திரண்டு,**
**உள்ளி நோன் முதல் பொருத்தி, அடி அமைத்து,**
**பேர் அளவு எய்திய பெரும் பெயர்ப் பாண்டில்''**[201]

### பஞ்சுமெத்தை

பண்டையோர் நுண்ணிய உணர்வுடையவர்கள். படுக்கையின் மெத்தை மென்மையான உள்ளீடு பொருட்களைக் கொண்டு தயாரித்தனர். சேவலும் பெடையுமாகிய அன்னங்கள் புணரும்பொழுது, அவ்வின்ப உணர்ச்சி காரணமாக அவற்றின் உடலினின்று தாமே உதிர்கின்ற மெல்லிய தூவிகளை பஞ்சாகக் கொண்டு மெத்தைகள் உருவாக்கினர் என்பதை பின்வரும் பாடல் மூலம் அறியலாம்.

**'' இணைபட நிவந்த நீல மென் சேக்கையுள்**
**துணை புணர் அன்னத்தின் தூவி மெல் அணை அசைஇ**
**சேடு இயல் வள்ளத்துப் பெய்த பால் சில காட்டி.**[202]

**பாசறையில் முரசு முழங்கல்**

முழங்கும் குரலையுடைய போர் முரசங்களை நாட்காலைப் பொழுதில் ஒலிக்கச் செய்து, போர்க்கடமையினை மேற்கொண்டனர். இராப்போதில் போரிடுவது மரபு அன்று. ஆகையால், இரவில் துயின்று காலையில் போரினைத் தொடங்கினர். எனவே, வீரர்களைப் போருக்கு அழைக்கும் வகையில் முரசு முழங்கியது என்பதைப் பின்வரும் பாடலால் அறியலாம்.

**'' தழங்குரல் முரசம் காலை இயம்ப,**
**கடுஞ் சின வேந்தன் தொழில் எதிர்ந்தனனே''**[203]

மேலும் பாசறையில் முரசு முழங்கி, பள்ளயெழுச்சி நிகழ்ந்ததைப் பின்வரும் அடிகளும் எடுத்துக்காட்டுகின்றன.

**'' தழங்கு குரல் முரசமொடு முழங்கும் யாமத்து''**[204]

**'' மதவலி யானை மறலிய பாசறை**
**இடி உமிழ் முரசம் பொருகளத் தியம்ப''** [205]

**'' பருந்து பறக்கல்லாப் பார்வற் பாசறைப்**
**படுகண் முரசம் காலை இயம்ப''**[206]

**பறையறைந்து செய்தியை தெரிவித்தல்**

மதங் கொண்ட யானையை நீராட்டுதற்கு வெளிக் கொணரும் போது, பறையறைந்து, மக்கள் வெளியே வராதீர்கள் என்று சொல்லும் வழக்கம் பண்டைய காலத்தில் இருந்தது. பறையறைந்து தெரிவிக்க வேண்டியது மன்னனது கடமை என்பதை பின்வரும் பாடல் அடிகள் மூலம் அறியப் பெறலாம்.

**‘‘ நிறை அழி கொல் யானை நீர்க்கு விட்டாங்கு**

**பறை அறைந்தல்லது செல்லற்க! என்னா**

**இறையே தவறு உடையான்’’**[207]

**வீரக்கழல் அணிதல்**

பதிற்றுப்பத்து நான்காம் பாடலில், காலில் வீரக்கழல் அணிதல் பற்றிய செய்தி குறிப்பிடப்பட்டுள்ளது.

சேர மன்னன் அரிய போர்ச் சிறப்புகள் பொறிக்கப்பட்ட வீரக்கழலை காலில் அணிந்திருந்ததை பகையரசர் அழியுமாறு எதிர்த்து, வெல்லும் ஆற்றல் உடையவன் என்பதையும், நிலத்தில் படுமாறு தொங்கக் கட்டிய ஆடை அணிந்தது பெருமதிப்புடன் விளங்குபவன் என்பதையும் பின்வரும் பதிற்றுப்பத்துப் பகுதியால் அறியலாம்.

**‘‘ ஓடாப் பூட்கை, ஒண் பொறிக் கழற்கால்**

**இருநிலம் தோயும் விரிநூல் அறுவையர்’’**[208]

**வாதிடும் பட்டிமன்றங்கள்**

பலவாறு கேட்டறிந்தும், அறிவுடைய பல நூல்களை முழுமையாகக் கற்றறிந்தும் பேரறிவுடன் திகழும் நல்லாசிரியர்கள், வாதிடுவதற்கு ‘‘வாதக் கொடிகள் ஒருபுறம் பறந்து கொண்டிருக்கும்’’ பட்டிமண்டபங்கள் இருந்தன என்பதைப் பட்டினப்பாலை நூலால் அறியலாம்.

**‘‘ பல் கேள்வித் துறைபோகிய**

**தொல்லாணை நல்லாசிரியர்**

**உறழ்குறித் தெடுத்த உருகெழு கொடியும்’’**[209]

**வீர சுவர்க்கம் அடையச் செய்தல்**

பிள்ளை, இறந்து பிறந்தாலும், தசைப் பிண்டமாக வந்து பிறந்தாலும், அவற்றை ‘‘வாளால் வடுப்படுத்தி’’ அடக்கம் செய்யும் முறையைப் பின்பற்றினர் என்பதைப் பின்வரும் அடிகள் மூலம் அறியலாம்.

**‘‘குழவி இறப்பினும், ஊன்தடி பிறப்பினும்**
**ஆள் அன்று என்று வாளின் தப்பார்’’**[210]

நான்கு வேதத்தை உடைய அந்தணர், தருப்பைப் புல்லினை பரப்பிக் கிடத்துவர் என்பதையும், பின்னர் ‘‘போரில் வீழ்ந்த நெடிய கழலணிந்த வீரர் செல்லும் உலகிற்கு செல்லுக’’ என்று கூறி, அவ்வந்தணர் வாளால், ‘‘மார்பைப் பிளந்து அடக்கம் செய்யும் முறை’’ பின்வரும் அடிகள் எடுத்துக்காட்டுகின்றன.

**‘‘ ஓடல் மரீஇய பீடு இல் மன்னர்**
**நோய்ப்பால் விளிந்த யாக்கை தழீஇ**
**காதல் மறந்து, அவர் தீது மருங்கு அறுமார்**
**அறம்பரி கொள்கை நான்மறை முதல்வர்**
**திறம் புரி பசும் புல் பரப்பினர் கிடப்பி**
**மறம் கந்தாக நல் அமர் வீழ்ந்த**
**நீள் கழல் மறவர் செல்வுழிச் செல்க!’ என**
**வாள் போழ்ந்து அடக்கலும் உய்ந்தனர் மாதோ’’**[211]

**ஒப்பனைப் பழக்கம்**

மகளிர் காதில் குண்டலம் அணியும் வழக்கமுடையவர்கள் என்பதை, ''கொடுங்கால் கணங்குழை'' என்பதால் அறிய முடிகிறது. ஆடவர் தலையில் மாலை அணியும் வழக்கமுடையவர்கள் என்பதை,

**'' மகளிர் கோதை மாந்தர் மலையவும்''**[212]

என்ற வரிகள் புலப்படுத்துகின்றன. பரதவப் பெண்கள் திருவிழாக் காலங்களில் தழை ஆடை அணிந்தனர் என்பதை பின்வரும் அடிகள் மூலம் அறியலாம்.

**'' புன்தலை இரும்பரதவர்**
**பைந்தழையா மகளிரொடு''**[213]

செல்வக் குடியில் பிறந்த மகளிர் பகலில் பட்டுடையும், இரவில் பருத்தியாடையும் உடுத்தினர் என்பதை,

**'' பட்டு நீக்கித் துகில் உடுத்தும்''** [214]

என இவ்வரி விளக்குகின்றது. காலில் செருப்பு அணியும் பழக்கம் சங் காலத்தில் இருந்திருக்கிறது என்பதை பின்வரும் அடிகள் கூறுகின்றது.

**''தொடுதோல் அடியர் துடிபடக் குழீஇ''**[215]

தற்காலத்தில் உலக நாடுகள் தங்களுடைய நாட்டின் வருமானத்தில் பெரும்பகுதியை நாட்டின் பாதுகாப்பிற்காகவே செலவிடுகின்றன. சங்க காலத்தில் நாட்டின் பாதுகாப்பு பற்றி மோசிக்கீரனார் புறநானூற்றுப் பாடலில் தெளிவுபடுத்தியுள்ளனர். ஒரு நாட்டிற்கு நீர்வளமும் நெல் விளைச்சலும் அவசியம். அந்நாட்டிற்கு பாதுகாப்பு இல்லையெனில்

அவை அழிந்து மக்களுக்கு பயன்படாது. எனவே நாட்டின் உயிர் நாட்டு மக்கள். அவர்களைப் பாதுகாக்கப் போர் படைகளைப் பெருக்கிக் கொண்டனர் என்பதை பின்வரும் அடிகள் மூலம் விளக்கியுள்ளார்.

**'' நெல்லும் உயிர் அன்றே; நீரும் உயின் அன்றே;**
**மன்னன் உயிர்த்தே மலர் தலை உலகம்**
**அதனால், யான் உயிர் என்பது அறிகை**
**வேல் மிகு தானை வேந்தற்குக் கடனே''[216]**

## இயற்கை வழிபாடு

சங்க கால மக்கள், இயற்கைப் பொருட்களை கடவுளாய் வைத்து வழிபட்டனர் என்பதையும், உலகில் உள்ள அனைவரும் புகழ்ந்து வணங்கும்படியாக, ''உலகை வலமாகச் சுற்றி எழுந்து ஒளிவீசும் ஞாயிறு'' என்பதைப் பின்வரும் அடிகள் மூலம் அறியலாம்.

**'' உலகம் உவப்ப வலனேர்பு திரிதரும்**
**பலர் புகழ் ஞாயிறு கடல்கண் டாஅங்கு''[217]**

## குடவோலை முறை

அகநானூற்றுப் பாடலின் வாயிலாக, குடவோலை முறை பற்றிய செய்தி குறிப்பிட்டுள்ளதைக் காணலாம்.

மன்னர்கள் குடவோலை முறை மூலம் தேர்ந்தெடுக்கப்பட்டனர் என்பதையும், குடத்தில் ஓலைகளை இட்டு துணியால் மூடி, அவற்றை கயிற்றால் கட்டி ஆவண மாக்கள் முன்னிலையில் குடத்தின் மேல் இட்ட

இலச்சினையை ஆராய்ந்து, பின் ஓலையைத் தேர்ந்தெடுத்தனர் என்பதையும் பின்வரும் பாடல் அடிகளால் அறியப் பெறலாம்.

**'' கயிறு பிணிக் குழிசி ஓலை கொண்மார்**
**பொறி கண்டு அழிக்கும் ஆவண மாக்களின்**
**உயிர் திறம் பெயர, நல் அமர்க் கடந்த**
**தறுகணாளர் குடர் தரீஇ தெறுவர''[218]**

**ஊகம் புல்லை முடிந்து வைத்தல்**

மலைபடுகடாமில், ''புல்லை முடிந்து இடும் வழக்கம்'' பற்றி குறிப்பிட்டுள்ளது.

நிலப்பகுதியில் செல்பவர்கள், வழி தெரியாமல் துன்பமடையக் கூடாது என்பதற்காக, பல வழிகள் கூடும் சந்தியைக் கையால் துடைத்து, அடையாளமாக ஊகம் புல்லை முடிந்து வைத்திருப்பர் என்பதையும், வழியில் செல்வோர்க்கும், திரும்பி வருபவர்களுக்கும் வழிகாட்டியாகப் பயன்படும் வகையில் ஊகம் புல்லை அடையாளமாக முடிந்து வைத்திருந் ததையும் பின்வரும் பாடல் அடிகளால் அறியலாம்.

**'' பண்டு நற்கு அறியாப் புலம் பெயர் புதுவிர்**
**சந்து நீவிப் புல் முடிந்து இடுமிண்''[219]**

**நாட்டுப்பற்று**

புறநானூற்றுப் பாடலில், மலையை வாழ்த்துதல் பற்றிக் குறிப்பிடப் பட்டுள்ளது. நாட்டை விட்டுப் பிரியும் பொழுது, உணவும் உறைவிடமும் தந்து இன்புறச் செய்த பறம்பு மலைக்கு வாழ்த்து கூறினர் என்பதையும்,

பாரி மகளிர் இவ்விடத்தினின்று செல்கிறேன் என்று கூறிச் சென்றனர் என்பதையும், இப்பாடல் வாயிலாக அறியலாம்.

**'' நீர் வார் கண்ணேம் தொழுது நிற்பழிச்சிச்**

**சேறும் வாழியோ பெரும் பெயர்ப் பறம்பே!''[220]**

**குற்றமும் தண்டனையும்**

கள்ளூரில் அறவோர் முன்னிலையில் ஒருவன் பொய்ச் சூள் உரைத்த போது அவையத்தார், சான்றோர் சிலர், உண்மை அறிந்து கொண்டு, அவனை மரத்தின் மூன்று கிளைகள் நடுவே கட்டி வைத்து, சுண்ணாம்பு நீரை தலையில் பெய்து தண்டனை கொடுத்தனர் என்பதையும், அவையில் கூடியிருந்தேன் அனைவரும் தண்டனை சரியானதே என்பதை மகிழ்ச்சி ஆரவாரம் மூலம் தெரிவித்தனர் என்ற கருத்தையும் இப்பாடலின் வாயிலாக அறியப் பெறலாம்.

**'' கரும்பு அமல் படப்பை, பெரும்பெயர்க் கள்ளூர்,**

**திருநுதற் குறுமுகள் அணிநலம் வவ்விய**

**அறனி லாளன், 'அறியேன்' என்ற**

**திறன் இல் வெஞ்சூள் அறிகரி கடாஅய்,**

**முறிஆர் பெருங்கிளை செறியப் பற்றி,**

**நீறுதலைப் பெய்த ஞான்றை,**

**வீறுசால் அவையத்து ஆர்ப்பினும் பெரிதே''[221]**

**வழிபாட்டு முறை**

சூல் கொண்ட மகளிர், தேவராட்டியுடன் தெய்வங்களுக்குப் படையல் தந்து வழிபட்டனர். யாழில் செவ்வழி என்னும் பண்ணைப்

பாட்டினர். மாலையில் செவ்வழிப் பண்ணும், காலையில் மருதப் பண்ணும் வாசித்தல் இசை நூல் மரபு என்பதும் அறியத்தக்கது. யாழ், முழவு, ஆகுளி என்ற இசைக் கருவிகளும், செவ்வழிப் பண்ணும், குரல் என்னும் நரம்பு முதலாகப் பண் இசைக்கும் முறையும் அக்கால மக்கள் வாசித்திருந்ததைப் பின்வரும் பாடல் அடிகள் எடுத்துரைக்கின்றன.

**'' திவவு மெயந் நிறுத்துச் செவ்வழி பண்ணி,**
**குரல் புணர் நல்யாழ் முழுவொடு ஒன்றி,**
**நுண்நீர் ஆகுளி இரட்ட, பலவுடன்,**
**ஒண் சுடர் விளக்கம் முந்துற, மடையொடு**
**நல்மா மயிலின் மென்மெல இயலி,**
**கடுஞ்சூல் மகளிர் பேணி, கை தொழுது,**
**பெருந்தோட் சாலினி மருப்ப''**[222]

மனைகளில் வாழும் மகளிர், தெய்வத்தை வழிபடும் பழக்கம் கொண்டிருந்தனர். சூல் கொண்ட மகளிர் (கருவுயிர்த்த) இடுக்கண் இன்றிப் புதல்வரைப் பெற வேண்டும் என்று தெய்வத்தை வேண்டி, குளத்து நீரில் நீராடி குறை நீங்கப் பெற்றனர். இல்லாறே, புதல்வர்களை ஈன்ற மகளிரும், குளத்து நீரில், புதல்வர்களை ஈன்ற மகளிரும், குளத்து நீரில், நீராடி, இம்மையிலும், மறுமையிலும் பெரும் பயனைப் பெற்றோம் என்று மகிழ்ந்து நீராடியதைப் பின்வரும் பாடல் அடிகள் எடுத்தியம்புகின்றன.

**'' கணவர் உவப்ப, புதல்வர்ப் பயந்து**
**பணைத்து ஏந்து இனமுலை அமுதம் ஊற,**
**புலவுப் புனிறு தீர்த்து, பொலிந்த சுற்றமொடு**
**வளமனை மகளிர் குளநீர் அயர''**[223]

மகளிர், தெய்வங்களின் திருக்கோவில்களுக்குச் சென்று வழிபடும் பழக்கம் கொண்டிருந்தனர் என்பதையும், இறைவனை நிலா முற்றங்களிலிருந்து விழாவினைக் கண்டு சேவித்தனர் என்பதையும் அறிய முடிகிறது.

கோயில்களில் வழிபாடு செய்யச் செல்லும் மகளிர், பொன்னால் ஆன சிலம்பு போன்ற அணிகலன்களாலும், புனுகு முதலிய் மணப் பொருள்களாலும் ஒப்பனை செய்து கொண்டனர். மாடங்களிலிருந்தும் விழாவினைக் கண்டு மகிழ்ந்தனர் என்பதைப் பின்வரும் பாடல் அடிகள் எடுத்தியம்புகின்றனர்.

**'' நாள் மகிழ் இருக்கை காண்மார், பூணொடு**
**தென் அரிப் பொற்சிலம்பு ஒலிப்ப, ஒள் அழல்**
**தா அற விளங்கிய ஆய்பொன் அவிர் இழை**
**அணங்கு வீழ்வு அன்ன பூந்தொடி மகளிர்,**
**மணம் கமழ் நாற்றம் தெருவுடன் கமழ,**
**ஒண் குழை நிகழும் ஒளிகெழு திருமுகம்**
**திண் காழ் ஏற்ற வியல் இரு விலோதம்**
**தெண் கடல் திரையின், அசைவளி புடைப்ப**
**நிரை நிலை மாடத்து அரமியம் தோறும்**
**மழைமாய் மதியின் தோன்றுபு மறைய''**[224]

**நாளங்காடி**

நாளங்காடியில், பூக்களைத் தட்டுகளில் பரப்பி வைத்தும், மாலைகளத் தொடுத்தும் வாணிபம் புரிந்தனர். சுண்ணம், நவமணிகளும், பொன்னும், சந்தனமும், கருப்பூரம் முதலியன புனுகிலும் பனி நிரிலும், நனைய வைத்து

இடிக்கப் பெற்று பலர் துணையுடன் தயாரித்தனர். இவ்வாறு சங்க காலத்திலிருந்தே, கைத்தொழில், சிறு தொழில்களைச் செய்து வந்ததைக் காணலாம். பாக்குக் காய்கள், கருங்காலிக் கட்டையைச் சீவிக் காய்ச்சிய களியுடன் சேர்த்து உண்பதற்கு ஏற்றவாறு வழங்கினர். சங்கினைச் சுட்டு, வெற்றிலைக்கும் சுண்ணாம்பாகப் பயன்படுத்தினர். நாற்படைகள் இடையறாமல் வீதிகளில் உலவியதால், வணிகர்கள் தங்கள் பொருட்களை விற்க அஞ்சி, படை நீங்கிய பின், வணிகர்கள் பண்டங்களை விற்றனர். ஓய்விற்காக மர நிழலில் உறங்கியிருந்தனர். போரில் பெற்ற வெற்றி குறித்து, மழவர்களை மகிழ்விப்பதற்கும், போர் மேற்செல்ல அவர்களை ஊக்குவிப்பதற்கும், வீர முரசம் முழக்கும் பழக்கமும், துடியடித்தலும், கிணைப்பறை கொட்டுதலும் அக்கால வழக்கில் இருந்ததை பின்வரும் பாடல் அடிகளால் அறியலாம்.

'' தீம் புழல் வல்சிக் கழற் கால் மழவர்
பூந்தலை முழவின் நோன்தலை கடுப்ப,
பிடகைப் பெய்த கமழ் நறும் பூவினர்,
பலவகை விரித்த எதிர்பூங் கோதையர்,
பலர் தொகுபு இடித்த தாது உகு சுண்ணத்தர்
தகை செய் தீம் சேற்று இன்நீர்ப் பசுங்காய்,
நீடு கொடி இலையினர், கோடு சுடு நூற்றினர்,
இருதலை வந்த பகை முனை கடுப்ப,
இன் உயிர் அஞ்சி, இன்னா வெய்து உயிர்த்து,
ஏங்குவனர் இருந்து, அவை நீங்கிய பின்றை,
பல்வேறு பண்ணியம் தழீஇத்திரி விலைஞர்,
மலை புரை மாடத்துக் கொழுநிழல் இருத்தர''[225]

### பூத்த மகளிர் கோயில் செல்லாமை

பூப்படைய மகளிர், மனைகளில் கலம் தொடாது விலகி நின்று தாம் பூப்புற்றமையைத் தெரிவித்தது தமிழர் மரபாயிருந்ததைக் காணலாம். பூப்புடைய மகளிர் முருகன் கோட்டத்தை அணுகி அஞ்சி நீங்குவர் என்பதால் கலந்தொடா மகளிர் கோவில்களுக்குச் செல்லாதும் இருந்தனர் என்பதைப் பின்வரும் பாடலடிகள் உணர்த்தும்.

'' அணங்குடை முருகன் கோட்டத்துக்
கலம் தொடா மகளிரின், இகழ்ந்து நின்றவல்''[226]

### கோவில் வலம் வருதல்

திருப்பெரும் குன்ற திருக்கோயிலை பண்டைக் கால மக்கள் வலம் வந்து வணங்கியதை அறியலாம். இதிலிருந்து கிரி (மலை)யை வலம் வரும் பழக்கமும், கோவிலை வலம் வந்து வணங்கும் முறையும் அக்காலத்தி லிருந்தே தொன்று தொட்டு நிலவி வருவதைக் காண முடிகின்றது என்பதை,

'' சூள் உறை குன்றின் தடவரை ஏறி மேல்
பாடு வலம் திரி பண்பின்''[227]

### நெசவுத் தொழில்

வணிகர் இல்லத்து மகளிர் நுண்மையான ஆடைகளை அணிந்திருந்தமை குறிப்பிடப்பட்டுள்ளது. மகளிர் அல்குலிடத்தே கிடந்து அசையும் துகில் கொன்றையின் அரும்புடைய கிளையில் பனி மாசு படர்ந்தால் போன்று உள்ளது என்று அவ்வாடையின் நுட்பத்தை எடுத்துக் காட்டியுள்ளார்.

**'' கூழ் உடை நல் இல் கொடும்பூண் மகளிர்**

**கொன்றை மென்சினைப் பனிதவழ் பவை போல்**

**பைங்காழ் அல்குல் நுண்துகில் நுடங்க''**[228]

மேலும், இழை போன வழி ஈது என்று அறிய முடியாத வகையில் நுட்பமாக நெய்யப்பட்டிருந்த, பூத்தொழிலை உடையதாய் புத்தாடையை உடுத்தி மகிழ்ந்தனர்.

**'' இழைமருங் கறியா நுழைநூற் கலிங்கம்''**[229]

என வரும் மலைபடுகெடாம் பகுதியிலும்,

**'' நோக்கு நுழைகல்லா நுண்மைய**

**பூக்கனிந்து அரவுரியன்ன அறுவை நல்கி''**[230]

என வரும் பொருநராற்றுப்படை அடிகள், பண்டைத் தமிழகத்தில் ஆடை நெய்தல் தொழில் சிறப்புற்றிருந்தமையை உணர்த்துகின்றதைக் காணலாம்.

**கஞ்சி ஆடைகள்**

சங்க கால மக்கள், ஆடைகளுக்கு கஞ்சி போட்டு பயன்படுத்தினர் என்பதை அகநானூற்றுப் பாடல் வரிகளால் அறியமுடிகிறது. ஆடை வெளுப்பவள், கஞ்சி பசை ஊட்டப்பெற்ற ஆடையை வெளுத்து, அக்கஞ்சிப் பசையினை, நீர்த்துறையின் கண் அலசி விடுவாள் என்பதை பின்வரும் பாடல் அடிகள் மூலம் அறியலாம்.

**''பசை கொல் மெல் விரல், பெருந்தோள், புலைத்தி''**[231]

**குடை செய்தல்**

உழவர் வழிப் போவார்க்குத் துன்பம் விளைவித்தனர், அவ்வழியில் வணிகர் கூட்டத்தார் செல்வர். அவர்கள் தாம் சாதம் கட்டிக் கொண்டு வந்து உண்டு எறிந்த வெண்மையான பனை ஓலையால் குடை முடைந்தனர் என்பதைப் பின்வரும் அகநானூற்றுப் பாடலால் அறியலாம்.

**'' உறு கண் மழவர் உருள் கீண் டிட்ட**
**ஆறு செல் மாக்கள் சோறு பொதி வெண்குடை''**[232]

பண்டைக் காலத்து மகளிர், தழையாலே ஆடை இயற்றி உடுத்தும் வழக்கம் உடையவர் என்பதை பின்வரும் பாடலால் அறியலாம்.

**'' பெருந்தண் மாத்தழை**
**திருத்துகாழ் அல்குல் திளைப்ப உடீஇ''**[233]

மேலும்,

**'' பல்பூம் பகைத்தழை நுடங்கும் அல்குல்''**[234]

என்றும்

**'' அப்பூந் தொடலை அணித்தழை அல்குல்**
**செம்பொறிச் சிலம்பின் இளையோள்''** [235]

என்றும்,

**'' தண்ணறும் பிடவமும் தவக் கொடித் தளவமும்**
**வண்ணவன் தோன்றியும் வயங்கினார்க் கொன்றையும்**
**அன்னவை, பிறவும் பன்மலர் துதையத்**
**தழையும் கோதையும் இழையும் விளையாடு**

தையினர் மகிழ்ந்து திளைஇ என்றிவை

மடமொழி யாயத் தவர்''[236]

என வரும் இலக்கியப் பகுதிகளால் அறியலாம்.

'' புகை விரிந்தன்ன பொங்கு துகில்''[237]

**பாணர்**

பாணர்கள், மீன்பிடிக்கும் வழக்கம் உடையவர்கள் என்பதையும், மீன் பிடிப்பதற்குரிய தூண்டிலில், நெடிய வளைந்த வாயினையுடையதாய் இருந்தது என்பதையும், இரும்பால் ஆனதாக இருந்தது என்பதையும், தூண்டிலில் மாட்டுவதற்காக பச்சை இறைச்சியை வைத்த தோற்பையைத் தோளிலும் மாட்டி சென்றனர் என்பதையும் பின்வரும் பாடல் அடிகளால் அறியலாம்.

'' பச்சூன் பெய்த சுவல் பிணி பைந்தோல்

கோள்வல், பாண் மகன் தலைவலித்து யாத்த

நெடுங்கழைத் தூண்டில் நடுங்கநாண் கொளீஇ,

கொடுவாய் இரும்பின் மடிதலை புலம்ப''[238]

பண்டைய காலத்தில், சுட்ட செங்கலால் வீடு கட்டும் வழக்கம் இருந்தது என்பதை, காஞ்சி மாநகர் ஊரின் நடுவே சுட்ட செங்களை அமைத்து கட்டப்பட்ட மதில்கள் காணப்பட்டது என்பதன் மூலம், பின்வரும் பாடல் அடிகளால் அறியமுடிகிறது.

'' சுடுமண் ஓங்கிய நெடுநகர் வரைப்பின்

இழுமென் புள்ளின் ஈண்டுகிளைத் தொழுதிக்'' [239]

## வாத்தியக் கருவிகளின் பயன்பாடு

கூத்தர்கள் பல்வேறு இசைக் கருவிகளைப் பயன்படுத்தி இருந்ததைக் காணலாம். பல்வேறு இசைக் கருவிகளின் பெயர்களும் இப்பாடல் வரிகளில் காண முடிகிறது. மத்தளம் எல்லாக் கருவிகளுக்கும் அடிப்படைக் கருவியாக விளங்கியதால் முதலாகக் கூறப்பட்டிருப்பதை அறியலாம். மத்தளத்தின் ஒலி மிகுந்து ஒலித்ததை, மேகத்தின் அதிர்வுடன் ஒப்பிட்ட திலிருந்து அறியலாம். வாரினால் இறுகக் கட்டப்பட்ட மத்தளத்தின் வழியே இனிய ஓசை பிறக்கும். தாளத்தொடும் அதற்குரிய கிரியைகளோடும் ஒத்து இயையுமாறு பண் இயற்றப்பட்டதை அறியலாம். சல்லிகை என்னும் பறையையும், தாளத்தின் தன்மைக்கு ஏற்ப ஒலி எழுப்புவற்காகப் பயன்படுத்தி இருந்தனர். ஊது கொம்பையும், நெடுவங்கியம் என்ற, உள்ளீடில்லாத நீண்ட புழையும் பயன்பாட்டில் இருந்ததை அறியலாம். இந்த நெடுவாங்கி யானையின் கைபோல் நீண்டு, அகன்று, முன்புறம வளைந்து காணப்படும், நெடுவங்கியத்தின் ஓசை, யானையின் பெரு மூச்செறிவது போன்றிருக்கும் என்ற செய்தியையும் கூறப்பட்டிருக்கின்றது. 'குறுந்தூம்பு' என்னும் நரம்பின் ஒசையை உண்டாக்கும் இசைக் கருவியையும், பயன்படுத்தியிருந்தனர். புல்லாங்குழலும் இவர்களின் பயன்பாட்டிலிருந்தது அறியத்தக்கது. காடிகை என்னும் தோற்கருவியையும், தாளத்தின் அளவிற்கு ஏற்ப, தவளையின் குரலைப் போல ஒலிப்பதற்காகப் பயன்படுத்தி இருந்தனர்.

## மலைப்பாதைகளில் செல்லும் முறை

இவ்வாறு, தோல் கருவி, துளைக் கருவி, நரம்புக் கருவி, கஞ்சக் கருவி என்னும் நால்வகைக் கருவிகளும் சங்க காலத்தில் கூத்தர்களின் பயன்பாட்டில்

இருந்ததை அறியலாம். இவ்விசைக் கருவிகளை முடிச்சுகளாகக் கட்டிக் காலடியில் தொங்குமாறு, ஏந்திச் சென்றனர் என்பதை அறியலாம்.

'' திருமழை தலைஇய இருள்நிற விசும்பின்
விண் அதிர் இமிழ்இசை கடுப்ப, பண் அமைத்து,
திண்வார் விசித்த முழவொடு, ஆகுளி
நுண் உருக்கு உற்ற விளங்கு அடார்ப் பாண்டில்,
மின் இரும் பீலி அணிந்தழைக் கோட்டொடு
கண் இடை விடுத்த களிற்று உயிர்த் தூம்பின்,
இளிப்பயிர் இமிரும் குறும்பரம் தூம்பொடு,
விளிப்பது கவரும் தீம்குழல் துதைஇ,
நடுவுநின்று இசைக்கும் அரிக்குரல் தட்டை,
கடி கவர்பு ஒலிக்கும் வவ்வாய் எல்லரி,
நொடி தடு பாணிய பதலையும், பிறவும்,
கார்கோட் பலவின் காய்த்துணர் கடுப்ப
நேர்சீர் சுருக்கில் காய கலப் பையிர்''[240]

**காட்டாற்றைக் கடக்கும் வழிமுறைகள்**

காட்டாற்று நீரின் வேகம் மிகுதியாய் இருக்கும் என்பதையும், மேடு பள்ளங்களைக் கடந்து செல்லும் போது, கால்களின் தளர்ச்சியைத் தவிர்க்கவும், பாதுகாப்பிற்காகவும் கொடிகளை பற்றிக் கொண்டு சென்றனர் என்பதைப் பின்வரும் பாடல் அடிகள் எடுத்துக் காட்டுகின்றன.

'' உரவுக் களிறு கரக்கும் இடங்கர் ஒடுங்கி,
இரவின் அன்ன இருள் தூங்கு வரைப்பின்,

குமிழி சுழலும் குண்கெய முடுக்கர்

அகழ் இழிந்தனன்ன, கான்யாற்று நடவை

வழூஉம் மருங்கு உடைய, வழாஅல் ஓம்பி,

பரூஉக் கொடி வலந்த மதலை பற்றி,

துருவின் அன்ன புன்தலை மகாரொடு

ஒருவிர் ஒருவிர் ஓம்பினிர் கழிமின்''[241]

**பாசி படிந்த குளங்களைக் கடக்கும் முறை**

குளங்கள் ஆழம் மிக்கையாய் விளங்கியதையும், அதில் வீழந்தோர் மாய்ந்து விடுவர் என்பதையும் அறிந்திருந்த அக்கால மக்கள், குளங்களின் அருகில் உள்ள இடங்கள் பாசியினால் மூடப்பட்டிருந்ததையும் அறிந்து இருந்தனர். பாசியானது வழுக்கும் தன்மை உடையது என்பதையும், அது கால் ஊன்றுவோரின் காலினை வழுக்கி விடும். மேலும் கடந்து போவதற்கு அரிதாகவும் இருக்கும். பாசியிலிருந்து காத்துக் கொள்ள சிறு மூங்கிலையும், வேழத்தின் மெல்லிய கோல்களையும் துணையாக ஏந்திச் செல்ல வேண்டும் என்பதை அறிந்திருந்ததைக் காணலாம்.

''அழுந்து பட்டு அலமரும் புழுகு அமல் சாரல்

விழுந்தோர் மாய்க்கும் குண்டு கயத்து அருகா,

வழும்புகண் புதைந்த நுண்நீர்ப் பாசி

அடிநிலை தளர்க்கும் அருப்பமும் உடைய

முழுநெறி பிணங்கிய நுண்கோல் வேரலொடு

எழுவை மென்கோல் கொண்டனிர் கழிமின்''[242]

**பன்றிப் பொறியுள்ள வழிகளில் பகலில் செல்லுதல்**

மலைப் பகுதிகளில் விளைந்துள்ள தினைக் கதிர்களை உண்ண காட்டுப் பன்றிகள் வரும். அவைகளைப் பிடிப்பதற்காகச் வழிகளில் கற்பொறிகளை வைத்திருப்பர். இரவுப் பொழுதில் பயணம் மேற்கொள்ளும் பொழுது, அக்காட்டுப் பன்றிகளாலும், அவற்றைப் பிடிப்பதற்காக வைத்துள்ள பொறிகளாலும் தீமை விளையக் கூடும் என்பதை அறிந்ததால், இருள் செறிந்த இரவுப் பொழுதில் தங்கி, பகற்பொழுதில் பயணத்தைத் தொடரும் பழக்கத்தை உடையவர்கள் என்பதை,

**'' விளை புனம் நிழத்தலின், கேழல் அஞ்சி,**
**புழை தொறும் மாட்டிய இருங்கல் அடாஅர்**
**அரும் பொறி உடைய ஆறே; நள் இருள்**
**அலர் விரிந்த விடியல் வைகினிர், கழிமின''**[243]

வேனிற் காலத்தில், வெம்மையால் நிலங்கள் வெடித்துக் காணப்படும். அவ்வெடிப்புக்களில் வெயிலின் வெப்பத்திற்கு அஞ்சிய பாம்புகள் உறையும். பள்ளமான நிலங்களில் புலி முதலிய விலங்குகள் உறையும். காட்டு வழியில் நேரக்கூடிய ஆபத்துக்களை முன்கூட்டியே கருதிப் பார்த்து சென்றனர். விலங்குகளை மரங்களில் ஏறி ஒலியெழுப்பி அறிந்தனர். பாம்புகளைக் கொல்லாமல், கைதொழுது˚ வழிபட்டனர். விலங்குகளின் பாதையில் குறுக்கிடாமல் அகன்று சென்றனர் என்பதைக் காணலாம்.

**'' நளிந்து பலர் வழங்காச் செப்பம் துணியின்,**
**முரம்பு கண் உடைந்த பரல் அவற் போழ்லில்,**
**கரந்து பாம்பு ஒடுங்கும் பயம்புமார் உளவே;**

குறிக் கொண்டு, மரங் கொட்டி, நோக்கி,

செறி தொடி விறலியர் கைதொழூஉப் பழிச்ச,

வறிது நெறி ஒரிஇ, வலம் செயாக் கழிமின்[244]

## கவண் கற்களிலிருந்து தப்பிச் செல்லுதல்

புனத்தில் விளைந்த தினைக் கதிர்களை உண்ண வரும் யானைகளைக் கவண் கொண்டு கல் எறிந்து மலைவாழ் மக்கள் அகற்றினர். இக்கற்களைக் கண்டு, மரங்களில் தாவித் திரியும் குரங்குகள் அஞ்சி ஓடும். வழிச் செல்வோர்க்கு இக்கவண் கற்களால் தீங்கு நேரக்கூடும் என்பதால், மரங்களில் மறைந்து செல்லுதலை வழக்கமாக கொண்டிருந்தனர்.

'' புலந்து, புனிறு போகிய புனம்சூழ் குறவர்,

உயர்நிலை இதணம் ஏறி, கை புடையூஉ,

அகல் மலை இறும்பில் துவன்றிய யானைப்

பகல் நிலை தளர்க்கும் கவண் உமிழ் கடுங்கல்

இரு வெதிர் ஈர்ங்கழை தத்தி, கல்லெனக்

கரு விரல் ஊகம் பார்ப்போடு இரிய

உயிர் செகு மரபின் கூற்றத்து அன்ன

வரும்விரை தவிராது; மரம் மறையாக் கழிமின்''[245]

## குன்றுகளைக் கடக்கும் முறை

குன்று, காடுகளினால் நிறைந்திருக்கும். குன்றுகளில், ஞாயிற்றின் கதிர்களைக் காண இயலாது. இரவுப் பொழுதில் குன்றில், திசை அறிய முடியாது. விலங்குகளை வேட்டையாடும் குறவர்களின் அம்புக்கு பலியாக நேரிடும். ஆகையால், காட்டிலேயே வாழ்ந்து வரும் குறவர்களும், அக்குன்றுகள் பயத்தை உண்டாக்கும். ஆகையினால் பிறரால் எளிதில்

கடந்து செல்லாது அரிது ஆகும். விலங்குகளால் நேரும் அச்சத்தினின்று காத்துக் கொள்வதற்காக, அவ்வழியில் செல்வதை விலக்கி, அகன்ற இடத்தையுடைய பாறையில் அனைவரும் ஒருங்கு கூடி கல்லென்னும் ஓசையுண்டாகுமாறு இசைக்கருவிகளை இயக்கிச் செல்லுதல் வேண்டும் என்பதை பின்வரும் அடிகளால் அறியப்பெறலாம்.

**'' மா நிழற் மரம் பயில் இறும்பின்,**
**ஞாயிறு தெறாஅ மாக நனைந்தலை,**
**தேஎம் மருளும் அமையம் ஆயினும்,**
**இறாஅ வன்சிலையார் மா தேர்பு கொட்கும்**
**குறவரும் மருளும் குன்றத்துப் படினே**
**அகன்கண் பாறைத் துவன்றிக் கல்லென,**
**இயங்கல் ஓம்பி, நும் இயங்கள் தொடுமின்''**[246]

குன்றுகளில் இருக்கும் கானவர்கள், புதிதாய்ச் செல்வோருக்கு, உண்பதற்குரிய இனிய பழங்கள் பற்றியும், சூடுதற்கு இனிய பூக்கள் பற்றியும் செய்திகளைக் கூறுவர் என்பதைப் பின்வரும் அடிகள் எடுத்துரைக்கின்றன.

**'' பாடு இனி அருவிப் பயம்கெழு மீமிசை**
**காடு காத்து உறையும் கானலர் உளரே,**
**நிலைத் துறை வழீஇய மதன் அழி மாக்கள்**
**புனல் படு பூசலின், விரைந்து வல் எய்தி,**
**உண்டற்கு இனிய பழனும், கண்டோர்**
**மலைதற்கு இனிய பூவும், காட்டி**
**ஊறு நிரம்பிய ஆறு அவர் முந்துற,**

**நும்மின், நெஞ்சத்து அவலம் வீட,**

**இம்மென் கடும்போடு இனியிர் ஆகுவிர்,**

**அறிஞர் கூறிய மாதிரம் கைக் கொள்பு,**

**குறியவும் நெடியவும் ஊழ்இழிபு, புதுவோர்**

**நோக்கினும் பனிக்கும் நோய்கூர் அடுக்கத்து,**

**அவர்தாய வரிநிழல் அசையினிர் இருப்பின்**

**பல திறம் பெயர்பவை கேட்குவிர் மாதோ''**[247]

அக்கால மக்கள், கடம்பின் பூவையும், யாமரத்தின் பூவையும் மரல் நாரில் தொடுத்து அணியும் பழக்கம் கொண்டிருந்தனர். மேட்டு நிலத்தில் தேங்கிய மழைநீரைக் குடிப்பதற்கும், குளிப்பதற்கும் மற்றும் வழிக்கு முகந்து கொண்டும் சென்றனர் என்பதை பின்வரும் அடிகளால் அறியலாம்.

**'' தேம்பட மலர்ந்த மராஅ மெல் இணரும்,**

**உம்பல் அகைத்த ஒண்முறி யாவும்,**

**தளிரொடு மிடைந்த காமரு கண்ணி,**

**திரங்கு மரல் நாரில், பொலியச் சூடி,**

**முரம்பு கண் உடைந்த நடவை தண்ணென**

**உண்டனிர், ஆடி, கொண்டனிர் கழிமின்''**[248]

அவரை, மூங்கிலரிசி, அரிசி ஆகியவற்றைப் புளிக் கரைத்த உலையில் பெய்து ஆக்கிய குழைந்த புளியங் கூழினையும், வெல்லம் கலந்த தினைமாவையும் புலவேய் குறும்பைகளில் உணவாகப் பெறமுடியும் என்றும், தீமூட்டிப் பனியின்றி இரவுப் பொழுதில் உரங்கலாம் என்ற செய்தியும் கூறப்பட்டுள்ளது. பயணம் மேற்கொள்வார்,

நிமித்தம் பார்த்துச் சென்ற மரபு சுட்டிக்காட்டப்பட்டுள்ளதை அறியலாம். விடியலில் பறவைகளின் ஒலியைக் கேட்டு விழித்து எழுந்து பயணத்தைத் தொடர்வர் என்ற கருத்தையும் காணலாம்.

'' செவ்வீ வேங்கைப் பூவின் அன்ன,
வேய் கொள் அரிசி, மிதவை சொரிந்த,
சுவல் விளை நெல்லின், அவரை அம்புளிங் கூழ்
அற்கு, இடை உழந்த நும் வருத்தம் வீட,
அகலுள் ஆங்கண் கழி மிடைந்து இயற்றிய
புல்வேய் குரம்பைக் குடிதொறும் பெறுகுவீர்,
பொன் அறைந்தன்ன நுண் நேர் அரிசி
வெண் எறிந்து இயற்றிய மாக் கண் அமலை,
தண்ணென் நுண் இழுது உள்ளீடு ஆக
அசையினிர் சேப்பின், அல்கலும் பெறுகுவீர்
விசையம் கொழித்த பூழி அன்ன
உண்ணுநர்த் தடுத்த நுண் இடி நுவணை;
நொய்ம் மர விறகின் ஞெகிழி மாட்டி
பனி சேண் நீங்க இனிதுஉடன் துஞ்சி,
புலரி விடியல் புள் ஓர்த்துக் கழிமின்''[249]

## தொகுப்புரை

வாழ்வில் நல்ல பழக்கங்களை வழக்கங்களாக மாற்றிக் கொள்ளும் போது நலம் விளைக்கும் வெற்றிகள் தாமே வந்து சேரும். நல்ல பழக்கவழக்கங்கள் எல்லாத் துறைகளிலும் இன்பம் விளைவிக்கும்.

நல்லறங்களைக் கடைப்பிடித்தால் நன்மை வரும். விழுப்பம் வரும். விழுமம் வராது.

இறை வழிபாடு இறைமைப் பண்பை வளர்க்கும். தீய பழக்கவழக்கங்களைக் கோயில் பலி பீடத்தில் பலியிட்டுத் தூய நிலையில் இறைவழிபாடு நிகழ்த்தவே கோயில்களில் பலி பீடங்கள் அமைத்தனர். உயிர்ப்பலியை விட உயிரை வாட்டும் ஆணவம், கன்மம், மாயை ஆகியவற்றைப் பலியிட்டால் உலகில் அமைதியும் அறமும் செழிக்கும். தீமையை அழிக்கவே தெய்வ வழிபாடு. ஆண்டு முழுவதும் விழாவைக் கொண்டாடிச் சமூகம் ஒற்றுமையை வளர்த்தது.

திருஓண விழா, திரு ஆதிரை, பங்குனி உத்திர விழா, கார்த்திகை விழா, அந்தி விழா, சிறுசோற்று விழா, வாள்விழா முதலான விழாக்களை மக்கள் தாம் தீய வழியில் விழாமல் இருக்கக் கொண்டாடினர்.

தீங்கின்றி நாடெல்லாம் திங்கள் மும்மாரி பெய்ய நிகழ்த்திய வருண வழிபாட்டைப் பட்டினப்பாலை தெளிவுறுத்தும்.

உலகிற்கு உயிர்கட்கு ஒளிதரும் ஞாயிற்றையும், வாழ்வில் முருகுதரும் முருகனையும், வெற்றி தரும் கொற்றவையையும் வழிபட்ட செய்தியை நற்றிணை, புறநானூறு, குறுந்தொகை, நெடுநல்வாடை முதலான சங்க இலக்கியங்களில் பரவலாகக் காணமுடிகிறது. விருந்தோம்பல் விரிவான நற்சொல் கேட்கும் விரிச்சி ஆகிய தொன்மையான வழக்கங்கள் முல்லைப் பாட்டிலும் புறநானூற்றிலும் காணலாம்.

மலைத் தெய்வம், படைத்த கொல்லிப் பாவை பற்றிய குறிப்புகள் நற்றிணை, குறுந்தொகை, அகநானூறு முதலான சங்க இலக்கியங்களில் காணப்பெறும்.

நீராடும் நல்ல நீர்மையைப் புலப்படுத்தும் தைநீரால் விழாவைப் பற்றிய செய்திகளை நற்றிணை, ஐங்குறுநூறு, பரிபாடல் ஆகிய இலக்கியங்கள் விளக்கிக் கூறும்.

அறிந்தும் அறியாமலும் மனமொழி மெய்களால் செய்யும் பிழைகளைப் பொறுத்தருளுமாறு தெய்வ வழிபாடு நிகழ்ந்தமையை நற்றிணை தெளிவுறுத்தும்.

இறப்பிற்கு இரையான உயிர்க்கு இரையாகிய உணவு படைத்து வழிபட்டமையைப் புறநானூறு விளக்கும்.

தெய்வங்களுக்குத் தேக்கிலையில் உணவு, ஊன், மலர், தினையரிசி படைத்து வழிபடும் செய்தியை அகநானூறு, புறநானூறு, நற்றிணை, குறுந்தொகை ஆகிய நூல்கள் அறிவுறுத்தும்.

பொருள் வணிகரின் அருள் வாழ்வு தோற்றவர் தலையில் நெய்யூற்றி வலம் வரச் செய்தல், பண்டமாற்று வணிகம், நடுநிலை தவறா வணிகமுறை, உப்பு வணிகர் வாழ்வு, அறச்சாலைகள், விருந்தோம்பல், அந்தணர் பழக்கவழக்கம், பண்பாடும், பாணர்மேன்மை, குறிஞ்சிக்கும் மருதத்திற்கும் இடையே முல்லை நிலத்தில் வாழ் இடையரின் முதன்மை பெற்ற வாழ்வு, உணவு தரும் உழவர் வாழ்வு.

மக்களின் நல்ல பொழுதுபோக்குகள், சிற்றிலிழைத்தல், சிறுதேர் ஓட்டல், பந்து விளையாட்டு, கவண் கல்லால் பறவை ஓட்டல், ஓர்ந்து

கண்டுபிடிக்கும் ஓரை விளையாட்டு, சுனை நீரால், கழங்காடல் முதலிய விளையாட்டு வகைகள் ஆகிய செய்திகள் சங்க இலக்கியத்தில் இடம் பெற்றுள்ளன. பௌத்தப் பள்ளி சமணப் பள்ளிகள் தமிழ்ச் சமுதாயத்தின் சமயப் பொறை காட்டும் வாழ்வுத் தடங்கள்.

வேந்தர்கள் வாய்மை, நேர்மை ஆகியவற்றைக் கண் போல் காத்துக் கடமை தவறாமல் விளங்கியதைப் பதிற்றுப்பத்து என்ற நூல் பதிவு செய்துள்ளது. நெற்றியில் பொட்டுவைத்தல், செவியில் தளிர் சூடல், தந்தை பெயரைச் சூட்டல், கிணைப்பறை ஒலி கேட்டு மன்னன் துயில் எழல், பகைவரின் காவல் மரத்தை வெட்டிப் போர் முரசு செய்தல், சகுனம் பார்த்தல், பல்லி சொல் கேட்டல், காகம் கரைந்தால் விருந்து வரும் என்ற நம்பிக்கை, உன்னம் என்ற மரம் வாடினால் துன்ப நிமித்தமாக எண்ணல், அந்தணர்க்கு ஆ வழங்கல், மாலை வழிபாடு, விருந்தினரை ஏழடி பின் சென்று வழியனுப்பல், பெண் வீட்டில் மணம் நடத்தல், மணப்பெண் அருந்ததி பார்த்தல், சிலம்புகழி நோன்பு, பொருளைத் தாரை வார்த்துக் கொடுத்தல், யானைக்கு மொழி பயிற்றல், உணவு வழங்கும் அறச்சாலை, நடுநிலை தவறாது நீதி வழங்கும் அறம் கூறும் அவையம், கட்டடக் கலை நுட்பறிவு, வீரர்கள் காலில் வீரக்கழல் அணிதல், பட்டிமண்டபங்கள், குடவோலைத் தேர்தல் முறை, மலைவழியறிய ஊகம்புல் முடிந்து வைத்தல், குற்றவாளியின் தலையில் சுண்ணாம்பு நீர் ஊற்றல், மகளிர் வழிபாட்டு முறை, இசைப்பாணர் மீன் பிடித்தலிலும் திறமை பெற்றிருந்தமை மலைப்பாதை கடக்கும் முறை முதலான பழக்கவழக்கத் தொன்மங்களை சங்க இலக்கியம் விளக்கிய பாங்கினை இவ்வியல் ஆய்வு செய்யும்.

# அடிக்குறிப்புகள்

1. பரி. 9 : 96 - 102.
2. மேற்படி 17 : 42 - 43.
3. மேற்படி 11 : 76 - 78.
4. ஐங். 62 : 1 - 3.
5. அகம் 141 : 6 - 11.
6. மேற்படி 185 : 11 - 12.
7. மேற்படி 137 : 6 - 9.
8. நற். 234 : 8.
9. அகம். 366 : 16 - 19.
10. நற். 234 : 9.
11. மதுரை. 427 - 430.
12. மேற்படி 453 - 460.
13. புறம். 33 : 20 - 22.
14. நற். 50 : 3.
15. அகம். 366 : 16.
16. மேற்படி 187 : 8 - 9.
17. பதிற்று. 66 : 13 - 14.
18. புறம். 9 : 10.
19. பதிற்று. 48 : 13 - 14.

20. மேற்படி 30 : 15.

21. புறம். 84 : 4.

22. அகம். 222 : 6.

23. மேற்படி 376 : 4 - 11.

24. மேற்படி 385 : 6.

25. மேற்படி 86 : 1 - 10.

26. மேற்படி 26 : 2 - 3.

27. பட்டின. 84 - 95; 177 - 179.

28. மேற்படி 252 - 255.

29. மேற்படி 213 - 215.

30. நற். 283 : 6 - 8.

31. புறம். 56 : 17 - 19.

32. குறுந். 218 : 1 - 2.

33. நெடுநல். 166 - 168.

34. புறம். 316 : 5 - 8.

35. மேற்படி 280 : 6 - 7.

36. முல்லை. பா. 8 - 11.

37. குறுந். 213 : 3.

38. நற். 40 : 4.

39. குறுந். 89 : 4 - 6.

40. அகம். 62 : 13 - 16.

41. மேற்படி 209 : 16 - 17.

42. நற். 192 : 8 - 9.

43. மேற்படி 201 : 8 - 11.

44. மேற்படி 22 : 6 - 7.

45. மேற்படி 80 : 7.

46. ஐங். 84 : 4.

47. பரி. 11 : 89 - 92.

48. மேற்படி 120 - 121.

49. கலி. 59 : 18.

50. நற். 189 : 2 - 4.

51. மேற்படி 165 : 2 - 4.

52. குறுந். 105 : 1 - 2.

53. நற். 251 : 8.

54. மேற்படி 35 : 8.

55. அகம். 166 : 7.

56. நற். 293 : 1 - 3.

57. மேற்படி 281 : 1.

58. மேற்படி 343 : 5.

59. பொருநர். 183 : 4.

60. குறுந் 210 : 6.

61. அகம். 167 : 16.

62. புறம். 50 : 13.

63. அகம். 213 : 7 - 8.

64. மேற்படி 287 : 6 - 7.

65. மேற்படி 280 : 3 - 4.

66. மேற்படி 309 : 4 - 6.

67. குறுந். 362.

68. புறம். 363 : 12 - 16.

69. அகம். 282 : 16 - 18.

70. புறம். 331 : 11 - 13.

71. மேற்படி 366 : 13 - 18.

72. பெரும். 99 - 105.

73. அகம். 232 : 6 - 16.

74. நற். 73 : 1 - 4.

75. குறுந். 263 : 1.

76. அகம். 242 : 9.

77. திருமுரு. 234.

78. பட்டின. 199 - 204.

79. பதிற்று. இரண்டாம் பற்று பதிகம் 8 - 11.

80. நற். 183 : 1 - 3.

81. அகம். 140 : 7 - 8.

82. பட்டின. 205 - 211.

83. மேற்படி 129 - 137.

84. பெரும்பு. 6 - 65.

85. மேற்படி 66 - 82.

86. பட்டின. 19 - 125.

87. சிறுபாண். 55 - 61.

88. பெரும். 327 - 329.

89. மதுரை. 528 - 535.

90. கலி. 75 : 27 - 29.

91. மேற்படி 38 : 25 - 26.

92. மேற்படி 39 : 46.

93. மேற்படி 41 : 40 - 44.

94. மேற்படி 41 : 7 - 16.

95. பெரும். 297 - 310.

96. குறு. 277.

97. மதுரை. 468 - 474.

98. புறம். 12 : 1.

99. மேற்படி 29 : 1 - 3.

100. பொருநர். 159 - 162.

101. புறம். 69 : 19 - 21.

102. பெரும். 106 - 117.

103. மேற்படி 147 - 168.

104. மேற்படி 162 - 184.

105. மேற்படி 336 - 345.

106. மேற்படி 243 - 247.

107. மேற்படி 197 - 206.

108. மேற்படி 213 - 228.

109. மேற்படி 229 - 242.

110. மேற்படி 352 - 362.

111. மேற்படி 253 - 256.

112. கலி. 80 : 3 - 9.

113. குறுந். 31 : 1 - 2.

114. மேற்படி 305 : 6 - 7.

115. மேற்படி 114.

116. மேற்படி 326 : 3 - 4.

117. மேற்படி 61 : 1 - 3.

118. மேற்படி 396 : 1.

119. மேற்படி 54 : 2.

120. மேற்படி 401 : 3 - 5.

121. மேற்படி 335 : 1 - 3.

122. அகம். 17 : 2.

123. மதுரை. 461 - 467.

124. மேற்படி 475 - 488.

125. நெடுநல். 40 - 41.

126. பதிற்று. 70 : 21 - 22.

127. ஐங். 403 : 3 - 4.

128. நற். 40 : 11 - 12.

129. மலைபடு. 64 - 65.

130. குறுந். 161 : 3 - 4.

131. நற். 62 : 6 - 7.

132. குறுந். 113 : 5 - 6.

133. திருமுரு. 31 - 32.

134. குறுந். 358 : 2 - 3.

135. பதிற்று. 60 : 17 - 18.

136. அகம். 289 : 9 - 10.

137. மேற்படி 351 : 10 - 12.

138. புறம். 397 : 8 - 11.

139. நற். 180 : 6 - 8.

140. பதிற்று. 44 : 14 - 16.

141. அகம். 347 : 3 - 5.

142. புறம். 36 : 9 - 10.

143. மேற்படி 204 : 10 - 12.

144. குறுந். 140 : 1 - 2.

145. நற். 246 : 1 - 4.

146. குறுந். 210 : 6.

147. ஐங். 39.

148. புறம். 280 : 2 - 5.

149. மேற்படி 41 : 4 - 11.

150. நற். 98 : 1 - 5.

151. புறம். 195 : 6 - 7.

152. மேற்படி 192 : 12 - 13.

153. மேற்படி 192 : 1.

154. அக. 101 : 1 - 3.

155. புறம். 3 : 23.

156. பதிற்று. 23 : 1 - 2.

157. மேற்படி 40 : 17.

158. மேற்படி 61 : 5 - 6.

159. பதிற்றுப்பத்து பதிகம் 4 - 7.

160. கலி 119 : 11 - 13.

161. பொருநர் 165 - 167.

162. குறுந். 146 : 3 - 4.

163. நற். 393 : 9 - 10.

164. ஐங். 399 : 2 - 3.

165. அகம். 169 : 11 - 12.

166. மேற்படி 385 : 5 - 7.

167. கலி. 69 : 4 - 7.

168. பதிற்று. 89 : 17 - 19.

169. அகம். 86 : 1 - 17.

170. மேற்படி 112 : 16 - 19.

171. ஐங். 399 : 1 - 2

172. நற். 279 : 9 - 10.

173. நற். 12 : 4 - 5.

174. குறுந். 7 : 1 - 2.

175. அகம். 385 : 15 - 18.

176. மேற்படி 369 : 22 - 26.

177. மேற்படி 315 : 8.

178. புறம். 367 : 4 - 5.

179. மேற்படி 362 : 12.

180. நெடுநல். 141 - 142.

181. அகம். 13 : 6 - 9.

182. முல்லை. பா. 35 - 36.

183. மலைபடு. 326 - 327.

184. அகம். 104 : 6 - 7.

185. மேற்படி 334 : 11 - 12.

186. மேற்படி 400 : 8 - 13.

187. பட்டின. 78 - 79.

188. மேற்படி 161 - 168.

189. புறம். 355 : 10 - 12.

190. மேற்படி 233 : 2 - 3.

191. மலைபடு. 390 - 391.

192. பட்டின. 40 - 45.

193. மதுரை. 489 - 492.

194. மேற்படி 493 - 499.

195. மேற்படி 507 - 510.

196. நெடுநல். 72 - 78.

197. மேற்படி 79 - 88.

198. மேற்படி 89 - 92.

199. மேற்படி 93 - 100.

200. மேற்படி 101 - 114.

201. மேற்படி 115 - 123.

202. கலி. 72 : 1 - 3.

203. ஐங். 448 : 1 - 2.

204. அகம். 24 : 15.

205. மேற்படி 354 : 1 - 2.

206. மதுரை. 231 - 232.

207. கலி. 58 : 32 - 34.

208. பதிற்று. 34 : 2 - 3.

209. பட்டின. 169 : 171.

210. புறம். 74 : 1 - 2.

211. மேற்படி 93 : 4 - 11.

212. பட்டின. 110.

213. மேற்படி 90 - 91.

214. மேற்படி 107.

215. மேற்படி 265.

216. புறம். 186.

217. திருமுரு. 1 - 2.

218. அகம். 77 : 7 - 10.

219. மலைபடு. 392 - 393.

220. புறம். 113 : 6 - 7.

221. அகம். 256 : 15 - 21.

222. மதுரை. 604 - 610.

223. மேற்படி 600 - 603.

224. மேற்படி 443 - 452.

225. மேற்படி 395 : 406.

226. புறம். 299 : 6 - 7.

227. பரி. 19 : 22 - 24.

228. பெரும். 327 - 329.

229. மலைபடு. 561.

230. பொருநர். 82 - 83.

231. அகம். 34 : 11.

232. மேற்படி 121 : 11 - 12.

233. திருமுரு. 204 - 205.

234. நற். 8 : 2.

235. புறம். 341 : 2 - 3.

236. கலி. 102 : 2 - 7.

237. புறம். 398 : 2.

238. பெரும். 283 - 286.

239. மேற்படி 405 - 406.

240. மலைபடு. 1 - 13.

241. மேற்படி 211 - 218.

242. மேற்படி 219 - 224.

243. மேற்படி 193 - 196.

244. மேற்படி 197 - 202.

245. மேற்படி 203 - 210.

246. மேற்படி 271 - 277.

247. மேற்படி 278 - 291.

248. மேற்படி 427 - 433.

249. மேற்படி 434 - 448.

# இயல் - 6

## அறிவியல் தொன்மங்கள்

மண் திணிந்த நிலனும்
நிலன் ஏந்திய விசும்பும்
விசும்பு தைவரு வளியும்
வளித் தலைஇய தீயும்,
தீ முரணிய நீரும் என்றாங்கு
ஐம்பெரும் பூதத்து இயற்கை போல
போற்றார்ப் பொறுத்தலும், சூழ்ச்சியது அகலமும்
வலியும், தெறலும், அளியும், உடையோய்
நின் கடற் பிறந்த ஞாயிறு பெயர்த்தும் நின்
வெண் தலைப் புணரிக் குடகடற் குளிக்கும்

புறநானூறு 2:1-10

# 6. அறிவியல் தோன்மங்கள்

மனிதன் உணர்வுகளுக்கு ஆட்படாமல் உணர்வை அடிப்படையாகக் கொண்டு அறிவுபூர்வமாகச் செயல்படுவதை அறிவியல் என்பர். Science Technology எனும் இரு சொற்களுக்கும் முறையே அறிவியல், தொழில் நுட்பம் என்ற பொருள்கள் இருப்பினும், பொதுவான முறையில் அறிவியல் என்ற பொருளே குறிக்கப் பெறுகின்றது என்பதை வா.செ.குழந்தைசாமி குறிப்பிட்டுள்ளார். சங்க காலத்தில் அறிவியல் தனித் துறையாக வளராவிட்டாலும் சங்க இலக்கியத்தில் அறிவியல் கூறுகள் காணப்படுகின்றன.

சங்க இலக்கியங்களில் சமயம், மனித சமுதாயம் பற்றி செய்திகள் மிகுந்து காணப்பட்டாலும், அவற்றில் அறிவியல் சார்ந்த கருத்துக்களையும் காண முடிகிறது. அறிவியல் பொருள் சார்ந்த ஆய்வுகள் பல சங்க காலத்தில் நிகழ்ந்திருந்ததையும், அதனால் தமிழர்களிடையே நிலவிய அறிவியல் சிந்தனைகளையும், இதனால் அறிவியல் உலகிற்கு பல புதிய தகவல்கள் வெளிப்பட்டிருந்ததையும் அறியலாம். அறிவியல் துறை சார்ந்த பல கலைச் சொற்கள் சங்க இலக்கியத்தில் இடம்பெற்றிருப்பது குறிப்பிடத்தக்கது.

அறிவியல் பொருட்கூறுகள் தொடர்பான பல செய்திகள் இடம் பெற்றுள்ள சங்க இலக்கியத்தில் வானியல் தொடர்பான செய்திகள், ஞாயிற்றின் இயக்கத்தைப் பற்றி நிலவி வந்த பல்வேறு கொள்கைகளும், புவிமையக் கொள்கை, ஞாயிறு மையக் கொள்கை, விண்மீன்கள், கோள்கள் நிலை குறித்த கருத்துக்களும், மக்களிடம் தொன்று தொட்டு வழங்கி வரும் அறிவியல் சார்ந்த வழக்கங்களை தாவரங்கள், விலங்குகளால்

அறியப்படும் செய்திகள் ஆகியனவும் காணப்படுகின்றன. அறிவியல் தொடர்பான செய்திகளை ஆய்வதே இவ்வியலின் நோக்கமாகும்.

## ஐம்பூதங்களின் தோற்றம்

நிலம், தீ, நீர், வளி, விசும்பும் கலந்த சேர்க்கையே உலகம் என்பர். உலகம் அறிவதற்கு மூலப் பொருளாய் இருப்பன ஐம்பூதங்கள் ஆகும். இவ்வுலகம் ஐம்பூதங்களால் ஆகியது. எல்லா உயிரினங்களும் உட் பொருள்களும் நீர், நிலம், காற்று, தீ எல்லாமே அணுக்களின் கூட்டுறவால் நிகழ்ந்தவையே. பிரபஞ்சம் பஞ்ச பூதங்களால் செய்யப்பட்டது. பூதங்கள் அணுக்களால் செய்யப்பட்டவை. தற்கால வேதியியல் வல்லுநர்கள் தங்கள் ஆராய்ச்சி முடிவாக தொண்ணூற்று இரண்டு மூலங்களால் ஆனதே உலகம் என்று கூறுகின்றனர்.

**'' கரு வளர் வானத்து இசையின் தோன்றி**
**உரு அறிவாரா ஒன்றன் ஊழியும்;**
**உந்து வளி கிளர்ந்த ஊழ் ஊழ் ஊழியும்**
**செந்தீச் சுடரிய ஊழியும்; பனியொடு**
**தண் பெயல் தலைஇய ஊழியும்; அவையிற்று**
**உள் முறை வெள்ளம் மூழ்கி ஆர்தருபு**
**மீண்டும் பீடு உயர்வு ஈண்டி அவற்றிற்கும்**
**உள்ளீடு ஆகிய இரு நிலத்து ஊழியும்''**[1]

என இப்பாடலில் வானம் முதலான பஞ்ச பூதங்களின் தோற்றம் பற்றிக் குறிப்பிடப்பட்டுள்ளது. நுண்ணணுக்கள் வளர்வதற்கு இடமான வானம் முதலில் உருவானது. அவ்வானத்திலிருந்து உலகப் பொருட்கள் இயங்குவதற்குரிய காற்று, காற்றிலிருந்து தீ, தீயிலிருந்து நீர், நீரிலிருந்து

நிலம் என்ற முறையில் பஞ்ச பூதங்கள் தோன்றின என்பனவற்றை அறிய முடிகிறது.

**புவியியல் சிந்தனை**

பல்லாயிரம் ஆண்டுகளுக்கு முன்பு சூரியன் என்ற நெருப்புக் கோளில் இருந்து தெறித்து விழுந்து பூத்த பகுதி, நாளடைவில் குளிர்ந்து பூமியாக மாறியது என்று புவியியல் வல்லுநர்கள் கருதுகின்றனர். ஆதாரமாக இன்னும் எரிமலைகள் பூமியின் பல பகுதிகளில் இருப்பனவற்றைச் சான்றுகளாகக் காட்டுகின்றனர். மதுரைக்காஞ்சியில் புவி பற்றிய செய்திகள் இடம் பெற்றுள்ளன.

**'' ஓங்கு திரை வியன் பரப்பின்**
**ஒலி முந்நீர் வரம்பு ஆக**
**தேன் தூங்கும் உயர்சிமைய**
**மலை நாறிய வியல் ஞாலத்து**
**வல மாதிரத்தான் வளி கொட்ப**
**வியல் நாள் மீன் நெறி ஒழுக**
**பகற் செய்யும் செஞ்ஞாயிறும்**
**இரவு செய்யும் வெண் திங்களும்''**[2]

என இப்பாடலில் அகன்ற கடற்கரைப் பரப்பு, மலைகள், ஆகாயத்தில் சுழன்று வீசும் காற்று மண்டலம், நாள்மீன்கள் தம் பாதையில் பிறழாமல் இயங்குதல், பகற்பொழுதை உருவாக்கும் ஞாயிறு, இரவை உண்டாக்கும் திங்கள் என்று பல செய்திகளை அறிய முடிகிறது.

**புவி மையக் கொள்கை**

ஞாயிறும் நிலவும் மற்ற கோள்களும் விண்மீன்களும் ஒளிபுகக் கூடிய ஒரு கோளத்தில் புவியை மையமாகக் கொண்டு சேர்ந்திருப்பன வாகவும், அதனால் தான் இரவு, பகல், சந்திரமாதம் ஆகியன எற்படுவன வாகவும் நம்பினர். இப்புவி மையக் கொள்கையே சங்க காலத்திலும் நிலவியிருக்கிறது. ஞாயிறு மட்டுமல்லாது திங்களும் இப்புவியை வலமாகச் சுற்றி வருகிறது. குளிர்ந்த கடல் சூழ்ந்த உலகை வெம்மை மிகுந்த ஞாயிறும் திங்களும் வலம் வருகின்றன என்பதை,

**'' வெந்தெறற் கனலியொடு மதிவலந் திரிதரும்**

**தண் கடல் வரைப்பு''**[3]

என்னும் தொடர்கள் மூலம் அறியலாம். மேலும் புவியை மையமாகக் கொண்டே திங்களும் ஞாயிறும் வலம் வருகின்றன என்று உணர முடிகின்றது.

திருமுருகாற்றுப்படை உலகில் உள்ள உயிர்கள் எல்லாம் மகிழும்படி உலகை வலமாக எழுந்து பற்பல சமயத்தவரும் புகழ்கின்ற ஞாயிறு எனப் புகழ்கிறது.

**'' உலகம் உவப்பு வலன் ஏர்பு திரிதரு**

**பலர்புகழ் ஞாயிறு கடல்கண் டாஅங்கு''**[4]

என்பதால் புவிமையக் கொள்கையை உரைக்கிறது எனலாம். இப்புவி மையக் கொள்கையை அரிஸ்டாட்டில் ஷிப்பார்க்கஸ், தாலமி முதலிய அறிவியல் அறிஞர்கள் வலியுறுத்தினர். இக்கொள்கை பலரால் ஏற்றுக் கொள்ளப்பட்டுள்ளது.

**ஞாயிறு மையக் கொள்கை**

புவிமையக் கொள்கை தான் சங்க இலக்கியத்துள் பெரும்பான்மை பதிவு செய்யப்பட்டுள்ளது. இருப்பினும் ஞாயிற்றை மையமாகக் கொண்டே புவியும் பிற கோள்களும் நாள் மீன்களும் சுற்றி வருகின்றன என்ற கருத்தும் கூறப் பெற்றுள்ளது.

**" வாள் நிற விசும்பின் கோள் மீன் சூழ்ந்த**
**இளங்கதிர் ஞாயிறு எள்ளும் தோற்றத்து**
**விளங்கு பொற்கலத்தில் விரும்புவன பேணி"[5]**

என்பதில் வானத்தின்கண் கோளாகிய மீன்கள் சூழ்ந்த ஞாயிறு எனப் புலவர் பாடுகிறார். இதனால் ஞாயிற்றை மையமாகக் கொண்டு பிற கோள்கள் சுற்றுகின்றன என்ற கருத்து சங்க காலத்திலும் நிலவியிருந்ததை அறிய முடிகிறது. 16-ஆம் நூற்றாண்டின் மையப் பகுதியில் கோப்பர் நிக்கஸ் என்னும் வானியல் ஆய்வாளர், ஞாயிற்றை மையமாக வைத்துப் புவியும் பிற கோள்களும் சுற்றி வருகின்றன என்னும் இக்கொள்கை புவியை மையமாகக் கொண்டு வழங்கப்பட்ட தாலமியின் கொள்கையை விட உண்மையாயிருந்தது என்றும் கூறுவர்.

**ஞாயிற்றின் வெம்மை**

வானில் சுழன்று வரும் கோள்களிலே வெம்மை மிகுந்தது ஞாயிறு. ஞாயிற்றின் வெம்மை மன்னர்களின் சினத்திற்கு உவமையாய்ப் பல இடங்களில் பேசப்படுகிறது. பாலைவனப் பாதைகளில் ஞாயிறு காயும் காட்சியும் பதிவு செய்யப்பட்டுள்ளது. ஞாயிற்றைத் தெய்வமாகக் கொண்ட

மக்கள், ஞாயிற்றின் வெம்மையைத் தாங்காது குளிர் செய்க என்று தெய்வத்தை வழிபட்டனர்.

**'' ஞாயிறு காணாத மாண் நிழற் படீஇய**

**மலை முதல் சிறுநெறி மணல் மிகத் தாஅய்**

**தண் மழை தலைய வாகுக''[6]**

ஞாயிற்றின் வெம்மையைத் தாங்கிக் கொள்ளாத் தலைவன் தலைவியின் நினைவுகளைத் துணையாய்க் கொள்கிறான். தலைவன் தலைவியைப் பிரிந்து செல்ல முற்பட்டதைக் குறிப்பால் அறிந்து கொண்ட தோழி ஞாயிற்றின் வெம்மையைக் குறிப்பிடுகின்றாள்.

**'' நடுவு இகந்து ஒரீஇ நயன் இல்லான் வினை வாங்க**

**கொடிது ஓர்த்த மன்னவன் கோல் போல, ஞாயிறு**

**கடுகுபு கதிர் மூட்டிக் காய் சினம் தெறுதலின்''[7]**

மேலும்,

**''நின் வெம்மையும் விளக்கமும் ஞாயிற்று உள''[8]**

என்று திருமாலின் வெம்மையும் அருளுகின்ற விளக்கமும் ஞாயிற்றி னிடத்தே உள்ளன என்றும் குறிப்பிடுகின்றாள்.

**கிரகண நிகழ்வுகள்**

அமாவாசையன்று ஞாயிறு, பூமிக்கு இடையே திங்கள் ஒரே நேர் கோட்டில் வரும்பொழுது சூரிய கிரகணம் (Solar Eclipse) நிகழும். சூரியன் ஒளியைச் சந்திரன் மறைப்பதால் கிரகணத்தின்போது இருள் தோன்றும். இரணிய முட்டத்துப் பெருங்குன்றூர்ப் பெருங்கௌசிகனார் எனும் புலவர் மலைபடுகடாமில் கிரகணம் பற்றிக் குறிப்பிட்டுள்ளதைக் காணலாம்.

'' தூஉஉத் தீம்புகை தொல் விசும்பு போர்த்தது கொல்?

பாஅய்ப் பகல் செய்வான் பாம்பின் வாய்ப் பட்டான் கொல்''[9]

என்னும் இப்பகுதியில் உலகெங்கும் பரவி ஒளியைத் தரும் சூரியன் இராகு கேதுக்களின் வாயில் அகப்பட்டு, அவை விழுங்குவதால் இருள் ஏற்படுகிறது என்றும் கூறுவர். சந்திரன் சூரியனிடமிருந்து ஒளியைப் பெறுவது போல மகளிர் உலா வரும் நன்னனிடமிருந்து நிறத்தைப் பெற்றனர் என்றும் குறிப்பிடப்பட்டுள்ளது.

**சந்திர கிரகணம்**

முழு நிலா நாளில் சந்திரன் சூரியனுக்கு நடுவில் பூமி வரும்பொழுது பூமியின் நிழல் சந்திரனில் விழுகிறது. இந்நிகழ்வு சந்திர கிரகணம் (Lunar Eclipse) என்று அழைக்கப்படுகிறது.

சங்கப் பாடல்களில் 'சந்திர கிரகணம்' பாம்பு (இராகு அல்லது கேது) நிலவைப் பற்றுவதால் ஏற்படுகிறது எனக் கூறப்பட்டுள்ளது.

'' வையகம் புலம்ப வளை இய பாம்பின்

வை எயிற்று உய்ந்த மதியின் மறவர்''[10]

என இப்பாடலில் சந்திர கிரகணம் பற்றிக் குறிப்பிடப்பட்டுள்ளது. பாம்பின் கூரிய பல்லிலிருந்து மீண்ட நிலவைப் போல மறவருடைய கையிலிருந்து விடுபட்ட கன்றையுடையவன் என்று கிரகண நிகழ்வுடன் ஒப்பிட்டுப் புலவர் கூறியுள்ளார்.

'' உரவுக் கதிர் மழுங்கிய கல்சேர் ஞாயிறு

அரவு நுங்கு மதியின், ஐயென மறையும்''[11]

என்னும் அகநானூற்றுப் பாடலில் கிரகண நிகழ்வைப் 'பாம்பு விழுங்கும் நிலை' எனக் குறிப்பிடப்பட்டுள்ளது.

'' அரவு நுங்கு மதியின் நுதல் ஒளி கரப்பு

தம் அலது இல்லா நம் இவண் ஒழிய''[12]

என்று இப்பாடலில் பாம்பு சேர்ந்த மதி போல நெற்றிப் பொட்டு ஒளியிழந்தது என்றும் கூறப்பட்டுள்ள பகுதி உள்ளது.

'' பாம்பு ஊர் மதியின் நுதல் ஒளி கரப்பவும்''[13]

'' அகல் இரு விசும்பின் அரவும் குறைபடுத்த

பசுங்கதிர் மதியத்து அகல் நிலாப் போல''[14]

என்னும் நற்றிணைப் பாடலடிகள் இராகு நிலவைப் பற்றியதால், நிலவு ஒளியிழந்து காணப்படுவது போல தலைவியின் நெற்றியில் ஒளி குன்றி விட்டது என்றும் வானத்தில் பாம்பு விழுங்குவதால் குறைவுபட்ட கதிரை உடைய திங்கள் ஒளியைப் போல சிறிய நெற்றியை உடையவள் தலைவி என்றும் 'கிரகண நிகழ்வுடன்' ஒப்பிட்டுக் கூறியுள்ளன.

''விஷ்ணுமூர்த்தி சகன் மோகனி உருக் கொண்டு தேவர்களுக்கு அமுது படைத்தளித்த காலத்தில், இராகு தேவவுருக் கொண்டு சூரிய சந்திரர் இருவருக்கும் இடையிலிருந்து வாங்கிப் புசித்தனன். இவ்விருவரும் இராகுவை விஷ்ணுமூர்த்தி எனக் குறிப்பித்தனர். மோகினி உருக்கொண்ட விஷ்ணு, இராகுவைத் தலையில் சட்டுவத்தால் அடித்தார். பிரிந்த சிரம் இராகு வென்றும் மற்ற தேகம் கேது வென்றும் பெயருற்றுச் சூரிய சந்திரர் தங்களைக் குறிப்பித்த காரணத்தால், அவர்கள் மேல் பகைமை கொண்டு தவ வன்மையால் மறைப்பர் என்பர். இவர்கள் தவத்தால் கிரகபதம் அடைந்தனர். இவர்கள் விஷ்ணுவை எண்ணித் தவமியற்றிக் கரும்பாம்பு செம்பாம்பின் உருவாயினர்''[15] என ஞாயிற்றைக் கேதுவும், திங்களை இராகுவும் தீண்டும் என அபிதான சிந்தாமணி கூறும். கலித்தொகையிலும் இச்செய்தியைக் காணலாம்.

'' பால் மதி சேர்ந்த அரவினைக் கோள் விடுக்கும்

நீல நிற வண்ணனும் போன்ம்''[16]

'' திங்கள் அரவு உறின், தீர்க்கலார் ஆயினும்

தம் காதல் காட்டுவார், சான்றவர் - இன்சாயல்''[17]

'' வாள் பொரு வானத்து, அரவின் வாய் கோட்பட்டுப்

போதரும் பால் மதியும் போன்ம்''[18]

எனும் பாடலடிகள், நிலவினை விழுங்க முற்பட்ட பாம்பினை அது மறைத்த தன்மையிலிருந்து விடுவிக்கும் நீல நிறத்தைப் போன்றவன் மாயோன் என்று சந்திர கிரகணத்தையும் ஆகாயத்தில் பாம்பினால் கவ்வப்பட்டுச் செல்லுகின்ற மதியைப் போல வெள்ளிய எருது ஒன்று கழுத்திடத்தே தழுவிக் கொண்டவனோடு பரணின் மீது தாவிப் பாய்கிறது என்று சந்திர கிரகண நிகழ்வுடன் ஒப்பிடும் திங்களைப் பாம்பு சென்று மறைக்குங் காலை சான்றோர் அதன் வருத்தத்தைத் தீர்க்கமாட்டார் ஆயினும் அதனிடத்து அன்பு காட்டித் துன்புறுவர் என்றும் எடுத்துரைக்கக் காணலாம்.

''அரவு நுங்கு மதியிற்கு இவணோர் போலக்

காளையர் ஆயினும், கண் இனிது படீஇயர்''[19]

என்னும் குறுந்தொகைச் செய்யுள் பாம்பினால் விழுங்கப்பட்ட திங்களைக் காணும் ஊர்மக்கள் என்று குறிப்பிட்டு, பாம்பை மதியிலிருந்து விடுவிக்க அறியாது, பாம்பின் மீது பழி கூறுவோரைப் போல தலைவியை மீட்டுத் திருமணம் செய்யாத ஊர், தலைவன் மீது பழி உரைக்கின்றது என்று சந்திர கிரகண நிகழ்வுடன் ஒப்பிட்டுக் கூறி உள்ளது.

**'' திகை முழுது கமழ, முகில் அகடு கழி மதியின்**

**உறை கழி வள்ளத்து உறு நறவு வாக்குநர்**

**அரவு செறி உவவு மதியென அங்கையில் தாங்கி''**[20]

என்னும் பகுதி உறையிலிருந்து எடுக்கப்பட்ட வெள்ளிக் கிண்ணம் மேகத்தின் வாயிலிருந்து தோன்றும் நிலவினைப் போன்றிருந்தது என்றும் அக்கிண்ணம் மகளிர் கையில் இருக்கும் காட்சியைப் பாம்பினால் விழுங்கப் பட்டிருக்கும் முழு நிலவு போல இருந்தது என்றும் குறிக்கின்றது.

**'' ............... பாம்பு ஒல்லை**

**மதியம் மறைய, வரு நாளில் வாய்ந்த''**[21]

என்னும் பாடலடிகள் இராகு என்னும் பாம்பினால் சந்திரன் மறைக்கும் படியாக வரும் நாள் சந்திர கிரகணம் என்னும் செய்தியைப் புலப்படுத்தக் காணலாம். பத்துப்பாட்டு நூல்களுள் ஒன்றான சிறுபாணாற்றுப்படை,

**'' கொங்கு கவர் நீலச் செங்கட் சேவல்**

**மதிசேர் அரவின் மானத் தோன்றும்''**[22]

என்று குறிப்பிடும். வண்டுகள் பறந்து சென்று வெண்டாமரை மலரை அடையும் தோற்றம் பாம்பு திங்களைக் கவ்வும் தோற்றம் போன்றிருந்தது என உவமையாகக் கையாளப்பட்டுள்ளது.

புறநானூறு, குறுந்தொகை, நற்றிணை, அகநானூறு, கலித்தொகை, பரிபாடல், சிறுபாணாற்றுப்படை ஆகிய சங்க நூல்கள் சந்திர கிரகணம் பற்றிக் குறிப்பிட்டுள்ளன. இச்செய்தி உவமையாகவும் ஒப்பிட்டும் எடுத்தாளப்பட்டுள்ளன. சங்க காலத்தில் வானில் கிரகணம் ஏற்படுவதை மக்கள் கணித்திருந்தனர் என்பதை இக்கருத்துக்கள் உணர்த்துகின்றன.

## வளர்பிறை – தேய்பிறை செய்திகள்

திங்கள் பூமியைச் சுற்றி வரும் கோள். திங்கள் தன்னைத் தானே ஒருமுறை சுற்றிக் கொண்டு பூமியைச் சுற்றி வர முப்பது நாட்கள் ஆகும். திங்களின் ஒரு பகுதி மட்டுமே எப்பொழுதும் பூமியைப் பார்த்துக் கொண்டிருப்பதால், முதல் பதினைந்து நாள்கள் திங்கள் வளர்வது போலவும் அடுத்த பதினைந்து நாள்கள் தேய்வது போலவும் காட்சியளிக்கின்றது. இந்நிகழ்வு வளர்பிறை தேய்பிறை என்றும் அழைக்கப்படுகிறது. மாங்குடி மருதனார் என்னும் புலவர் மதுரைக் காஞ்சியில் வளர்பிறை தேய்பிறை பற்றிக் குறிப்பிட்டுள்ளார்.

**''குட முதல் தோன்றிய தொன்று தொழு பிறையின்**
**வழிவழிச் சிறக்க, நின் வலம்படு கொற்றம்!**
**குண முதல் தோன்றிய ஆர்இருள் மதியின்**
**தேய்வன கெடுக, நின் தெவ்வர் ஆக்கம்!''**[23]

என்று குறிப்பிட்டுள்ளார். பகைவர்களை வெல்லுதல், அரசியல் அறங்களை அறிதல், அறவுணர்வு மிகுதல் ஆகிய இயல்புகள் மேற்குத் திசையில் தோன்றும் வளர்பிறை போல வளர்ந்து வரும் என்றும் பகைவருடைய ஆக்கம் கிழக்கு திசையில் இருளைத் தரும் மதி நாள்தோறும் தேய்வது போலக் கெடும் என்றும் வளர்பிறை தேய்பிறையுடன் ஒப்பிட்டு விளக்கியுள்ளார்.

## முழு நிலவு

திங்கள் பூமியைச் சுற்றி வரும் பதினைந்தாவது நாள் முழு நிலவு தெரியும். இதைப் பௌர்ணமி என்று அழைப்பர். நற்றிணையிலும் புறநானூற்றிலும் முழு நிலா நாள் பற்றிய செய்திகள் உள்ளன.

" மாக விசும்பின் வெண் திங்கள்

மூ - ஐந்தான் முறை முற்ற

கடல் நடுவண் கண்டன்ன என்

இயம் இசையா, மரபு ஏத்தி"[24]

என வரும் பகுதியில் கடலின் நடுவே முழுமதி தோன்றுகிறது என்று குறிப்பிடப்பட்டுள்ளது. முழு நிலவைத் தடாரிப் பறைக்கு உவமையாக விளக்கியுள்ளதைக் காணலாம். இக்கருத்து நற்றிணை 196 - ஆவது பாடலில்,

"நிறையுறு மதியம்"[25]

என்றும், நற்றிணை 346 - வது பாடலில்,

"நிறையுறு மதியின் இலங்கும்"[26]

என்றும் குறிப்பிடப்பட்டுள்ளன.

பிரமன் மானச புத்திரர்களில் ஒருவன். இவன் அசக்னியிடம் அறுபது பெண்களைப் பெற்றுத் தருமாறு பிரசாபதிக்குப் பத்துப் பெண்களையும் காசிபருக்குப் பதின்மூவரையும் சந்திரனுக்கு இருபத்தெழுவரையும் பூதர், ஆங்கிரச, சிரிசுவா ஆகியோர்க்கு இவ்விரண்டு பெண்களையும் தாட்சயபருக்கு நான்கு பெண்களையும் கொடுத்தான். இவர்களுள் சந்திரன், கிருத்திகை, ரோகிணிகள் ஒழிந்த பிறரிடம் அன்பில்லாதிருந்ததால், திங்களின் கலைகள் தேயுமாறு சபித்தனன். அத்திங்கள் சிவமூர்த்தியை வேண்டிச் சாபம் போக்கிக் கொண்டனன்[27] என அபிதான சிந்தாமணியில் சந்திரன் தேய்வுக்கும் வளர்ச்சிக்கும் விளக்கங்கள் கூறப்பட்டுள்ளன.

### வானியல் செய்திகள்

சங்க காலத்தில் வானில் உள்ள கோள் நிலைகளைப் புலவர் அறிந்து வைத்திருந்தனர்.

'' என்றூழ் உறவரும் இருசுடர் நேமி

ஒன்றிய சுடர்நிலை உள்படு வோரும்''[28]

என்று குறிப்பிடப்பட்டுள்ளமை ஒரு சான்றாகும். என்றூழ் என்பது வெயிலுக்குக் காரணமான ஞாயிறு (சூரியன்) என்றும் இருசுடர் என்பது நாண்மீன்கள் பிற மீன்கள் என்றும் நாண் மீன் என்பன அசுவினி, பரணி, கிருத்திகை, ரோகிணி, மிருகசீரிடம், திருவாதிரை, புனர்பூசம், பூசம், ஆயில்யம், மகம், பூரம், உத்திரம், ஹஸ்தம், சித்திரை, சுவாதி, விசாகம், அனுஷம், கேட்டை, மூலம், பூராடம், உத்திராடம், திருவோணம், அவிட்டம், சதயம், பூரட்டாதி, உத்திரட்டாதி ரேவதி ஆகியன பால் வீதியில் உள்ளனவாகக் கூறப்படும் இருபத்தேழு நட்சத்திரங்கள் என்றும் இவை தவிர வான மண்டலத்தில் உள்ள கோடான கோடி மீன்கள் பற்றியும் உரைப்பனவாகக் கருதலாம். வான மண்டலத்தில் உள்ள மீன்களை 'தாரகைகள்' என்று பின்பு உரையாசிரியர்கள் கூறியுள்ளனர். வானில் நாண் மீன்களையும் தாரகைகளையும் உடைய சுடர்ச் சக்கரம் போல ஒன்று இருந்ததையும் அறியலாம். சூரியன் முதலான பத்துக் கோள்கள் நீள் வட்டப் பாதையில் செல்வன போன்ற ஓவியங்களும், நாண்மீன், விண்மீன் ஓவியங்களும் திருப்பரங்குன்றில் தீட்டப்பட்டிருந்தனவாம்.

### விடிவெள்ளி பற்றிய செய்தி

வெள்ளி நிறமுடைய கோள் வெள்ளி. நாள் மீன் விட்டு விட்டு மின்னும். கோள் மீன் கண்ணாடி போல் தன் ஒளியைக் காட்டும். வெள்ளி

காலையிலோ மாலையிலோ தான் தோன்றும், காலையில் தோன்றுவதற்கு விடிவெள்ளி என்று பெயர். நற்றிணையில் 356-வது பாடலில் விடிவெள்ளி பற்றிய செய்தி இடம் பெற்றுள்ளது.

**'' ............ வாழி, என் உள்ளம்! - ஒரு நாள்**

**காதலி உழையளாக, குணக்குத் தோன்று வெள்ளியின்,**

**எமக்குமார் வருமே?''**[29]

என இப்பாடலில் விடிவெள்ளி என்பது ஒரு துருவ நட்சத்திரம் என்றும் இவ்வெள்ளி விடியற்காலையில் கிழக்குத் திசையிலிருந்து தோன்றும் என்றும் குறிப்பிடப்பட்டுள்ளது.

**'' வெள்ளி தோன்ற, புள்ளுக்குரல் இயம்ப''**[30]

என இப்பாடலில் வெள்ளியாகிய விண்மீன் வானத்தில் தோன்றும்போது புலரும் என்றும் புள்ளினங்கள் எழுந்து ஒலிக்கும் என்றும் குறிப்பிடப்பட்டுள்ளது.

**'' வெள்ளியும் இரு விசும்பு ஏர்தரும்;''**[31]

என்னும் புறநானூற்றுத் தொடரும் இக்கருத்தினைக் குறிப்பிட்டுள்ளது.

**'' மதி நிலாக் கரப்ப, வெள்ளி ஏர்தர''**[32]

என்னும் தொடரிலும் திங்களின் நிலவொளி மறைய வெள்ளியாகிய விண்மீன் எழுந்து வருகிறது என்று குறிப்பிடப்பட்டுள்ளது.

**'' வெள்ளி முளைத்த நள்இருள் விடியல்''**[33]

என்ற பொருநராற்றுப்படைக் கருத்தும் நோக்கத்தக்கதாகும்.

**வெள்ளி - மழைக்கோள்**

வெள்ளியாகிய கோள் தென் திசையில் தோன்றினால் மழை பொழியாது என்பதைப் பாடல்கள் அறிவிக்கின்றன.

**" இலங்கு கதிர் வெள்ளி தென்புலம் படரினும்**
**அம் தண் காவிரி வந்து கவர்பு ஊட்ட"**[34]

எனவும்,

**" மைம்மீன் புகையினும், தூமம் தோன்றினும்**
**தென் திசை மருங்கின் வெள்ளி ஓடினும்"**[35]

எனவும் மழை பொய்க்கும் நிலையை அறிவிக்கின்றன.

வெள்ளி கோள் தென் திசையில் எழுதல் தீய நிமித்தம் என்றும் மழை பெய்யாமைக்கும் வறட்சி தோன்றுவதற்கும் காரணம் என்றும் புறநானூற்றுப் பாடல் குறிப்பிட்டுள்ளது.

**" வெள்ளி தென் புலத்து உறைய, விளைவயல்**
**பள்ளம் வாடிய பயன் இல் காலை"**[36]

என்று கூறியுள்ளமை போன்றே மதுரைக்காஞ்சியும் குறிப்பிட்டுள்ளது.

**" இரு வானம் பெயல் ஒளிப்பினும்**
**வரும் வைகல் மீன் பிறழினும்**
**வெள்ளம் மா றாது"**[37]

'வைகல் வரும் மீன் - வெள்ளி எனும் கோள்' என்றும் இது நாள்தோறும் வைகறைப் பொழுதில், கீழ்த்திசையில் மாறாமல் தோன்றும் விண்மீன் என்றும் இக்கோள் தென் திசையில் எழுதலால் தீமை விளையும் என்றும் புலவர் கூறக் காணலாம்.

மழைக் கோளாகிய வெள்ளி (சுக்கிரன்) சிறிது வடக்கே சாய்ந்தால் மழை பெய்யும் என்றும் தெற்கே எழுந்தால் மழையின்மை நேரும் என்றும் பட்டினப்பாலை கூறியுள்ளது.

''வசையில் புகழ் வயங்கு வெண் மீன்
திசை திரிந்து தெற்கு ஏகினும்
தற் பாடிய தளி உணவின்
புள் தேம்பப் புயல் மாறி,
வான் பொய்ப்பினும் தான் பொய்யா
மலைத் தலைய கடற்காவிரி''[38]

மழை பெய்யும் பருவத்தில் பெய்யாமைக்குக் காரணம் 'கோள் நிலை திரிதல்' என்பது இதனால் பெறப்படும்.

'' வறிது வடக் கிறைஞ்சிய சீர்சால் வெள்ளி
பயங்கெழு பொழுதொடு ஆநியம் நிற்ப''[39]

என்னும் தொடர்களின் வழி மழை பெய்தற்குக் காரணமானது வெள்ளி என்பதால் சீர்சால் வெள்ளி எனப்பட்டது என்று அறியலாம்.

**செவ்வாய் சென்ற வழி வெள்ளி செல்லாமை**

மழைக் கோளாகிய வெள்ளி, செவ்வாயுடன் சேர்ந்தால் மழை பொய்க்குமாம். இதனை,

'' அழல் சென்ற மருங்கின் வெள்ளி ஓடாது
மழைவேண்டு புலத்து மாரி நிற்ப,
நோயொடு பசி இகந்து ஒரீஇ,
பூத்தன்று பெரும! நீ காத்த நாடே!''[40]

என்னும் பதிற்றுப் பத்துப் பாடல் சேர நாட்டில் செவ்வாய்க் கோள் சென்ற வழியில் சுக்கிரன் செல்லாது என்றும் தேவையான இடங்களிளெல்லாம் மழையை வெள்ளி பெய்விக்கிறது என்றும் குறிப்பிட்டுள்ளது.

**செம்மீன் (செவ்வாய்) பற்றிய செய்தி**

**'' முந்நீர் நாப்பண் திமில் சுடர் போல**
**செம்மீன் இமைக்கும் மாக விசும்பின்**
**உச்சி நின்ற உவவு மதி''[41]**

என்னும் புறநானூற்றுப் பாடலில் செவ்வாயாகிய விண்மீன், செம்மீன் என்று கூறப்பட்டுள்ளது. மேலும், செவ்வாய் தெரியுமளவு மாலைப் பொழுது சென்றது என்றும் கூறியுள்ளது அறியத் தக்கது.

**ஞாயிறு (சூரியன்) பற்றிய செய்திகள்**

ஞாயிறு எனும் கோள் பகற்பொழுதை உண்டாக்கும் என்றும் 'சிவந்த கதிர்களை' உடையது என்றும் மதுரைக்காஞ்சி குறிப்பிடுகின்றது.

**'' பகற் செய்யும் செஞ்ஞாயிறும்''[42]**

என்பதால் அறியலாம்.

**''ஞாயிற்று அன்ன வெந்திறல் ஆண்மை''[43]**

என்னும் புறநானூற்றுத் தொடர் ஞாயிறு வெம்மைத் தன்மை உடையது என்பதைச் சுட்டுகின்றது.

**'' மாக் கடல் நிவந்து எழுதரும்**
**செஞ் ஞாயிற்றுக் கவினை மாதோ''[44]**

என்னும் புறநானூற்று அடிகள், செஞ்ஞாயிறு கடலிலிருந்து எழுகையில் கதிர்களின் வெப்பம் குறைவாகத் தோன்றும் என்றும் பின் உச்சி ஏற கதிர்கள் வெம்மையாய்ச் சுடும் என்பதையும் உணர்த்துகின்றன.

ஞாயிறு, கடலின் மீது தன் சுடர்களைப் பரப்பித் தோன்றும் என்றும் பின்னர் மெல்ல விண்ணிலேறி உலகிற்கு ஒளியைப் பரப்பும் என்றும் கூறும் ஒரு பாடல்.

**'' பவ்வ மீமிசைப் பகற்கதிர் பரப்பி,**

**வெவ்வெஞ் செல்வன் விசும்பு படர்ந்தாங்கு''[45]**

ஞாயிறு, பரந்த இருளை விழுங்கிப் பகற்பொழுதைத் தோற்றுவித்து எழுகின்றது. இதனை

**''அகல் இரு விசும்பில் பாய் இருள் பருகி**

**பகல் கான்று, எழுதரு பல்கதிர்ப் பருதி''[46]**

என்பதால் அறியலாம். மேலும்

**'' பாயிருள் நீங்கப் பகல் செய்யா எழுதரும்**

**ஞாயிறு அன்ன, அவன் வசையில் சிறப்பும்''[47]**

**''வான் கண் விரிந்த விடியல் ஏற்றெழுந்து''[48]**

என்னும் மலைபடுகடாத்திலும் ஞாயிறு விடியலைத் தோற்றுவிக்கிறமை கூறப்பட்டுள்ளதை அறியலாம்.

## நாள் மீனும் கோள் மீனும்

நாள் மீன் விட்டு விட்டு மின்னும்; கோள் மீன் கண்ணாடிபோல் தன் ஒளியைக் காட்டும்.

'' நீல நிற விசும்பின் வலன் ஏர்பு திரிதரும்

நாள் மீன் விரா அய கோள் மீன் போல

மலர் தலை மன்றத்துப் பலர் உடன் குழீஇ''[49]

எனும் இத்தொடர்கள் வழி நீல நிறத்தை உடைய ஆகாயத்தில் நாள் மீன்களும், கோள் மீன்களும் வலம் வரும் காட்சி விரிவதைக் காணலாம்.

**நாள் - கோள் (நட்சத்திரம் - கிரகங்கள்)**

பதிற்றுப் பத்தில், நட்சத்திரங்கள் மற்றும் கிரகங்கள் பற்றிய செய்தி இடம் பெற்றுள்ளது.

'' நாள், கோள், திங்கள், ஞாயிறு கனை அழல்,

ஐந்து ஒருங்கு புணர்ந்த விளக்கத்து அனையை''[50]

என்னும் அடிகள் நிலம், நீர், காற்று, வானம் எனும் நான்கு பூதங்களைப் போன்று, சேரலாதனின் பெருமையும் அளத்தற்கரியது என்றும் அவன் விண்மீன்கள், கோள்கள், திங்கள், கதிரவன் ஆகியவை ஒருங்கு சேர்ந்தாற் போன்ற ஒளி பொருந்தியவன் என்றும் உரைக்கின்றன.

**வெப்ப மாற்றம்**

பொருட்கள் வெப்பத்தால் விரிவடைந்து, குளிரும் பொழுது வெடித்துச் சிதறுகின்றன என்பது அறிவியல் தத்துவம். பரிபாடலில் வெப்பத்தால் விரிவடைதல் - சுருங்குதல் பற்றிய செய்தி இடம் பெற்றுள்ளது.

'' கடல் குறைபடுத்த நீர் கல் குறைபட எறிந்து

உடல் ஏறு உருமினம் ஆர்ப்ப மலை மாலை

முற்றுபு முற்றுபு, பெய்து - சூல் முதிர் முகில்

பொழுது இகல் புலி போழ்ந்த பூநுதல் எழில் யானைக்

குருதிக் கோட்டு அழி கறை தெளிபெறக் கழீ இயின்று''[51]

என மழையின் ஆற்றலைக் கூறுகின்றது. சூரிய வெப்பம் காரணமாக பெரிய கடலில் உள்ள நீர் குறையும்படியாக ஆவியாகி, வானில் குளிர்ச்சியடைந்து மழையாகப் பொழிந்தது. மழை கடினமான விசையுடன் பெய்ததால், மலையின் பாறைகள் வெடித்துச் சிதறின என்றும் அம்மழை நீர் தன்னோடு பகைத்துப் போரிட்ட புலியின் உடம்பைக் குத்திப் பிளந்த யானையின் தந்தத்தைக் கழுவியது என்றும் இப்பாடல் குறிப்பிட்டுள்ளது. கடலில் இருந்து நீரை மேகம் முகந்து சென்றதால் கடல் நீர் குறைந்தது. மேகம் வானிலிருந்து விசையுடன் பெய்ததால் மலை பிளந்தது என்கிறது இப்பாடல். கடலில் இருந்து முகந்தபோது நீரின் வேகம் புலப்படவில்லை. ஆனால் வானிலிருந்து விழும்போது வேகம் புலப்படுகிறது. புவியீர்ப்பு பற்றியும் உணர்த்துவதாகக் கொள்ள முடிகிறது.

**கடல் மாற்றம்**

முழு நிலா நாளன்று நிலவு, பூமி, ஞாயிறு மூன்றும் ஒரே நேர்கோட்டில் வருவதால் திங்களின் ஈர்ப்பு விசை அன்று அதிகளவில் இருக்கும். ஆகவே கடல் நீர் மேலெழுந்து கொந்தளிப்பு ஏற்படுகிறது. அகநானூற்றுப் பாடலில் கடல் பொங்குதல் பற்றிய செய்தி இடம் பெற்றுள்ளது.

'' பகலோன் மறைந்த அந்தி ஆர் இடை

உருகெழு பெருங்கடல் உவவுக் கிளர்ந்தாங்கு''[52]

என ஆதவன் மறைந்த மாலைப் பொழுதில் கடல் அலை நிறைமதி நாளில் பேரொலியுடன் பொங்கி எழுகின்ற செய்தி இடம் பெற்றிருக்கக் காணலாம். கடல் பொங்குதலை ஊரார் கூறும் பழிச் சொல்லுக்கு உவமையாக்கி யுள்ளார் புலவர்.

**“ பாய் இரும் பனிக் கடல் வேட்டம் செல்லாது**

**உவவு மடிந்து உண்டு ஆடியும்”[53]**

இருப்பராம் பரதவர். நிறைமதி நாளில் கடல் அலைகளின் சீற்றம் இருக்கும் என்பதால் பரதவர் அந்நாளில் மீன்பிடிக்கச் செல்வதில்லை என அறிவிக்கின்றது இப்பாடல்.

**“ இரவுத் தலை மண்டிலம் பெயர்ந்தென உரவுத் திரை,**

**எறிவன போல வரூஉம்”[54]**

காட்சியைக் காட்டும் பாடல் ஒன்றுள்ளது. கடலின் மேல் சந்திரன் நிறைந்து தோன்றினால் கடல் பொங்கி எழுதல் இயல்பு இப்பாடல் என்று குறிப்பிடுகின்றது. அவ்வாறே நிறை நிலாக் காலம் திருமணம் செய்ய ஏற்ற காலம் என்றும் குறிப்பிட்டுள்ளது.

## நீரோட்டம் பற்றிய செய்திகள்

மலை உச்சியிலிருந்து வேகமாக வரும் மழைநீரானது காட்டாறாக மாறிப் பாறை, மணலுடன் கலந்து கலங்கிய நீராகச் சமவெளியை அடைகிறது. சமவெளியை அடைந்து வேகம் குறைந்தால் தெளிந்த நீராக மாறுகிறது. பரிபாடலில் நீரோட்டம் பற்றிய செய்தி குறிப்பிடப்பட்டுள்ளது.

**“ உம்பர் உறையும் ஒளிகிளர் வான் ஊர்பு ஆடும்**

**அம்பி கரவா வழக்கிற்றே, ஆங்கு அதை**

**கார் ஒவ்வா வேனில் கலங்கித் தெளிவரல்**

**நீர் ஒவ்வா வையை! நினக்கு”[55]**

என இப்பாடலில் கார் காலத்தில் வைகை ஆற்று நீர் கலங்கிய நிலையில் வேகமாக கரை புரண்டு ஓடும் எனவும் வேனிற் காலத்தில் தெளிந்த நீராக ஓடும் எனவும் குறிப்பிட்டுள்ளது.

**தாவரங்களின் அமைப்பும் உணவும்**

தாவரங்கள் உயிர் வாழ நீர், காற்று, ஞாயிற்றின் ஒளி ஆகியவை இன்றியமையாதன. தாவரங்களின் இலைகள் ஒளிச் சேர்க்கைக்குப் பயன்படுகின்றன. பரிபாடலில் தாவர இலைகளின் அமைப்பு குறிப்பிடப் பட்டுள்ளது.

**'' நிரை ஏழ் அடுக்கிய நீள் இலைப் பாலை**
**அரை வரை மேகலை, அணி நீர்ச் சுழி**
**தரை விசும்பு உகந்த தண் பரங்குன்றம்''**[56]

என்னும் பகுதியில் மர இலைகள் நீண்டு அமைந்துள்ளமை குறிப்பிடப் பெற்றுள்ளது.

திருப்பரங்குன்றத்து மலை உயரமானது, குளிர்ச்சியானது. இம்மலையில் பாலை மரங்கள் மிகுதியாகக் காணப்படுகின்றன என்பதை அறிய முடிகிறது. இலையின் நீட்சி கோடை கால வெம்மையைப் பாலை மரம் தாங்குவதற்கு ஏற்பவும் நீரைச் சேமித்து வைப்பதற்காகவும் அமைந்தது என்றும் இவ்விலைகள் ஏழேழாக அடுக்கியுள்ளமையால் ''ஏழிலைப் பாலை'' என்றும் இப்பாலையின் மலர்கள் யானையின் மதநீர் போல் மணமுடையன என்றும் அறியலாம். கோடைக் காலத்தில் இலைகள் அகலமாக இருந்தால் நீர் ஆவியாகி விடும் என்பதால் இலைகள் நீண்டு அடுக்கடுக்காக அமைந்துள்ளன எனலாம்.

**ஒளிச் சேர்க்கை**

புறநானூற்றுப் பாடலில் தாவரங்களின் ஒளிச்சேர்க்கை பற்றிய செய்தி உள்ளதாகக் கருதலாம்.

> **“ முன்றில் முஞ்ஞையொடு முசுண்டை பம்பி**
> **பந்தர் வேண்டாப் பல் தூங்கு நீழல்**
> **கைம்மான் வேட்டுவன் கனைதுயில் மடிந்தென**
> **பார்வை மடப்பிணை தழீஇ, பிறிது ஓர்**
> **தீர் தொழில் தனிக்கலை திளைத்து ”**[57]

விளையாடிய காட்சியைப் புலவர் காட்டுகின்றார். இப்பகுதியில் தாவரங்கள் ஒளிச் சேர்க்கையின் போது அவை நமக்குரிய உயிர்க் காற்றை வெளிவிடுகின்றன என்ற செய்தியைக் காணலாம். சங்க கால மக்கள் வட்டின் முற்றத்தில் முஞ்ஞைக் கொடி மற்றும் முசுண்டைக் கொடிகளை வளர்த்தனர். அவை பந்தல் போலக் காட்சி அளித்தன. வெயில் வேளையில் அப்பந்தல் நிழலில் யானை வேட்டையாடுபவன் உறங்கினான் என்னும் செய்தி குறிப்பிடப்பட்டுள்ளது. தாவரங்கள் நீர், ஞாயிற்றொளி முதலான பொருட்கள் மூலம் தம் உணவுத் தேவையான பச்சையத்தைத் தயாரிக்கின்றன. ஒளிச் சேர்க்கையின் போது தாவரங்கள் உயிர்க்காற்றை வெளி விடுகின்றன. ஆகையால் பகல் வேளையில் மரநிழலில் உறங்குதல் மனிதனுக்கு நன்மை விளைவிக்கும்.

**உரம் இடுதல்**

தாவரங்கள் வளர்வதற்குத் தேவையான சத்துக்கள் பூமியிலிருந்து கிடைக்காத பொழுது நாம் இடும் உரங்களிலிருந்து தேவையான

சத்துக்களைப் பெற்றுச் செழிப்பாக வளருகின்றன. இயற்கை உரம், செயற்கை உரம், தொழு உரம் என உரங்களைப் பலவகைப்படுத்துவர். குறுந்தொகைப் பாடலில் தாவரங்களுக்கு உரம் இடுதல் பற்றிய செய்தி உள்ளது.

'' நறை அகில் வயங்கிய நளிபுன நறும்புகை
உறை அறு மையின் போகி சாரல்''[58]

என்னும் இப்பாடலில் சாம்பலைத் தாவரங்களுக்கு எருவாகப் பயன்படுத்தும் முறை கூறப்பெற்றுள்ளது. குறவர் காட்டுப் பகுதியில் உள்ள நறைக் கொடியையும் அகில் மரத்தையும் தீயிட்டுக் கொளுத்தினர். மரங்கள், இலைகள் எரிந்து சாம்பலாயின என்றும் இந்தச் சாம்பலை தினைப் புனத்திற்கு எருவாக இட்டுப் பயன்படுத்தினர் என்றும் அறியலாம். இதன் மூலம் சங்க கால மக்கள் தாவரங்களுக்குத் தாது உப்புக்கள் நிறைந்த சாம்பலை உரமாக இட்டு நிலத்தை வளப்படுத்தினர் என்பதை அறிய முடிகிறது.

**பயிரியல் செய்திகள்**

ஒரு பயிர் அறுவடைக்குப் பின் அடுத்து விதைக்கும் வரையோ அல்லது பயிரிடும்போதோ உடனேயே பலன் தரக்கூடிய வேறு பயிர் சாகுபடி செய்வது உண்டு. பயிருடன் விளைவிப்பதை ஊடுபயிர் என்றும் அடுத்து விதைக்குமுன் இடையே பயிரிடுவதை ஊடுபயிர் என்றும் குறிப்பர்.

'' பெரும்புனக் குறவன் சிறுதினை மறுகால்
கொழுங்கொடி அவரை பூக்கும்
அரும்பனி அற்சிரம் வாரா தோரே''[59]

என்னும் இப்பாடலில் மாற்றுப் பயிர் பற்றிக் குறிப்பிடப்பட்டுள்ளது. நிலத்தில் தினை விதைத்து அறுவடை செய்து மகிழ்ந்த பின்னர் மறுமுறை நிலத்தில் அவரை விதைகளை விதைத்து, அது படர்ந்து பூத்துக் காய்த்தனவற்றைப் பெற்று மகிழ்வான் என்பதன் மூலம் தினைக்குப் பின்னர் அவரை மாற்றுப் பயிராகப் பயிரிட்டு அறுவடை செய்து இன்பம் பெறுவது போல தலைவன் வினை முடித்து தலைவியைக் கண்டு இன்புறுவான் என அறிவியல் செய்தியை உவமையாகக் கூறி விளக்கியுள்ளதை அறியலாம்.

**நீர்ப்பாசன முறை**

**‘‘ கல் அறுத்து இயற்றி வல் உவர்க் கூவல்**
**வில் ஏர் வாழ்க்கை, சீறூர் மதவலி**
**நனி நல் கூர்ந்தனன்’’**[60]

இப்பாடலில் நீர்ப்பாசன முறை பற்றிக் குறிப்பிடப்பட்டுள்ளது. கல்லைப் பிளந்து உருவாக்கிய வலிய, உவர்ப்புத் தன்மையுடைய நீரினைக் கொண்ட சிறு குளத்தை உடைய ஊரில் உழவுத் தொழிலால் வாழும் வாழ்க்கையையுடைய தலைவன் என்று தலைவனின் வாழ்க்கைச் சிறப்பைக் கூற வந்த இடத்தில், பூமியில் உள்ள பாறைகளை வெடிவைத்துத் தகர்த்துக் கிணறு வெட்டுதல், கிணற்று நீர்ப் பாசனம் மூலம் உழவுத் தொழில் நடைபெறுதல் பற்றிய செய்திகளை விளக்கிக் கூறியிருப்பதைக் காணலாம்.

**தாவரம்**

பொருநராற்றுப்படையில் நீர் சேமிக்கும் தாவரம் பற்றிய குறிப்பு உள்ளது.

" மன்னர் நடுங்கத் தோன்றி, பல்மாண்

எல்லை தருநன் பல்கதிர் பரப்பி,

குல்லை கரியவும், கோடுளரி நைப்பவும்"[61]

இப்பகுதி மூலம் கஞ்சங்குல்லை என்னும் தாவரம், கோடை வெப்பத்தைத் தாங்கும் சக்தி உடையது என்பதை அறியலாம். குல்லை என்பது கஞ்சங்குல்லை அதாவது கஞ்சாச் செடி ஆகும். கஞ்சங்குல்லை செடி வெப்பத்தால் நீண்டு நின்றதையும் வெயில் தாக்கத்தால் பிற புற்பூண்டுகள் அழிந்தமையும் அறியலாம்.

**மருத்துவத் தாவரங்கள்**

துளசி, கற்பூரவல்லி, கீழாநெல்லி, அரச இலைகள் முதலான மருத்துவத் தாவரங்கள் மருந்தாகப் பயன்படுகின்றன.

" தீம் கனி இரவமொடு வேம்பு மானைச் செரீஇ"[62]

எனவரும் தொடரில் வேம்பு, இரவ இலைகள் பற்றிய குறிப்பு உள்ளது. சங்க காலத்தில் இல்லங்களில் இனிமை மிக்க கனிகளைக் கொடுக்கும் இரவ மரத்தின் தழை, வேப்ப மரத்தின் இலை ஆகியவற்றைச் சேர்த்து வைத்திருந்தனர். போரில் புண்பட்டு வரும் வீரர்களுக்கு வேம்பு, இரவ மரத்தின் இலைகளை அரைத்து நோய் தீர்க்கும் மருந்தாகப் பயன்படுத்தினர் என்பதை அறிய முடிகிறது.

**வேளாண் செய்திகள்**

நிலத்தின் வளத்தைப் பொறுத்தே பயன்கள் விளையும் நிலத்தை நன்செய், புன்செய் என இருவகைப்படுத்துவர், புன்செய் நிலத்தில் நெல் விளையாது. இதனை,

“ .......... புறவு சேர்ந்திருந்த

புன்புலச் சீறூர், நெல் விளையாதே;

வரகும் தினையும் உள்ளவை எல்லாம்

இரவல் மாக்களுக்கு ஈயத் தொலைந்தன.”[63]

எனும் புறநானூற்றுப் பாடல் புன்செய் நிலம் பற்றிப் பேசுகிறது. பொதுவாக முல்லை நிலம் என்று அழைக்கப்படுகின்ற காட்டுப்பகுதி மழைப் பொழிவை மட்டுமே நம்பியதாகும். ஆகையால் வானம் பார்த்த பூமி என்றும் கூறப்படுகிறது. முல்லை நிலத்தைச் சார்ந்திருக்கும் புன்செய் நிலங்களையுடைய சிறிய ஊர்களில் நெல் விளைவதில்லை என்றும் அந்நிலங்களில் வரகும் தினையுமாகிய உணவுப் பொருட்கள் விளையும் என்றும் அப்பொருட்கள் பசியால் வருந்தி வரும் இரவலர்களுக்கு வழங்கியமையால் தீர்ந்து இல்லாமல் போயின என்பதையும் இப்பாடல் உணர்த்துகின்றது. மண் மற்றும் நீர்வளம் மிக்க நன்செய் நிலத்தில் நெல் விளையும் என்பதையும் சிறூர் மன்னரின் கொடைத் திறத்தையும் விருந்தோம்பல் பண்பினையும் இயற்கையோடு இயைந்த வாழ்க்கை யையும் குறிப்பாக உணரச் செய்கின்ற பாடல் இதுவாகும்.

**கலப்பையின் பயன்பாடு**

கலப்பையின் துணை கொண்டு உழவர் உழுது தானியங்களை விளைவித்தனர்.

“..................ஆய்மகள்

தயிர் கொடு வந்த தசும்பும் நிறைய

ஏரின் வாழ்நர் பேர் இல் அரிவையர்

குளக் கீழ் விளைந்த களக் கொள் வெண்ணெல்”[64]

என்னும் புறநானூற்றுச் செய்யுள் ஏர் வாழ்நர் என்றே உழவரைக் குறிக்கின்றது.

பரந்த வயல்களில் ஏர் உழுதல், நீர் நிரம்பி விளங்கும் பாத்திகள், நெல் நிறைந்து விளங்கும் வீடுகள் என உழுதுண்டு வாழ்வதால் நிறைந்து பெருகும் வாழ்க்கை புறநானூற்றில் கூறப்பெற்றுள்ளது.

**'' ஏர் பரந்த வயல், நீர் பரந்த செறுவின்**
**நெல் மலிந்த மனை, பொன் மலிந்த மறுகின்**
**படுவண்டு ஆர்க்கும் பல் மலர்க் காவின்**
**நெடுவேள் ஆதன் போந்தை அன்ன''**[65]

எனக் கூறப்பெற்றுள்ளது.

சங்க காலத்தில் இரும்பு உலோகமாகப் பயன்படுத்தப் பட்டுள்ளது. உழவுத் தொழிலுக்குரிய கலப்பை செய்ய இரும்பு பயன்படுத்தப் பட்டுள்ளது. போர்க்கருவிகளும் இரும்பில் செய்யப்பட்டிருந்தன. எனவே வீரன் போர்க்களத்தில் கருவியைக் கொண்டு எவ்வாறு வெற்றி பெறுவானோ அவ்வாறே வயலில் உழவுத் தொழிலை மேற்கொள்ளும் உழவர்கள் கலப்பையால் உழுது பயன் எனும் வெற்றியைப் பெற்றனராம்.

**'' வருபடை தாங்கி, பெயர் புறத்து ஆர்த்து**
**பொருபடை தரூஉம் கொற்றமும் உழுபடை**
**ஊன்று சால் மருங்கின் ஈன்றதன் பயனே''**[66]

எனும் புறப்பாடல் குறிப்பாய் உணர்த்துகிறது. ஏரினால் நிலத்தை உழுது நெல் விளைவித்து வெற்றி பெற்றனர். அதுபோலப் போரில் பெரும்

படையை வென்று வெற்றியை விளைவித்தனர். கலப்பை கொண்டு ஏர் உழுதலை உவமையாகக் கூறி விளக்கியுள்ளார் புலவர்.

**நீர் வாழ்வன**

முதலை, மீன் ஆகிய ஈர் உயிரினங்களும் நீர்வாழ் வகையைச் சார்ந்தவை.

**'' முதலை போத்து முழுமீன் ஆரும்**
**தண் துறை''**[67]

இப்பாடலில் ஆழம் மிகுந்த நீர் நிலையில் முதலைகளும் மீன்களும் மிகுதியாக இருந்தன என்பதால் சங்க காலத்தில் இருந்த நீர் வளத்தை அறியலாம். முதலைகள் ஆழமான நீர் நிலையில் தாம் வாழும் என்னும் உயிரியல் சூழல் அறிவைக் கொண்டிருந்தனர் என அறியலாம். மீன் நீர் வளத்தினால் கொழுத்து இருந்ததையும் அறியலாம்.

முதலைகள் தம் பிள்ளையையே தின்னும் என்பது பழமொழியாக உள்ளது. ஐங்குறு நூறு இதனைத் தொன்மம் ஆக்கியதால் பழமொழி யாகியது எனலாம்.

**''பிள்ளை தின்னும் முதலைத்து...''**[68]

என்னும் பாடலடி எண்ணத்தக்கதாகும்.

**வாவல் (வவ்வால்)**

வவ்வால் கரிய நிறம் உடைய உயிரியாகும். பகலில் பதுங்கி இரவில் மட்டுமே வெளியில் இயங்கும். உயரத்தில் பறக்கும் மெல்லிய அழகான

சிறகுகளைக் கொண்டது, பழந்தின்னி வவ்வால் என ஒரு வகை உண்டு. ஐங்குறுநூற்றில் பழந்தின்னி வவ்வால் இரு பாடல்களில் இடம்பெற்றுள்ளது.

**'' ...........சிறியிலைக்**

**குறுஞ்சினை வேம்பின் நறும்பழம் உணீஇய**

**வாவல் உகக்கும் மாலை''**[69]

என்றும்

**''செல்லிய முயலிப் பாஅய சிறகர்**

**வாவல் உகக்கும் மாலை''**[70]

என்றும் இப்பாடலடிகள் வாவல் பற்றிக் குறிப்பிட்டுள்ளன.

**மணல்**

குறுந்தொகைப் பாடல்களில் மண் வகையும் அதன் பண்புகளும் குறிப்பிடப்பட்டுள்ளன.

வெண் மணல் என்பது தூய மணல்; அது வெள்ளிய நிறம் கொண்டது. கடற்கரையிலும் உப்பங்கழிகளை அடுத்தும் அம்மணல் காணப்படுகிறது.

**'' வெண்மணற் பொதுளிய பைங்காற் கருக்கின்''**[71]

என்றும்

**'' ஓங்கல் வெண் மணல் தாழ்ந்த புன்னைத்**

**தாதுசேர் நிகர்மலர் கொய்யும்''**[72]

என்று புலவர் பாடியுள்ளனர். செம்மண் என்பது செந்நிறம் கொண்டதால் அவ்வாறு வழங்கப்படுகிறது. செம்புலம், செவ்வி எனும் சொற்களாலும்

அது வழங்கப்பட்டுள்ளது. அதிக ஈர்ப்புத் தன்மையைக் கொண்டது இம்மண்.

**'' செம்புலப் பெயல்நீர் போல**

**அன்புடை நெஞ்சம் தாம் கலந்தனவே''**[73]

என்பதாலும்

**'' செவ்வி கொள் வரகின் செஞ்சுவற் கலித்த**

**கவ்வை நாற்றின் கார் இருள் ஓர் இலை''**[74]

என்பதாலும் இவற்றை அறியலாம்.

கரிசல் மண்ணைக் கருமண் என்று குறிப்பிட்டுள்ளனர். தலைவியின் கூந்தலுக்கு அம்மண்ணை ஒப்புமைப்படுத்தியுள்ளனர் புலவர்.

**'' நுண் மணல் அறல் வார்ந்த தன்ன**

**நல்நெறி யவ்வே நறுந் தண் ணியவே''**[75]

என்றும்

**''ஆரம் நாறும் அறல் போற் கூந்தல்**

**பேர் அமர் மழைக்கண் கொடிச்சி''**[76]

என்றும் பாடியுள்ளமையால் அறல் பற்றி அறிய முடிகிறது. கருமணல் படுகைகளையும் குறிப்பிட்டிருக்கக் காணலாம். இன்று இம்மண்ணில் பருத்தி விளைவிக்கப்படுகின்றது. படுகையின் முகப்பில் படிகின்ற கனிம வளங்கொண்ட வண்டல் மண் பற்றியும் சங்க இலக்கியம் எடுத்துரைக்கின்றது. இது நீரோட்டமுள்ள பகுதிகளில் படிந்து காணப்படுவதாகும் என்றும் அறியலாம். வண்டல் மண்ணால் உருண்டை செய்து அவற்றை ஒருவர்

மீது ஒருவர் வீசியும், அழகிய பாவைகளை உருவாக்கியும் பெண்கள் மகிழ்ந்து விளையாடியுள்ளனர்.

**" ஒண் தொடி மகளிர் வண்டல் அயரும்**
**தொண்டி அன்ன என் நலம் தந்து"[77]**

**" ஒண் தொடி மகளிர் வண்டல் அயரும்**
**புள் இமிழ் பெருங்கடற் சேர்ப்பனை"[78]**

என்னும் இவ்விரு பாடல்கள் வண்டல் அயரும் காட்சியைக் காட்டுகின்றன.

**சங்கு**

சங்கு கடலில் கூட்டம் கூட்டமாக வாழும் உயிரியாகும். அது வாழும் பகுதியைச் சங்குப் படுகை (Chank Bed) என்பர். கடலில் இருந்து எடுக்கப்படும் சங்கின் மேற்புறம் பழுப்பு நிறம் கொண்ட முடியுடன் காணப்படுகிறது. இதனை நீக்கினால் வெண்மை நிறத்தைக் காணலாம். கூடுகளில் காணப்படும் ஒருவகைக் கடலடிப் புழுக்களைச் சங்கு விரும்பி உண்கின்றது.

சங்கினத்தின் வாழ்விடம் குறித்துக் கலைக்களஞ்சியம் விளக்குவதைக் காணலாம்.

"சங்கு இந்தியக் கடலிலே சாதாரணமாகக் காணப்படுவது. கடலிலே குளித்து எடுக்கக்கூடிய பெரிய பெரிய படுகைப் பகுதிகளிலே ஏறக்குறைய ஏழாள் ஆழம் வரையிலும் கிழக்குக் கடற்கரையிலே திருநெல்வேலி, இராமநாதபுரம், தென்னார்க்காடு, தஞ்சாவூர் மாவட்டங்களிலும் மேற்குக் கரையிலே திருவாங்கூர் ஆகிய இடங்களிலும் அகப்படுகிறது."[79]

அபிதான சிந்தாமணி, “சங்குகளில் பல வகையுண்டு. இவற்றில் வலம்புரிச் சங்கே விசேடமானது”[80] என்று கூறுகிறது. அச்சங்கு பற்றிய செய்தியை,

**“வலம்புரி உழுத வார் மணல் அடைகரை**
**இலங்கு கதிர் முத்தம் இருள் கெட இமைக்கும்”[81]**

என்னும் ஐங்குறு நூற்றுச் செய்யுள் வழி அறியலாம்.

## இப்பி

கடற்கரையோரத்தில் மண்ணுள் புதைந்து வாழும் ஓடு பொருந்திய உயிரினம் இப்பி எனப்படும். இது முரள் என்றும் சிப்பி என்றும் அழைக்கப்படுகின்றது. இதன் ஓட்டினைக் கிளிஞ்சல் என்பர். இதனைக் கொண்டு சுண்ணாம்பு தயாரிக்கின்றனர். புன்னை மரத்தின் பூந்தாதுக்கள் கடல் துறையை அடுத்து உள்ள இப்பியின் ஓட்டின் மீது படிந்து அதனை மறைத்து விடும் என நற்றிணை குறிப்பிட்டுள்ளது.

**“ பனியரும்பு உடைந்த பெருந்தாட் புன்னை**
**துறைமேய் இப்பி ஈர்ம்புறத்து உறைக்கும்”[82]**

## முத்துச் சிப்பி

கடலிலுள்ள முத்துச் சிப்பி என்னும் ஒருவித ஆளியின் (Oyster) சிப்பியினுள் ஒரு மணலோ வேறு உறுத்தும் பொருளோ, புகுந்தால் அப்போது அவ்வுயிரி தன் புறத்தோல் அடுக்காகிய எப்பிதீலியம் (Epithelium) என்னும் படலத்தால் அதைப் பொதிகின்றது. அந்தப் பையினுள் அவ்வுயிரி சுரக்கும் நீர் மெல்லிய அடுக்காக வந்து சேர்ந்த

பொருளைப் பொதிக்கின்றது. முற்றிலும் நன்கு பொதியப் பெற்ற பொருள்தான் முத்து என்கிறது கலைக்களஞ்சியம்.

தமிழ்நாடு பண்டை நாளிலிருந்து முத்துக்குப் பெயர் பெற்றதாகும். மீனவர் முத்துக்களைத் தமக்குள் பங்கிட்டுக் கொள்வதை அகநானூற்றின் வழி அறிய முடிகின்றது.

**“ ................ விரிதிரைக்**
**கண்டிரள் முத்தங் கொண்டு ஞாங்கர்த்**
**தேனிமிர் அகன்கரைப் பகுக்குங்**
**கானலம் பெருந்துறைப் பரதவன்”**[83]

**நீர் நாய்**

நீரில் வாழும் தன்மையுடையது நீர் நாய் என்னும் உயிரினம். இது கழிகளில் உள்ள மீன்களை உண்டு உயிர் வாழும். இது கரைகளில் உள்ள தில்லை மரத்தினுள் பொந்தமைத்துக் கொண்டு வாழும் என நற்றிணை கூறும்.

**“ ....................இருங்கழிக்**
**குருளை நீர்நாய் கொழுமீன் மாந்தி**
**தில்லைஅம் பொதும்பில் பள்ளி கொள்ளும்”**[84]

**இயற்கை வளம்**

நாட்டின் கனிம வளத்தினை நிலத்தடியில் கிடைக்கும் தங்கம், வெள்ளி, இரும்பு, பெட்ரோல், நிலக்கரி, மைக்கா முதலியவற்றின் அளவைப் பொறுத்து மதிப்பிடுகின்றனர்.

'' பொன்னும், துகிரும், முத்தும், மன்னிய

மா மாலை பயந்த காமரு மணியும்

இடைபடச் சேய ஆயினும், தொடை புணர்ந்து'' [85]

இருந்தமையைப் புறநானூறு கூறும். பொன், பவளம், முத்து மணி முதலானவை எவ்வாறு உருவாகின்றன என்பதை அறிய முடிகின்றது. பல்லாயிரக் கணக்கான ஆண்டுகளுக்கு முன் நிலத்தடியில் புதையுண்ட தாவரம் நிலக்கரியாக மாற்றமடைந்து அது வைரமாக உருவாகின்றது. பவளம் கடலுக்கடியில் உள்ள பவளப் பாறையிலிருந்து கிடைக்கின்றது. கடலின் அடியில் சிப்பியிலிருந்து முத்து கிடைக்கிறது.

நிலம், காடு, மலை நீர் நிலையிலிருந்து இயற்கை வளம் தோன்றினாலும் அவற்றை அணிகலன்களாக்கும் போதுதாம் ஒன்று சேர்கின்றன. பெரியோர் களும் கருமத்திற்காக ஓரிடத்தில் சேர்கின்றனர் என இயற்கை வளத்தினை உவமையாகக் கூறி விளக்கியுள்ளதைக் காண முடிகிறது.

**நீர் ஆவியாதல்**

ஞாயிற்றின் வெப்பம் கடல் நீரின் மேற்பரப்பில் விழும் பொழுது, மேற்பரப்பிலுள்ள நீர் நீராவியாக மாறி மேலே சென்று மேகமாகத் திரள்கிறது.

'' அருங் குறும்பு உடைத்த கானப் பேர் எயில்

கருங் கைக் கொல்லன் செந்தீ மாட்டிய

இரும்பு உண் நீரினும், மீட்டற்கு அரிது என

வேங்கை மார்பன் இரங்க வைகலும்'' [86]

என இப்பாடலில் அதிக வெப்பம் காரணமாக நீர் ஆவியாதல் பற்றிய செய்தி இடம் பெற்றுள்ளது. வலிமையான கைகளை உடைய கொல்லன் செந்தீயில் காட்டப்பட்ட இரும்பில் தெளிக்கப்பட்டு அதனால் கொள்ளப் பெறும் நீர் மீட்டற்கு அரிது என்பதை அறியலாம். இதன் மூலம் $100^0$C வெப்ப நிலை அதிகரித்த நிலையில் பொருட்களின் மேல் விழும் நீர் ஆவியாக மாற்றம் அடைகிறது என்னும் கருத்தை அறிய முடிகிறது. வெப்பமான இரும்பில் விழுந்த நீர் மீளாதது போல கானப்பேர் எயிலையும் மீட்டல் அரிது என உவமை கூறியுள்ளதை அறிய முடிகிறது.

**கடின நீர்**

மழைநீர் தூய்மையானது. மழை நீரானது பூமியை வந்து சேர்ந்த பிறகு, பூமியிலுள்ள தாது உப்புக்கள் அதில் கரைந்து நீரைக் கடின நீராக மாற்றி விடுகின்றன. மலையில் தோன்றும் ஆற்றுநீர் சமவெளிக்கு வந்த பிறகு அங்குள்ள தாது உப்புக்கள் நீரில் கலக்கின்றன. பிறகு அந்நீர் கடலை அடையும் பொழுது உப்பாக மாறிவிடுகிறது.

**'' திரை பொரு முந்நீர்க் கரை நணிச் செலினும்**
**அறிவு நர்க் காணின், வேட்கை நீக்கும்**
**சில் நீர் வினவுவர் மாந்தர்''**[87]

இப்பாடலில் கடல் நீர் கடினமானது என்ற செய்தி குறிப்பிடப்பட்டுள்ளது. கடல் நீரில் தாது உப்புக்கள் நிறைந்து காணப்படுகின்றன. அதனால் கடினத் தன்மையுடன் காணப்படுகிறது. எனவே கடல் நீர் அருகில் இருந்தாலும் குடிநீராகப் பயன்படுவதில்லை. மென்னீர் மட்டுமே பருக உதவுகின்றது. ஆற்றுநீர் மென்மைத் தன்மை உடையது. ஆற்றுநீர் போல அறிவுடையோர் மன்னர் பக்கத்தில் இருந்தாலும் கொடை வள்ளலை நோக்கியே செல்வர் என்று இருவகை நீரையும் ஒப்பிட்டு விளக்கியுள்ளதை அறியலாம்.

"தெண் நீர்ப் பரப்பின் இமிழ் திரைப் பெருங்கடல்
உண்ணார் ஆகுப, நீர் வேட்டோரே;
ஆவும் மாவும் சென்று உண கலங்கி
சேறொடு பட்ட சிறுமைத்து ஆயினும்
உண் நீர் மருங்கின் அதர்பல ஆகும்"[88]

என்னும் கழைத்தின் யானையாரின் பாடலில் கடல் நீர் கடினத் தன்மையுடன் காணப்படுவதால் தெளிந்த நீராக இருந்தாலும் மனிதர் பருகுவரல்லர். ஆவும் பிற விலங்குகளும் கடல் நீரைக் குடிப்பதில்லை. அளவில் குறைந்தும் சேற்றுடன் கலந்தும் உள்ள நீரையே பருகும் என்றார் புலவர்.

தட்டையான வட்டம் போல் தோற்றம் அளிக்கும் ஞாயிறு உண்மையில் கோள வடிவில் இருக்கிறது. ஞாயிறு ஒரு நடுத்தர அளவு நட்சத்திரமே அதைவிடப் பல நூறு மடங்கு பெரிய விண்மீன்களும் இருக்கின்றன.

"செஞ் ஞாயிற்றுச் செலவும்
அஞ் ஞாயிற்றுப் பரிப்பும்
பரிப்பு சூழ்ந்த மண்டிலமும்
வளி திரிதரு திசையும்
வறிது நிலை இய காயமும் என்று இவை
சென்று அளந்து அறிந்தோர் போல்"[89]

என்னும் இப்பாடலில் வானில் உள்ள கோள்களின் இயக்கம் இடம் பெற்றுள்ளது. சிவந்த கதிர்களை உடைய ஞாயிற்றின் பாதையும் அதன் இயக்கமும், இயக்கம் சூழ்ந்த கிரகணக் கதிர்களால் அமைந்த பார் வட்டமும்

காற்று இயங்கும் திசைகளும் அந்தப் பற்றாலும் இல்லாமல் தனித்து நிற்கும் வானமும் இப்பாடலில் குறிப்பிடப்பட்டுள்ளன. ஞாயிற்றின் வட்டப் பாதை, அதன் இயக்கம், செல்லும் இடப்பரப்பு, ஞாயிற்றின் ஒளி பூமியை வந்தடைய ஆகும் கால அளவு, வானில் காற்றின் அழுத்தம் குறைந்து காணப்படும் தன்மை, நிலநடுக் கோட்டுப் (equator) பகுதியில் வாழ்ந்த திராவிட இனத்தவரால் மட்டுமே ஞாயிற்றின் தெற்கு வடக்கு இயக்கங் களையும் விண்மீன் கூட்டங்களின் மேற்கு நோக்கிய நகர்வுகளையும் நுட்பமாகப் பதிவு செய்திருக்க முடியும் என்பதையும் உணர்ந்து கொள்ள முடிகின்றது. ஞாயிற்றின் இயக்கத்தைப் பழந்தமிழர் நுட்பமாய் அறிந்திருந்தனர் என்பதற்குரிய சான்றாக இப்பாடலைக் கூறலாம்.

**'' நீர் நுங்கின் கண் வலிப்ப**
**கான வேம்பின் காய் திரங்க**
**கயம் கனியும் கோடை ஆயினும்**
**ஏலா வெண் பொன் போருறு காலை**
**எம்மும் உள்ளுமோ பிள்ளை அம் பொருநன்''**[90]

இப்பாடலில் வெயிலின் தன்மை பற்றிய செய்திகள் இடம் பெற்றுள்ளன. கோடையில் வெயிலின் தாக்கம் மிகுந்து காணப்படும். நீரை உடைய பனைநுங்கில் கோடையில் நீரின்றிக் காணப்படுகிறது. வேம்பினுடைய காய்கள் முற்றாமல் உலருகின்றன. ஆழமான நீர் நிலைகள் வற்றிக் காணப்படுகின்றன. கோடையில் ஞாயிற்றின் அதிக வெப்பத்தால் பூமியில் உள்ள நீர் ஆவியாகி விடுகின்றது என்பதையும் அறிய முடிகிறது.

**வானிலைச் செய்திகள்**

அறிவியல்பூர்வமான வானிலையியல் அறிவு கி.பி.1600 இல் இத்தாலிய அறிவியல் அறிஞர் கலிலியோ கண்டுபிடித்த 'வெப்பமானி' யுடன் தொடங்குகிறது. இன்று உலகில் பல்வேறு இடங்களில் வானிலைக் கண்காணிப்பு நிலையங்கள் அமைக்கப்பட்டு வானிலைத் தகவல்கள் சேகரிக்கப்படுகின்றன. இத்தகவல்கள் ஒரு தனிப்பட்ட குறியீட்டு முறையில் அனுப்பப்படுகின்றன. இவை வானிலைக் குறியீடு (Weather code) என்று அழைக்கப்படும். நற்றிணையில் வானிலைத் தகவல்கள் குறிப்பிடப் பட்டுள்ளன.

**காற்று**

காற்று எத்திசையிலிருந்து வீசுகின்றது என்பது வானிலைக்குத் தேவையான தகவலாகும். திசையை அடிப்படையாகக் கொண்டு காற்றிற்கு தனித்தனிப் பெயரிட்டு நற்றிணையில் குறிப்பிடப்பட்டுள்ளன. அவை

| **பெயர்** | **திசை** | **பாடல் - அடி நற்றிணை** |
|---|---|---|
| 1. கொண்டல் | கீழ்க் காற்று | 74 : 8. 89 : 1 |
| 2. கோடை | மேல் காற்று | 162 : 10, 299 : 3 |
| 3. வாடை, வடந்தை | வட திசையிலிருந்து வரும் காற்று | 5 : 8,109 : 6, 152 : 6 |
| 4. வளி | பொதுப் பெயர் | 56 : 22 |
| 5. கால் | மழையுடன் கூடிய காற்று | 2 : 9 |
| 6. ஊதை | வாடைக் காற்றை ஊதை என்பர் | 15 : 3 |

''கொண்டல் அசை வளி தூக்குதொறும், ''[91]

''கொண்டல் ஆற்றி விண்தலைச் செறீஇயர்''[92]

''வழி நார் ஊசலின், கோடை தூக்கு தொறும்''[93]

''தயங்கு இருங் கோடை தூக்கலின்,''[94]

''இளையர்த் தரூஉம் வாடை''[95]

''இரைக்கும் வாடை இருள் கூர் பொழுதில்''[96]

''வடந்தை துவலை தூவ, ''[97]

''வண்டு தரு நாற்றம் வளி கலந்து ஈய''[98]

''காலொடு பட்ட மாரி''[99]

''ஊதை தூற்றும் உரவு நீர்ச் சேர்ப்ப''[100]

என இத்தொடர்கள் காற்றின் பெயர்களை எடுத்துக்காட்டுகின்றன.

**காற்றின் வேகம்**

வானிலையாளர்கள் காற்றின் வேகத்தைக் கணக்கிட காற்று வேகமானி (Anemometer) யைப் பயன்படுத்துகின்றனர். இக்கருவி இல்லாத இடங்களில் 'ப்யூ போர்ட் ஸ்கேல்' (Beau Fort's Scale) என்ற முறை பயன்படுத்தப்படுகிறது. சர் பிரான்சிஸ் ப்யூபோர்ட் (1774 - 1857) என்ற ஆங்கில கடற்படை அதிகாரி 1806 - இல் காற்றின் சக்தியையும் வேகத்தையும் கண்டறிய, காற்றால் அசையும் பொருட்களின் அசைவினைப் பல்வேறு நிலைகளில் கண்காணித்து, காற்றின் வேகம், வலிமையைக் கணக்கிட ஒரு பட்டியல் தயாரித்தார். அவர் தயாரித்த பட்டியலே 'ப்யூபோர்ட் ஸ்கேல்' என்று அழைக்கப்படுகிறது. காற்றின் வலிமை, வேகம் பற்றிய செய்திகள் நற்றிணையில் இடம் பெற்றுள்ளன.

'' முளி கொடி வலந்த முள் அரை இலவத்து
ஒளிர் சினை அதிர வீசி, விளிபட
வெவ் வளி வழங்கும் வேய் பயில் மருங்கில்''[101]

'' முழங்கு திரை கொழீஇய முரி எக்கர்
நுணங்கு துகில் நுடக்கம் போல, கணம் கொள
ஊதை தூற்றும் உரவு நீர்ச் சேர்ப்ப''[102]

என்னும் பாடல்களில் அதிர வீசும் காற்றினைப் பற்றியும் தூற்றும் ஊதைக் காற்றுப் பற்றியும் உள்ளமை நோக்கத்தக்கன.

''செல் வளி தூக்கலின், இலை தீர் நெற்றம்
கல் இழி அருவியின் ஒல்லென ஒலிக்கும்''[103]

'' வேனில் இற்றித் தோயா நெடு வீழ்,
வழி நார் ஊசலின், கோடை தூக்கு தொறும்''[104]

'' உயிர்த்தன வாகுக, அளிய, நாளும்
அயிர்த் துகள் முகந்த ஆன ஊதையொடு
எல்லியும் இரவும் என்னாது, ''[105]

எனும் வரும் தொடர்களில் பகல் இரவு என்று பாராமல் வீசும் காற்று மணல் துகளை முகந்து வரும் என்று கூறப்பட்டுள்ளன.

**மழை**

வானிலை ஆய்வாளர்கள் மழையின் தன்மை பற்றிக் குறிப்பிடப் பயன்படுத்தும் கலைச் சொற்கள் பல. அவற்றின் முந்தைய வடிவங்கள் நற்றிணைப் பாடல்களில் பயின்று வந்துள்ளன.

**கடல் காற்று : (நற் 4,15,31)**

**இடி மழை : (நற் 7,5,129)**

**வடகிழக்கு பருவ மழைக் காலம் : (நற் 89, 99, 140)**

**கார் பருவத் தொடக்கம் : (நற் 97, 242, 371)**

**கார் பருவத்தின் இறுதி : (நற் 142,89)**

**புயல் மழை : (நற் 381, 248,238)**

**பனி : (நற் 58)**

**கானல் நீர் : (நற் 84)**

**மாலை நேர இடி மழை : (நற் 37, 10)**

**துளி மழை : (நற் 51)**

**பெருமழை : (நற் 61)**

**இடி, மின்னல் மழை : (நற் 68)**

**முன் பனிக் காலம் : (நற் 5, 152, 224)**

**பின் பனிக் காலம் : (நற் 157,241,305)**

இன்றைய வானிலை இயல் கருத்துக்களுடன் இப்பாடல்களில் உள்ள வானிலைச் செய்திகளை ஒப்பிட்டுக் காணும் போது அந்நாளைய தமிழ்க் கவிஞர்களின் வானிலை அறிவியல் நுட்பம் புலனாகிறது.

தமிழன் மழை பற்றிச் சிந்தித்த காலத்தில் வாழ்ந்த கிரேக்க, உரோமானிய அறிஞர்களின் கருத்துக்களையும் அறியலாம். கணிதமேதை பிதாகோரசுக்கு ஆசிரியராக இருந்தவர் தேல்ஸ் ஆவார். இவர் கி.மு. ஏழாம் நூற்றாண்டில் வாழ்ந்தவர். இவர் மழையில்லாத காலத்தில் ஆற்றுக்கு நீர் தரும் ஊற்றுக்கு, நீர் கடலிலிருந்து, நிலத்துக்கு அடியிலுள்ள பாறைகளில்

உள்ள குகை வழி மூலமாக மலைப் பகுதி வரை சென்று, மலையின் அழுத்தத்தால் மேலெழுந்து ஊற்று நீராக வருகிறது என்று விளக்கினார்.

நிலத்தடியில் டார்ட்டரஸ் எனப்படும் பெரிய குகை வாயில்கள் இருக்கின்றன என்றும் இவற்றின் வழியாகக் கடல், குளம், ஆறு, ஊற்று ஆகிய அனைத்திற்கும் நீர் வருகிறது என்றும் பிளட்டோ குறிப்பிடுகிறார். இவருடைய மாணவர் அரிஸ்டாடிலும் இது பற்றிச் சிந்தித்து கருத்துக்களை வெளியிட்டுள்ளார். கடல் நீர் ஆவியாக மாறுகிறது. அது ஆகாயத்தில் மேகமாகச் செல்வது போலவே, நிலத்தின் அடியிலும் வேகமாகச் செல்கிறது. மலையின் அடிப்பகுதிக்கு வந்ததும் இம்மேகம் நீராக மாறி ஊற்றின் வழியாகச் சுரக்கிறது என்பது அவரின் கருத்து.

உலகம் பயன்படுத்தும் நீர் முழுவதற்கும் தோற்றுவாய் மழைதான் என்று உறுதியான தெளிவு பிறக்கநீண்ட நாட்களை எடுத்துக் கொண்டனர். ஆனால் இவ்வுண்மையைப் பழந்தமிழர் நன்கு உணர்ந்திருந்தனர்.

**'' வான் முகந்த நீர் மலைப் பொழியவும்**
**மலைப் பொழிந்த நீர் கடல் பரப்பவும்**
**மாரி பெய்யும் பருவம் போல்**
**நீரின்றி நிலத்து ஏற்றவும்**
**நிலத்தினின்று நீர்ப் பரப்பவும்''**[106]

செய்யும் நீரைப் பாடியுள்ளார் புலவர். இப்பாடலில் கடலிலிருந்து நீர் ஆவியாகி வானிற்குச் செல்வதும் மலையில் மழையாகப் பொழிந்து, ஆறுகளில் ஓடி மீண்டும் கடலில் சேர்கிறது என்றும் அதுபோல துறைமுகத்தில் ஒரு புறம் கரையிலிருந்து பொருட்களை ஏற்றுமதி

செய்கின்றனர்; மற்றொரு புறம் கப்பலிலிருந்து வரும் பொருட்களை இறக்குமதி செய்கின்றனர் என்பதன் மூலம் நீரியல் சுழற்சி பற்றிய செய்தியை உவமையாகக் கூறி விளக்கியுள்ளதை அறியலாம்.

**" திரை இரும் பனிப் பௌவம் செவ்விதா அற முகந்து**

**உர உரும் உடன்று ஆர்ப்ப ஊர் பொறை கொள்ளாது**

**கரை உடை குளமெனக் கழன்று வான் வயிறு அழிவு**

**வரை வரை தொடுத்த வயங்கு வெள் அருவி"**[107]

எனவரும் பாடலில் குளத்தின் கரை உடைந்தால் பெரு வெள்ளம் ஏற்படுவது போல் கடல் நீரை முகந்து கொண்ட ஆவியாகிய மேகம், குளக்கரை உடைவது போல தன் வயிறு கிழிந்து மழை பொழிகின்றது என உவமையாக வந்துள்ளது. மேகத்திற்கு நீர் தரும் மூலப் பொருள் கடல் என்பதைத் தெளிவாகக் குறிப்பிட்டிருப்பதால் பண்டைத் தமிழர்கள் நீர்வள இயலை நன்கு அறிந்திருந்தனர் என்பதை உணர முடிகிறது.

**" நிறை கடல் முகந்து உராய் நிறைந்து நீர் துளும்பும் தம்**

**பொறை தவிர்பு அசைவிடப் பொழிந்தன்று வானம்"**[108]

என இப்பாடலில் நீர் நிறைந்த கடலில் இருக்கும் நீரை மேகங்கள் முகந்து கொண்டு வானத்தில் எங்கும் சென்று, பாரம் தீர்ந்து இளைப்பாறும் பொருட்டு மழை பொழிந்தது என மழைநீர் பற்றி விளக்கியுள்ளதை அறியலாம்.

**" கார் கோள் முகந்த கமஞ்சூல் மாமழை**

**வாள் போழ் விசும்பில் வள் உறை சிதறி**

**தலைப் பெயல் தலை இய தண் நறுங் கானத்து"**[109]

காட்சியை இப்பாடலில் காணலாம். கடல் நீரை முகந்து கொண்டு எழுந்த மேகம், கதிரவனும் திங்களும் இருளைப் போக்கும் வானிலிருந்து பொழிந்தது. கார் காலத்து முதல் மழை பொழிந்து நிலம் குளிர்ந்தது என்று பாடியுள்ளார் புலவர். வாள் போழ் விசும்பிலிருந்து வாள் உறை சிதறிட முதல் மழை பெய்ததாம்.

**'' கடல் முகந்து கொண்ட கமஞ்சூழ் மாமழை**

**சுடர் நிமிர் மின்னொடு வலனேர்பு இரங்கி''**[110]

வந்ததாகவும் பாடியுள்ளனர். கார்மேகம் கடல் நீரை முகந்து, வானில் சென்று இடி, மின்னலுடன் பெருமழை பொழிகின்றது என இப்பாடலும் குறிப்பிட்டுள்ளது.

**''வளி பொரு மின்னொடு வான் இருள் பரப்பி**

**விளிவு இன்று கிளையொடு மேல் மலை முற்றி''**[111]

மழை பெய்ததாம். பூமியிலுள்ள நீர் ஆவியாகி விண்ணிற்குச் சென்று மேகமாகத் திரண்டு, காற்றினால் மோதப்பட்டு, மின்னல் ஒளியையும் இருளையும் மாறி மாறித் தோன்றச் செய்து, சைய மலையில் இடை விடாமல் மழை பொழிகின்றது. வையை ஆற்றின் ஆழமும் அகலமும் மனக்கண்ணில் நிழலாடுகின்றன.

**நீரின் பயன்பாடு**

புறநானூற்றுப் பாடலில் நீரின் பயன்பாடு பற்றிக் குறிப்பிட்டுள்ளது.

**'' நீண்டு ஒலி அழுவம் குறைபட முகந்து கொண்டு**

**ஈண்டு செலல் கொண்மூ வேண்டுவயின் குழீஇ**

**பெருமலை அன்ன தோன்றல, சூல் முதிர்பு**

உரும் உரறு கருவியொடு, பெயல் கடன் இறுத்து

வள மழை மாறிய என்றூழ் காலை

மன்பதை எல்லாம் சென்று உண, கங்கைக்

கரை பொரு மலி நீர் நிறைந்து தோன்றியாங்கு''[112]

என்னும் இப்பாடலில் மழைப் பொழிவு, வற்றாத ஆறு பற்றிய அறிவியல் செய்திகள் குறிப்பிடப்பட்டுள்ளன. பூமியில் வெப்பம் காரணமாகக் கடல்நீர் ஆவியாக மாறி மேலே மழை மேகமாகச் சென்றடைகின்றது. கரு மேகம் பல ஒன்று சேர்ந்து இடி மின்னலுடன் மழை பொழிகின்றன. கார் காலத்தில் பெய்யும் மழையால் மக்களுக்கு நீர் கிடைக்கின்றது. கோடையில் வெப்பம் அதிகரிப்பதால் மக்கள் நீரின்றி வருந்தும்போது அவ் ஆறுகளின் நீரூற்றுகள் உதவுகின்றன. அக்காலத்தில் மக்களுக்கு வற்றாத ஆறுகள் மூலம் நீர் கிடைக்கின்றது. இவ்வறிவியல் கருத்துக்களைக் குமணனின் வள்ளல் தன்மையுடன் ஒப்பிட்டுக் கூறியுள்ளதைக் காணலாம். மழை நீங்கிய கோடையில் உயிர்களின் வருத்தத்தைக் கங்கையாறு தீர்ப்பது போல வறுமையால் வாடும் பரிசிலர்களுக்குக் குமணன் செல்வம் தந்து உதவுவான் என்று கூறியுள்ளது அறியத்தக்கது.

**ஈசல்**

ஈசல் எனும் உயிரினம் ஒரு நாள் மட்டுமே உயிர் வாழும் என்ற செய்தியைப் புறநானூறு காட்டும்.

'' செம் புற்று ஈயல் போல

ஒரு பகல் வாழ்க்கைக்கு உலமரு வோரே!''[113]

**புலியின் சிறிய முன்னங்கால்கள்**

நற்றிணைப் பாடலில் சீத்தலைச் சாத்தனார் என்னும் புலவர், ''புலியின் கால்கள்'' பற்றிக் குறிப்பிட்டுள்ளார். புலி குறுமையான முன்னங்கால்கள் உடையது என்றும் முன்னங்கால்கள் சிறியதாக இருப்பினும் ஆண் புலியானது பெரிய களிற்றைக் கொல்ல வல்லது என்றும் கூறியுள்ளது அறியத்தக்கது.

**'' குறுங் கை இரும் புலிக் கோள் வல் ஏற்றை**
**பூ நுதல் இரும் பிடி புலம்ப, தாக்கி**
**தாழ் நீர் நனற் தலைப் பெருங் களிறு அடூ உம்**
**கல்லக வெற்பன்''[114]**

என்று பாடியுள்ள புலவர் சிறு முன்னங்கால்களைக் கைகள் என்றே குறிப்பிட்டுள்ளமை மனங்கொள்ளத்தக்கதாகும்.

**இரும்பின் பயன்பாடு**

இரும்பு ஓர் உலோகம். மண்ணிலிருந்து இரும்புத் தாதுவை வெட்டி எடுத்து, உருக்கி இரும்பைத் தனியாகப் பயன்படுத்துவர். 'இரும்பைக் காய்ச்சி உருக்கிடுவீரே, இயந்திரங்கள் செய்திடுவீரே' என்னும் பாரதி வாக்கிற்கேற்ப எந்திரங்கள் செய்ய இரும்பு பயன்படுகிறது. குறுந்தொகைப் பாடலில் இரும்பின் பயன்பாடு பற்றிய செய்தி குறிப்பிடப்பட்டுள்ளது.

**'' முதைப் புனம் கொன்ற ஆர்கலி உழவர்**
**விதைக் குறு வட்டி போதொடு பொதுளப்**
**பொழுதோ தான் வந்தன்றே; மெழுகு ஆன்று**

ஊது உலைப் பெய்த பகுவாய்த் தெண்மணி

மரம் பயில் இரும்பின் ஆர்ப்ப சுரன் இழுபு

மாலை நனி விருந்து அயர்மார்

தேர் வரும் என்னும் உரை வாராதே''[115]

என்னும் இப்பாடலில் இரும்பு மணிகள் தயாரிக்கும் முறை இடம் பெற்றுள்ளது. தலைவன் தேர் வருவதைப் பற்றி கூற வந்த புலவர் தேரில் தொங்கவிடப்பட்டிருந்த இரும்பு மணிகள் தயாரிப்பினை விளக்கி யுள்ளதைக் காணலாம். இரும்பை அதிக வெப்பம் ஏற்றி உருக்கி, மணிகள் வடிவில் உருவாக்கப்பட்ட மணல் அச்சுக்களில், உருக்கிய இரும்பை வார்த்து குளிரச் செய்து மணிகள் தயாரித்தனராம். இதன் மூலம் பழந்தமிழர் இரும்பை கலை நயத்தோடு பயன்படுத்த அறிந்திருந்தனர் என்பதை அறிய முடிகின்றது.

**கரும்பு ஆலைகள்**

பெரும்பாணாற்றுப் படையில் கரும்பு ஆலைகள் பற்றிய செய்தி உள்ளது.

'' மழை விளை யாடும் கழைவளர் அடுக்கத்து

அணங்குடை யாளி தாக்கலின், பல உடன்

கணம் சால் வேழம் கதழ்வுற் றாஅங்கு

எந்திரம் சிலைக்கும் துஞ்சாக் கம்பலை

விசயம் அடூஉம் புகைசூழ் ஆலை தொறும்

கரும்பின் தீம்சாறு விரும்பினிர் மிசைமின்''[116]

என்னும் இப்பாடல், கரும்புச்சாறு காய்ச்சுதல் குறித்துக் கூறியுள்ளது. ஆலைகளில் கரும்பை அரைத்துச் சாறு எடுத்துக் காய்ச்சிப் பதப்படுத்தி சர்க்கரை, வெல்லம், கரும்புச் சர்க்கரை முதலான பொருட்களைத் தயாரித்தனர் என்பதை அறியலாம். அக்கரும்பாலைகளிலிருந்து எழும் ஒலி மலைப் பகுதியில் யாளியால் தாக்குண்ட யானைக் கூட்டங்கள் வருந்திக் கதறும் ஒலிக்கு உவமையாகக் கூறப்பட்டுள்ளது.

**''கரும்பின் எந்திரம் களிந்து எதிர் பிளிற்றும்**

**தேர் வண் கோமான்,''** [117]

என்னும் ஐங்குறுநூற்றுப் பாடலிலும் கரும்பு ஆலைகளில் இருந்து எழும் ஒலி யானையின் பிளிறலுக்கு இணையாக இருந்தது என ஒப்பிட்டு கூறியிருப்பதனை அறியலாம். கரும்பை அரைத்துப் பதப்படுத்தியதையும் அறியலாம்.

### கள்

கள் தயாரிக்கும் முறை பற்றிக் கடியலூர் உருத்திரங்கண்ணனார் குறிப்பிட்டுள்ளார்.

குற்றாத கொழியல் அரிசி என்பது தவிடு நீக்கப் பெறாத சத்து நிறைந்த அரிசியாகும். அதனைக் களியாகக் கலக்கி அட்ட கூழைப் பெரிய தட்டுப் பிழாவில் விட்டு ஆற்றி, அதனுடன் நெல்முளையை இடித்து அதனுடன் சேர்த்து, அப்படியே இரண்டு நாட்கள் இரவும் பகலும் சாடியில் விட்டு வைத்துப் பின்னர் அதில் வெந்நீர் ஊற்றி வேக வைத்து, விரலாலே களைந்து பிழியப்பட்ட கள்ளை நெய்யரி எனப்படும் சல்லடையில்

வடிகட்டி எடுப்பராம். இம்முறையைப் பெரும்பாணாற்றுப்படை கூறியுள்ளது.

'' **அவையா அரிசி அம்களித் துழவை**
**மலர்வாய்ப் பிழாவில் புலர ஆற்றி,**
**பாம்பு உறை புற்றின் குரும்பி ஏய்க்கும்**
**பூம்புற நல் அடை அளை இ, தேம்பட**
**எல்லையும் இரவும் இருமுறை கழிப்பி,**
**வல்வாய்ச் சாடியின் வழைச்சு அற விளைந்த**
**வெந்நீர், அரியல் விரல் அலை, நறும்பிழி**
**தண் மீன் சூட்டொடு, தளர்தலும் பெறுகுவீர்**[118]

என்பதால் அறியலாம்.

## தோல் பதனிடுதல்

தோல் விலங்குகளிடமிருந்து கிடைக்கின்றது. அத்தோலைப் பதப்படுத்திய பின்னர் தான் மனிதருடைய தேவைக்கு ஏற்ற வகையில் பொருட்களைச் செய்வர்.

பரிபாடலில் தோல் பதனிடுதல் பற்றிய செய்தி இடம் பெற்றுள்ளது.

'' **தொட்டதை - தைப்பு அமை சருமத்தின், தாள் இயை தாமரை**
**துப்பு அமை துவர் நீர்த் துறை மறை அழுத்திய**
**வெரிநத் தோலோடு முழு மயிர் மிடைந்த**
**வரி மலி அர உரி வள்பு கண்டன்ன**
**புரி மென் பீலிப் போழ் புனை அடையல்**''[119]

எனவரும் பாடலில் காலணி பதப்படுத்தும் தொழில்நுட்பச் செய்தி குறிப்பிடப்பட்டுள்ளது. காலணி இச் செய்யுளில், 'அடையல்' என்னும்

பெயரால் சுட்டப்படுகிறது. பெரும்பாணாற்றுப்படை தொடுதோல், அடிபுதை அரணம் என்றும் குறிப்பிட்டுள்ளது. தோலுக்கு வண்ணம், மற்றும் அளவும் பொருந்துமாறு செந்நிறம் ஊட்டுதற் பொருட்டு, பவழம் போன்ற சிவப்பு நிற நீரில் ஊற வைப்பர் என்றும் மென்மைத் தன்மை அடையுமாறு அதிக நேரம் அழுத்தி ஊற வைப்பர் என்றும் தோலின் வெளிப்புறம் வெரிநத் தோல் எனப்படும் என்றும் விவரித்துள்ளது. அது மயிர் நீக்கப்படாதாதலின், முழுமயிர்மிடைந்த இத்தோலின் மேல் மயிற்பீலியின் பிளவினை வைத்து ஒன்றாகத் தைத்து அழகுபடுத்தினர் என்றும் அப்பிளவு பாம்பின் தோலைப் பிளந்து எடுத்து ஒட்டியது போன்றிருந்தது என்றும் அது முருகனின் திருவடியில் இருந்தது என்றும் கூறியுள்ளார் புலவர். முருகன் அணிந்துள்ள அடையலின் சிறப்பினைக் காணும்போது சங்க காலத்தில் தோலைப் பதப்படுத்திச் செருப்பு தைக்கும் தொழிலில் அழகியலும் நுட்பமும் இருந்தன என உணர முடிகின்றது.

**நாழிகை அளத்தல்**

முல்லைப் பாட்டு மற்றும் அகநானூற்றுப் பாடல்களில் நாழிகை அளந்தறியும் கருவி பற்றிய செய்தி இடம் பெற்றிருக்கக் காணலாம்.

**'' பொழுது அளந்து அறியும், பொய்யா மாக்கள்**
**தொழுது காண் கையர், தோன்ற வாழ்த்தி**
**எறிநீர் வையகம் வெரீஇய செல்வோய்; நின்**
**குறுநீர்க் கன்னல் இனைத்து என்று இசைப்ப''**[120]

என நாழிகை வட்டிலின் பயன்பாடு பற்றித் தெரிவிக்கின்றது. நாழிகை வட்டில் குறுநீர்க் கன்னல் என்றும் அழைக்கப்படுகிறது. நாழிகை வட்டிலில் நீரிட்டு ஒரு சிறு துளை மூலமாக அந்நீரினைச் சிறிது சிறிதாகக் கசிய விட்டு,

அந்நீரினை அளந்து பொழுதைக் காண்பர். நாழிகைக் கணக்கர் என்பவர் இக்கருவி மூலம் பொழுதை அளந்து மன்னனுக்கு அறிவித்தனர் என்பதை அறிய முடிகிறது.

**''குறுநீர்க் கன்னல் எண்ணுநர் அல்லது**
**கதிர் மருங்கு அறியாது, அஞ்சுவரப் பாஅய்''**[121]

என்னும் செய்யுளடிகள் இதே கருத்தையே விளக்குகின்றது. நாழிகைக்கு ஒன்றாக வரையப்பட்ட கோடுகளை எண்ணிப் பார்த்து நாழிகையை அறிந்து கொள்வர். 'கன்னலும் கிண்ணமும் நாழிகை வட்டில்' என்று பிங்கலந்தை நிகண்டு குறிப்பிடக் காணலாம்.

**மரக்கலம் செலுத்து முறை**

புறநானூற்றிலும் மதுரைக்காஞ்சியிலும் மரக்கலம் செலுத்தப்பட்டதைக் காணலாம்.

**'' நளி இரு முந்நீர் நாவாய் ஓட்டி**
**வளி தொழில் ஆண்ட உரவோன் மருக**
**களி இயல் யானைக் கரிகால் வளவ!'**[122]

எனப் புறநானூறு பாடும்.

**'' முழங்கு கடல் தந்த விளங்கு கதிர் முத்தம்**
**அரம் போழ்ந்து அறுத்த கண் நேர் இலங்குவளை**
**பரதர் தந்த பல்வேறு கூலம்**
**இருங்கழிச் செறுவின், தீம்புளி வெள் உப்பு**
**பரங்கு ஓங்கு வரைப்பின் வன்கைத் திமிலர்**

**கொழுமீன் குறை இய துடிக்கண் துணியல்**

**விழுமிய நாவாய் பெருநீர் ஓச்சுரர்**

**நனந்தலைத் தேஎத்து நன்கலன் உய்ம்மார்'**[123]

என்னும் மதுரைக்காஞ்சி பகுதியில் காற்றின் திசையறிந்து மரக்கலம் செலுத்தியதை அறியலாம். பெரிய கடலில் காற்று வீசும் திசையில் மரக்கலம் செலுத்துவர் என்றும் நாவாய் செலுத்துபவர் 'மீகாமர்' என்று அழைக்கப்படுவர் என்றும் காற்றின் வன்மையைத் தாங்கும் அளவிற்கு கப்பல் வடிவமைக்கப்பட்டு செலுத்தப்பட்டது என்றும் அறிய முடிகிறது.

**கலங்கரை விளக்கம்**

மரக்கலங்கள் கடற்பரப்பில் திசை தப்பிச் செல்லாதவாறு தடுத்துத் துறைமுகத்திற்கு வழிகாட்ட, உயர்ந்த கலங்கரை விளக்கம் அமைக்கப் பட்டிருந்தமையும் அது விண்ணைத் தொடும் அளவு மிக உயர்வாகக் கட்டப்பட்டிருந்தமையும் பெரும்பாணாற்றுப்படையால் அறியலாம்.

**'' வானம் ஊன்றிய மதலை போல,**

**ஏணி சாத்திய ஏற்று அருஞ் சென்னி,**

**விண் பொர நிவந்த, வேயா மாடத்து**

**இரவில் மாட்டிய இலங்கு சுடர் ஞெகிழி**

**உரவு நீர் அழுவத்து ஓடுகலம் கரையும்**

**துறை பிறக்கு ஒழியப் போகி'**[124]

என வரும் இப்பகுதியில் இரவு நேரத்தில் வழி தெரியாது திசை தப்பிச் செல்லும் மரக்கலங்களுக்கு வழிகாட்டுமுகமாகத் துறைமுகத்தில் உயர்ந்த கலங்கரை விளக்கம் விளக்குச் சுடருடன் ஒளிவிட்டுக் கொண்டிருந்தமையை

அறியலாம். ''கலத்தைக் கரை நோக்கிக் கரைகின்ற விளக்கு கலங்கரை விளக்கு எனப் பெற்றது''.[125]

## தொகுப்புரை

இவ்வியலில் சங்க இலக்கிய நூல்களில் இடம்பெற்றுள்ள வானியல், தாவரவியல், உயிரினங்கள், இயற்கை வளம் குறித்த செய்திகள் ஆராயப்பட்டுள்ளன.

உலகம் ஐம்பூதம் என்னும் அணுக்களால் ஆனது, ஞாயிறு வெப்பம் மிகுந்த கோள், ஞாயிற்றை மையமாகக் கொண்டு பிற கோள்கள் சுற்றுகின்றன. பூமியின் சுழற்சியால் இரவு பகல் ஏற்படுகிறது. சந்திரன் பூமியைச் சுற்றி வரும் பதினைந்தாவது நாள் பௌர்ணமி ஏற்படும், சூரிய (சூரியனை கேது தீண்டுதல்), சந்திர (திங்களை கேது தீண்டுதல்) கிரகண நிகழ்வுகள், வானில் உள்ள கோள் மீன் (கோள்கள்), நாள்மீன் (நட்சத்திரம்), விடிவெள்ளி - துருவ நட்சத்திரம், சுக்கிரன், மழைக்கோள், செம்மீன். பூமியில் ஏற்படும் வெப்ப மாற்றம், கடலில் நிகழும் கொந்தளிப்பு, பூமியின் நீரோட்டம் ஆகிய அறிவியல் செய்திகள் எடுத்துக்காட்டப் பெற்றுள்ளன. இக்குறிப்புகளால் பழந்தமிழர்கள் வானநூற் புலமை பெற்றிருந்தனர் என அறிய முடிகிறது. வானநூலார்க்கு முன்பே தமிழர்தம் வானியல் அறிவு சிறந்து விளங்கியமை எண்ணத்தக்கதாகும்.

தாவரங்கள் உணவு தயாரிக்கும் முறை, வெப்பப் பகுதிகளில் தாவரங்களின் இலையமைப்பு, இலைகளில் நீர் சேமித்தல், தாவரங்கள் மருந்துப் பொருட்களாகப் பயன்படுதல், இரும்பினால் செய்யப்பட்ட கலப்பையை உழவுத் தொழிலுக்குப் பயன்படுத்தும் முறை, நீர்ப்பாசனம்

செய்யும் முறை, நீர் வளம், நன்செய் நிலத்தில் நெல் விளைவித்தல், மாற்றுப் பயிர் தாவரங்கள், வேளாண் தொடர்பான செய்திகள் சங்க நூல்கள் வாயிலாக எடுத்துரைக்கப்பட்டுள்ளன.

முதலை, மீன் முதலிய கடல் வாழ் உயிரினங்கள், பழந்தின்னி வவ்வால் வகை, கடற்கரைகளிலும் உப்பளங்களிலும் காணப்படும் வெண் மணல், அதிக ஈர்ப்புத் தன்மை கொண்ட செம்மண், பருத்தி விளையும் கரிசல் மண், கனிம வளம் கொண்ட வண்டல் மண் ஆகிய மணல் வகையும் கடலிலிருந்து கிடைக்கும் சங்கு, இப்பி, முத்துச் சிப்பி ஆகிய இயற்கை வளங்கள் பற்றிய செய்திகளும் தொகுக்கப்பட்டுள்ளன.

ஞாயிற்றின் வெப்பம் காரணமாக நீர் ஆவியாதல், நீரின் சுழற்சி முறை, நீரின் பயன்பாடு, பூமியில் உள்ள தாது உப்புகள் சேர்ந்து கடின நீர் உருவாதல், காற்றிற்கு வழங்கும் பெயர்கள், காற்றின் வேகம், மழை பற்றிய கலைச் சொற்கள், ஈசல், புலி ஆகிய உயிரினங்கள் பற்றிய செய்திகள், அரிசி மூலம் கள் தயாரித்தல், கரும்பிலிருந்து சருக்கரை தயாரித்தல், தோலைப் பதப்படுத்தி காலணி தயாரித்தல் தொழில்நுட்பம், நாழிகை வட்டில் மூலம் நேரத்தை அளந்தமை, கடலில் கப்பல் செலுத்தும் முறை, கலங்கரை விளக்கத்தின் பயன்பாடு ஆகிய கருத்துக்களும் பழந்தமிழர் தம் அறிவாற்றலை வெளிப்படுத்துகின்றமையை அறிய முடிகின்றது. இவ்வறிவியல் சிந்தனைகள் படிப்படியே அனுபவங்கள், நம்பிக்கை என்பனவாக வளர்ந்து தொன்மங்களாக நிலைபெறத் தொடங்கின. சந்திர, சூரிய கிரணங்கள் பற்றிய நம்பிக்கைகளும் அவை தொன்மங்களாக மாறியுள்ளமையை உறுதி செய்வனவாகும்.

# அடிக்குறிப்புகள்

1. பரி. 2 : 5 - 12.
2. மதுரை. 1 - 8.
3. பெரும். 16 - 17.
4. திருமுரு. 1 - 2.
5. சிறுபாண். 242 - 245.
6. குறுந். 378 : 1 - 3.
7. கலி. 8 : 1 - 3.
8. பரி. 4 : 25.
9. மலைபடுகடாம் தனிப்பாடல் 1 : 2.
10. புறம். 260 : 16 - 17.
11. அகம். 114 : 4 - 5.
12. மேற்படி 313 : 7 - 8.
13. நற். 128 : 2.
14. மேற்படி 377 : 6 - 7.
15. சிங்காரவேலு முதலியார், அபிதான சிந்தாமணி ப.117.
16. கலி. 104 : 37 - 39.
17. மேற்படி 140 : 17 - 18.
18. மேற்படி 105 : 45 - 46.
19. குறுந். 395 : 4 - 5.
20. பரி. 10 : 74 - 76.
21. மேற்படி 11 : 9 - 10.
22. சிறுபாண். 184 - 185.
23. மதுரை. 193 - 196.
24. புறம். 400 : 1 - 3.

25. நற். 196 : 3.

26. மேற்படி 346 : 8.

27. சிங்காரவேலு முதலியார், அபிதான சிந்தாமணி, ப. 767.

28. பரி. 19 : 46 - 47.

29. நற். 356 : 7 - 9.

30. புறம். 385 : 1.

31. மேற்படி 397 : 1.

32. மேற்படி 398 : 1.

33. பொருநர். 72.

34. புறம். 35 : 7 - 8.

35. மேற்படி 117 : 1 - 2.

36. மேற்படி 388 : 1 - 2.

37. மதுரை. 107 - 109.

38. பட்டின. 1 - 6.

39. பதிற்று. 24 : 24 - 25.

40. மேற்படி 13 : 25 - 28.

41. புறம். 60 : 1 - 3.

42. மதுரை. 7.

43. புறம். 55 : 13.

44. மேற்படி 4 : 15 - 16.

45. பொருநர். 135 - 136.

46. பெரும். 1 : 2.

47. மலைபடு. 84 - 85.

48. மேற்படி 257.

49. பட்டின 67 - 69.

50. பதிற்று. 14 : 3 - 4

51. பரி. 20 : 1 - 5.

52. அகம். 201 : 8 - 9.

53. பட்டின. 92 - 93.

54. நற். 375 : 7 - 8.

55. பரி. 11 : 70 - 73.

56. பரி. 21 : 13 - 5.

57. புறம். 320 : 1 - 5.

58. குறுந். 339 : 1 - 2.

59. மேற்படி 82 : 1 - 2.

60. புறம். 331 : 1 - 3.

61. பொருநர். 233 - 234.

62. புறம். 281 : 1 - 2.

63. மேற்படி 328 : 1 - 4.

64. மேற்படி 33 : 2 - 5.

65. மேற்படி 338 : 1 - 4.

66. மேற்படி 35 : 24 - 26.

67. ஐங். 5 : 4 - 5.

68. மேற்படி 24 : 2.

69. மேற்படி 339 : 1 - 3.

70. மேற்படி 378 : 1 - 2.

71. குறுந். 281 : 1.

72. மேற்படி 311 : 5 - 6.

73. மேற்படி 40 : 4 - 5.

74. மேற்படி 282 : 1 - 2.

75. மேற்படி 116 : 3 - 4.

76. மேற்படி 286 : 3 - 4.

77. மேற்படி 238 : 3 - 4.

78. மேற்படி 243 : 3 - 4.

79. கலைக்களஞ்சியம் தொகுதி (4) 1956 - பக். 369 - 371.

80. சிங்கார வேலு முதலியார், அபிதான சிந்தாமணி, ப.548.

81. ஐங். 193 : 1 - 2.

82. நற். 87 : 6 - 7.

83. அகம். 280 : 11 - 14.

84. நற். 195 : 1 - 3.

85. புறம். 218 : 1 - 3.

86. மேற்படி 21 : 6 - 9.

87. மேற்படி 154 : 1 - 3.

88. மேற்படி 204 : 5 - 9.

89. மேற்படி 30 : 1 - 6.

90. மேற்படி 389 : 1 - 5.

91. நற். 74 : 8.

92. மேற்படி 89 : 1.

93. மேற்படி 162 : 8

94. மேற்படி 299 : 8.

95. மேற்படி 5 : 8.

96. மேற்படி 109 : 8.

97. மேற்படி 152 : 8.

98. மேற்படி 56 : 6.

99. மேற்படி 2 : 9.

100. மேற்படி 15 : 3.

101. மேற்படி 105 : 1 - 3.

102. மேற்படி 15 : 1 - 3.

103. மேற்படி 107 : 4 - 5.

104. மேற்படி 162 : 9 -10.

105. மேற்படி 163 : 1 - 3.

106. பட்டின. 126 - 131.

107. பரி. 7 : 1 - 4.

108. மேற்படி 6 : 1 - 2.

109. திருமுரு. 7 - 9 .

110. அகம். 43 : 1 - 2.

111. பரி. 12 : 1 - 2.

112. புறம். 161 : 1 - 7.

113. மேற்படி 51 : 10 - 11.

114. நற். 36 : 1 - 4.

115. குறுந். 155.

116. பெரும். 257 : 262.

117. ஐங். 55 : 1 - 2.

118. பெரும். 275 : 282.

119. பரி. 21 : 3 - 7.

120. முல்லை. பா. 55 - 58.

121. அகம். 43 : 6 - 7.

122. புறம். 66 : 1 - 3.

123. மதுரை. 315 - 322.

124. பெரும். 346 - 351.

125. தகவல் முனைவர் சேதுராமலிங்கம் வீ.

# முடிவுரை

'சங்க இலக்கியத்தில் தொன்மங்கள் - ஓர் ஆய்வு' என்னும் தலைப்பில் அமைந்த இவ்வாய்வு சங்க இலக்கியங்களை மையமாகக் கொண்டு பல வகைத் தொன்மங்களை விளக்கிக் காட்டுதலை அடிப்படையாக் கொண்டது.

இவ்வாய்வு ஆய்வு முன்னுரை, முடிவுரை நீங்கலாக தொன்மமும் தமிழிலக்கியமும், புராணத்தொன்மங்கள், முருகன் பற்றிய தொன்மங்கள், தோற்றம் சார் தொன்மங்கள், பழக்கவழக்கத் தொன்மங்கள், அறிவியல் தொன்மங்கள் என்னும் ஆறு இயல்களில் அமைந்துள்ளது. இவ்வாய்வின் பயனாகக் கண்டறியப் பெற்ற கருத்துக்கள் தொகுத்துத் தரப்பட்டுள்ளன.

**தொன்மமும் தமிழிலக்கியமும்**

தொன்மம் என்ற சொல் தொன்மையான புராணச் செய்திகளைச் சுட்டும் அழகிய தமிழ்ச் சொல்லாகும். நம் நாட்டைப் போலவே மேனாடுகளும் வாழ்விற்கு உண்மைகள் வழங்கும் தொன்மைச் செய்திகளைப் போற்றி வருகின்றனர். வீரர்கள் போற்றிய நடுகல் வழிபாடு பல பண்பாட்டு வழிபாடுகளை நட்டு வளர்த்தது சமூகம் நல் வழிப்பட இவ்வழிபாடு அடிகோலியது.

திரிபுரம் எரித்துச் சிவனார் ஆடிய கொடு கொட்டுக் கூத்தினை மாதவி ஆடிக்காட்டிய பாங்கினையும், முருகன் ஆணவ வடிவச் சூரனை வென்ற செய்தியினையும், ஈரடியால் திருமால் மூவுலகளந்த செய்தியினையும் சிலப்பதிகாரம் வாயிலாக அறிய முடிகிறது. செங்குட்டுவன் கனக விசையரைப் பதினெட்டு நாழிகையால் வென்ற செய்தியினைச் சிலப்பதிகாரம்

சிறப்பிக்கிறது. மாவலியிடம் மூன்று அடி மண் கேட்டு அவனுடைய மும்மலம் பெற்று அவனைப் பக்குவப்படுத்தி அவனுக்கு வீடளித்த திருமால் வாமன அவதாரத்தைச் சிலப்பதிகாரம் விரிவாக விளக்கியிருக்கக் காணலாம்.

செல்வச் செருக்கும் கல்விச் செருக்கும் இறையருள் பெறத் தடையாகும் என்ற மெய்ப்பொருளை மாயவன் சிவனார் அடி முடி தேடிய தொன்மத்தால் மாணிக்கவாசகர் விளக்குவர்.

திருஞான சம்பந்தர் திருநீற்றுப்பதிகத்தில் சிவனார் நஞ்சுண்ட தொன்மத்தையும், ஆண்டான் மாவாய் பிளந்த கண்ணனைத் தன் ஒருவாயால் பாட வேண்டும் என்ற தொன்மத்தையும் விளக்கிப் பேசுவர்.

**புராணத் தொன்மங்கள்**

பாண்டவர் வெற்றியாரவாரம், வீமன் அரக்கு மாளிகையிலிருந்து தாயையும் உடன் பிறந்தாரையும் பாதுகாப்புடன் கொண்டு சென்றமை, இராவணன் சீதையைக் கவர்ந்து சென்றபோது சீதை தன் அணிகலன்களைக் குரங்குப்படை உள்ள மலையில் போட்டுச் சென்றமை, இராவணன் கைலையைப் பெயர்க்க முயன்று வருந்தியமை, ஆலமரப்பறவை ஒலியை அம்பால் இராமன் அடக்கியமை, வீமன் திரௌபதியைத் துகில் உரித்த துச்சாதனன் மார்பைப் பிளந்தமை, அசுவத்தாமன் தந்தை துரோணாச்சாரியாரைக் கொன்ற சிகண்டியைக் கழுத்தைத் திருகிக் கொன்றமை, யயாதி சான்றோர் துணையால் மாமன் சுக்கிராச்சாரியார் சாபம் நீங்கி வீடு பெற்றமை, அகலிகை சாபம் பற்றிய சிற்பங்கள் திருப்பரங்குன்றக் கோயில் மண்டபத்தில் இடம் பெற்றமை, வாகுகன் மகன் சகரன் தோண்டிய சாகரம் (கடல்) பாண்டி நாட்டின் எல்லையாதல், வேங்கை மரத்தடியில் ஒரு

முலை இழந்த திருமாவுண்ணி நிற்றல், அகுதை என்பான் பொன் சக்கரம் பொய்த்துப் போதல், சிவனார் முப்புரம் எரித்தமை, ஆய் என்ற வள்ளல் நாகம் கொடுத்த ஆடையைச் சிவனார்க்குப் படைத்தமை, சிவனார் கங்கை பிறை சூடியமை போன்ற புராணத் தொன்மங்கள் இவ்வியலில் விளக்கம் பெற்றுள்ளன.

**முருகன் பற்றிய தொன்மங்கள்**

வனப்பிழந்து வருந்திய கன்னிப் பெண்கள் முருக வழிபாடு நிகழ்த்தி இழந்த வனப்பைப் பெற்றதாக நற்றிணையும் ஐங்குறுநூறும் குறிப்பிடும்.

ஐம்பூதங்களுள் நெருப்பனாகிய காற்று ஐம்பொறிகளை ஏந்தி வான்வழிவந்து கார்த்திகைப் பெண்களிடம் கொடுத்தனர். முனிவர்கள் பொறிகளை வேள்வி செய்து பிண்டமாக்கி ஆறு கார்த்திகைப் பெண்களிடம் கொடுக்க அவர்கள் ஈன்ற குழந்தைகள் அறுவரை உமாதேவி ஒரு குழந்தையாக்கினார். முருகன் அவதாரத்தைத் திருமுருகாற்றுப்படை விளக்கிக் கூறும்.

முருகனின் தாய் தந்தையராகப் பார்வதியையும் பரமசிவனையும் பரிபாடல் குறிப்பிடும்.

முருகன் இந்திரனையும் சூரனையும் வென்றமை, ஆயிரத்தெட்டு கண்டங்களை நூற்றெட்டு யுகங்கள் ஆண்ட சூரபன்மனை முருகன் வென்றமை, வள்ளியைக் களவிலும் தெய்வயானையைக் கற்பினும் முருகன் மணந்தமை, வள்ளி தெய்வயானையரின் தோழியர் போர்புரிதல், முருகன் மாயை வடிவில் இருந்த தாருகனை அழித்தல், ஆறெழுத்து மந்திரம்

ஓதுமுறை, முருகனின் ஆறுமுகங்கள், பன்னிரு கைகளின் சிறப்புகள், முருகன் அடிமுடிச் சிறப்பு, முருகன் ஆடை ஊர்தி பற்றிய செய்திகள், முருகன் படைக்கருவிகள், முருகன் குறிஞ்சி மருத நிலங்களில் வழிபட பெறுதல், முருகன் இருப்பிடங்கள், முருகனிடம் வேண்டும் வரம், வெறியாட்டு போன்ற முருகன் தொடர்பான தொன்மச் செய்திகள் இவ்வியலில் விளக்கம் பெற்றுள்ளன.

**தோற்றம் சார் தொன்மங்கள்**

'மாயோன் மேய காடுறை உலகமும்' (தொல் *951:1*) என்ற தொல்காப்பியர் வாக்கு திருமால் வழிபாட்டின் தொன்மையைத் தெளிவாகப் புலப்படுத்தும்.

வைணவ சமய வளர்ச்சியில் உருவான திருமால் அவதாரக் கூறுகளைச் சங்க இலக்கியங்களில் காண முடிகிறது. திருமால் முல்லை நிலத் தெய்வம்.

இரணிசாட்சன் புவியைச் சுருட்டிப் பாதாளத்திற்குக் கொண்டு சென்றான். திருமால் வராகவதாரத்தால் புவியை மீட்டு வந்த செய்தியைப் பரிபாடல் உணர்த்தும்.

தேவர்களும் அசுரர்களும் அமுதம் பாற்கடல் கடைந்த போது மத்தாக உதவிய மந்தரமலையை கூர்ம அவதாரத்தில் திருமால் தாங்கி நின்றார்.

அசுரரை மோகினி அவதாரத்ததால் மயக்கித் திருமால் அமுதம் தேவர்க்களித்தார்.

நரசிம்ம அவதாரத்தில் இரணியனை நகத்தினால் மார்பைப் பிளந்து பிரகலாதனாகிய அடியவனைத் திருமால் காத்தமையைப் பரிபாடல் விரித்துரைக்கும். மாபலிச் சக்கரவர்த்தியிடம் மூன்றடி மண் கேட்டு ஈரடியால் மூவுலகளந்து திருமால் மாபலிக்கு வீடளித்த வாமன அவதாரச் செய்தியைக் கலித்தொகையும் முல்லைப் பாட்டும் விளக்கிக் கூறும்.

தந்தை சொல் மிக்க மந்திரமில்லை என்ற வாக்கிற்குப் பரசுராம அவதாரமும் இராமவதாரமும் இலக்கியங்களாக அமைந்தமையை அகநானூறு தெளிவுபடுத்தும்.

கண்ணன் அவதாரத்தில் மல்லரைச் சாய்த்த மறத்தை கலித்தொகை தெளிவுறுத்தும். பரிபாடல் திருமால் கருடவாகனத்தில் செருக்கடக்கிய செய்தியைப் பரிபாடல் தெளிவுபடுத்தும். திருமால் சக்கரப் படையாய் பகைவரை வீழ்த்திய செய்தியைப் பரிபாடல் எடுத்துரைக்கும். திருமால் அவதாரச் சிறப்புகளைச் சங்க இலக்கியத்தில் பரவலாகக் காணலாம்.

**பழக்க வழக்கத் தொன்மங்கள்**

விழுப்பம் (சிறப்பு) வளரவும் விழுமம் (துன்பம்) தளரவும் நல்ல பழக்கவழக்கங்கள் முதற் கருவியாகும். தீய பண்புகளைப் பலியிட்டுத் தூய நிலையில் இறைவழிபாடு செய்யக் கோயில்களில் பலிபீடங்கள் அமைத்தனர்.

சித்திரையில் மலர் விழாவும், ஆடி நிறைமதி நாளில் புதுப்புனல் விழாவும், ஆவணியில் திருஓண விழாவும், கார்த்திகை மதி நாளில் கார்த்திகை விழாவும், மார்கழி நிறைமதி நாளில் திரு ஆதிரை விழாவும், தைத்திங்களில்

நீராட்டு விழாவும், பங்குனி நிறைமதி நாளில் உத்திரத் திருவிழாவும் கொண்டாடிய செய்திகளைச் சங்க இலக்கியம் காட்டும்.

மலைப்பாதை, மகளிர் வழிபாடு கட்டடக்கலை, நெசவுக்கலை, அறச்சாலைகள், பாசறை நிலை, விருந்தோம்பல், நற்சொல் கேட்கும் விரிச்சி, இரை கொடுத்து உயிர்க்கு இறைக்கு உணவு, மலர் படைத்து வழிடல், உழவர், அந்தணர், வணிகர், இடையர், வேந்தர் சமுதாய வாழ்வு முறைகள், பலவகை விளையாட்டு வகைகள், நெற்றியில் பொட்டு வைத்தல், செவியில் தளிர் சூட்டல், தந்தை பெயரை மகவுக்குச் சூட்டல் போன்ற பழக்கவழக்கத் தொன்மங்களையும் சங்க இலக்கியத்தில் பரவலாகக் காட்டுதலை இவ்வியல் ஆய்வு செய்கிறது.

**அறிவியல் தொன்மங்கள்**

நிலம், நீர், தீ, காற்று, வான் என்ற ஐம்பூத இயல்புகள், ஞாயிறு திங்கள் ஆகியவற்றின் இயல்புகள், சந்திர சூரிய கிரகணங்கள், வளர்பிறை தேய்பிறைச் செய்திகள், வெள்ளிக் கோள் பற்றிய உண்மைகள், செவ்வாய்க் கோள், கடலில் ஏற்படும் மாற்றங்கள், நீரோட்டம், தாவரங்களின் அமைப்பு, ஒளிச்சேர்க்கை உண்மைகள், நீர்ப்பாசனமுறை, தாவர இயல், மருத்துவத் தாவரங்கள், வேளாண்மைச் செய்திகள், நீர் வாழ் உயிரினங்கள், பறப்பன, கலம், கலங்கரை விளக்கம், பொன் முத்து பவளம் ஆகியவற்றைப் பற்றிய உண்மைகளை இவ்வியல் விரிவாக ஆய்வு செய்கிறது.

எல்லாத் தமிழிலக்கியங்களிலும் காணும் தொன்மங்களையும் அவற்றால் அறியும் செம்பொருள்களையும் ஆய்வு செய்யலாம்.

இது போன்ற ஆய்வுகள் சமுதாயம் அல்லவை நீக்கி நல்லவை கொண்டு இயங்கவும், உலகம் அமைதிப் பூங்காவாக இயங்கவும் துணை செய்யும். உலகம் நன்மார்க்கமாகிய சன்மார்க்க நெறி உணர்ந்து செல்ல உதவுமாயின் அதுவே இவ்வாய்வின் வெற்றி எனலாம்.

## துணைநூற் பட்டியல்

**முதன்மை ஆதாரங்கள் - சங்க இலக்கிய நூல்கள்**


ஆலிஸ், அ. (உரை) **பதிற்றுப் பத்து** நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட் சென்னை, மூன்றாம் பதிப்பு, 2007.

சங்குப் புலவர், தி. (உரை) **விக்கிரம சோழனுலா** திருநெல்வேலி தென்னிந்திய சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை, 1977.

சாமிநாதையர், உ.வே. (உரை) **பத்துப்பாட்டு** தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர், 1986.

சாமிநாதையர், உ.வே. (உரை) **பதிற்றுப்பத்து மூலமும் பழைய உரையும்** உ.வே.சாமிநாதையர் நூல் நிலையம், சென்னை, ஏழாம் பதிப்பு, 1980.

சாமிநாதையர், உ.வே. (உரை) **பரிபாடல் மூலமும் உரையும்** உ.வே.சாமிநாதையர் நூல் நிலையம், சென்னை, ஐந்தாம் பதிப்பு, 1980.

சாமிநாதையர், உ.வே. (உரை) **புறநானூறு மூலமும் உரையும்** தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர், 1985.

சுப்பிரமணியன், ச.வே. (பதிப்பாசிரியர்) **சங்க இலக்கியம்** மாணிக்கவாசகர் பதிப்பகம், சென்னை, 2006.

சுப்பிரமணியன், பெ. பாலசுப்பிரமணியன், கு.வெ. தட்சிணாமூர்த்தி, அ. (உரை) **பரிபாடல்** நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட் சென்னை, 2004.

செயபால், இரா. (உரை) **அகநானூறு (மூலமும் உரையும்)** நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட் சென்னை, 2004.

சோமசுந்தரனார், பொ.வெ. (உரை) — **அகநானூறு - களிற்றியானை நிரை**
திருநெல்வேலி தென்னிந்திய சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை, 1981.

சோமசுந்தரனார், பொ.வெ. (உரை) — **அகநானூறு - நித்திலக்கோவை**
திருநெல்வேலி தென்னிந்திய சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை, 1970.

சோமசுந்தரனார், பொ.வெ. (உரை) — **அகநானூறு - மணிமிடைப் பவளம்**
திருநெல்வேலி தென்னிந்திய சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை, 1976.

சோமசுந்தரனார், பொ.வெ. (உரை) — **ஐங்குறு நூறு**
திருநெல்வேலி தென்னிந்திய சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை, 1972.

சோமசுந்தரனார், பொ.வெ. (உரை) — **கலித்தொகை**
திருநெல்வேலி தென்னிந்திய சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை, 1975.

சோமசுந்தரனார், பொ.வெ. (உரை) — **குறுந்தொகை**
திருநெல்வேலி தென்னிந்திய சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை, 1972.

தட்சிணாமூர்த்தி, அ. (உரை) — **ஐங்குறு நூறு**
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட் சென்னை, 2007.

துரைசாமி பிள்ளை, ஔவை.சு. (உரை) — **பதிற்றுப்பத்து**
திருநெல்வேலி தென்னிந்திய சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை, 1973.

துரைசாமி பிள்ளை, ஔவை.சு. (உரை) — **புறநானூறு**
திருநெல்வேலி தென்னிந்திய சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை, 1977.

துரைசாமி பிள்ளை, ஔவை.சு. (உரை) — **புறநானூறு (201-400)**
திருநெல்வேலி தென்னிந்திய சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை, 1972.

நாகராஜன், வி. (உரை) — **ஐங்குறு நூறு**
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட் சென்னை, 2007.

நாகராஜன், வி. (உரை) **குறுந்தொகை I & II**
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்
சென்னை, 2007.

நாராயணசாமி ஐயர், அ. (உரை) **நற்றிணை**
திருநெல்வேலி தென்னிந்திய சித்தாந்த
நூற்பதிப்புக் கழகம், சென்னை, 1967.

பாலசுப்பிரமணியன், கு.வெ. (உரை) **நற்றிணை**
திருநெல்வேலி தென்னிந்திய சித்தாந்த
நூற்பதிப்புக் கழகம், சென்னை, 2007.

பாலசுப்பிரமணியன், கு.வெ. விசுவநாதன், அ. (உரை) **புறநானூறு I & II**
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்
சென்னை, 2007.

மறைமலையடிகள் **பட்டினப்பாலை ஆராய்ச்சி உரை**
கங்கை புத்தக நிலையம், முதற்பதிப்பு,
2001.

மோகன், இ.ரா. (உரை) **பத்துப்பாட்டு - முதல் தொகுதி**
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்
சென்னை, 2007.

விசுவநாதன் (உரை) **கலித்தொகை (மூலமும் உரையும்)**
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்
சென்னை, 2007.

**துணைமை ஆதாரங்கள்**

அகத்தியலிங்கம், ச. **பழந்தமிழ் நூல்களின் தொகுப்பு வரிசை முறை**
அண்ணாமலை நகர், 1983.

அண்ணாமலை, வே. **சங்க இலக்கியத் தொன்மக் களஞ்சியம்**
தொகுதி I & II
மெய்யப்பன் தமிழாய்வக வெளியீடு,
முதற்பதிப்பு, 2000.

அறிவு நம்பி, மதியழகன், சரவணன் (பதிப்பாசிரியர்கள்) **சங்க இலக்கியங்களும் கோட்பாடுகளும்**
சுப்பிரமணிய பாரதியார் தமிழியற்புலம்
வெளியீடு, புதுச்சேரி.

இராகவையங்கார், மு. — **ஆராய்ச்சித் தொகுதி**
தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர், *1986.*

இராகவையங்கார், ரா. — **தமிழ் வரலாறு** (முதற் தொகுதி)
அண்ணாமலைப் பல்கலைக்கழகம், அண்ணாமலை நகர், *1941.*

இளங்கோவடிகள் — **சிலப்பதிகாரம்**
உமா பதிப்பகம், சென்னை, *1995.*

கதிர் மகாதேவன் — **தொன்மம்**
கதிரகம் இலட்சுமி வெளியீடு, மதுரை, *1989.*

கனகராஜ், எஸ் *(மொழிபெயர்ப்பாசிரியர்)* — **தொன்மத் திறனாய்வாளர் ஐவர்**
பிரேம் பதிப்பகம், மதுரை, *1991.*

சீனிவாசன், கு. — **சங்க இலக்கியத் தாவரங்கள்**
தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர், *1986.*

சுந்தரம், ராம், பழனிச்சாமி, கிருஷ்ணமூர்த்தி *(பதிப்பாசிரியர்)* — **இலக்கியமும் அறிவியலும்**
அனைத்திந்திய அறிவியல் தமிழ்க் கழகம், தஞ்சாவூர்.

தமிழண்ணல் — **சங்க இலக்கிய ஒப்பீடு**
சோலை நூலக வெளியீடு,*1985.*

பகவதி, கே. — **தமிழர் அளவைகள்**
உலகத் தமிழ் ஆராய்ச்சி நிறுவனம், சென்னை.

பஞ்சாங்கம், க. *(தமிழ் மொழியாக்கம்)* — **இலக்கியத்தில் தொல் படிவங்கள்**
அகரம் பிரிண்டர்ஸ், சிவகங்கை, *1988.*

பரிமேலழகர் (உரை) — **திருக்குறள்**
பூம்புகார் பதிப்பகம், சென்னை, *1986.*

பாலசுப்பிரமணியன், இரா. — **புராணவியல்**
தமிழ் சக்தி வெளியீடு, காரைக்குடி, *2003.*

| | |
|---|---|
| பாலசுப்பிரமணியன், கு.வெ. | **இலக்கியத்தில் புறப்பொருள்** மீரா பதிப்பகம், புதுக்கோட்டை, 1986. |
| மாணிக்கவாசகர் | **திருவாசகம்** கங்கை புத்தகாலயம், சென்னை, 2003. |
| மாதையன், பெ. | வரலாற்று நோக்கில் சங்க இலக்கிய பழமரபுக் கதைகளும் தொன்மங்களும், தமிழ்ப் பல்கலைக்கழகம் மறுதோன்றி அச்சகம், தஞ்சாவூர், 2001. |
| லூர்து, தே. | **எடுத்துக்கப்படும் நாட்டார் வழக்காறுகள் வகைப்படுத்துதல்** நாட்டார் வழக்காற்றியல் ஆய்வுகள், பாரிவேள் பதிப்பகம், திருநெல்வேலி, 1981. |
| வித்யானந்தன், சு. | **தமிழர் சால்பு** பாரி புத்தகப் பண்ணை, சென்னை, 1971. |
| வேங்கடசாமி, மயிலை சீனி. | **சமணமும் தமிழும்** தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை, 1980. |
| வையாபுரிப்பிள்ளை, எஸ். | **இலக்கியச் சிந்தனைகள் நூற்களஞ்சியம்** தொகுதி -1, வையாபுரிப்பிள்ளை நினைவு மன்றம், சென்னை. |

**அகராதிகளும் கலைக்களஞ்சியமும்**

| | |
|---|---|
| தூரன், பெ. (பதிப்பாசிரியர்) | **கலைக்களஞ்சியம்** (தொகுதி 3) தமிழ் வளர்ச்சிக் கழகம், சென்னை, 1956. |
| கதிர்வேற்பிள்ளை, நா | **தமிழ்மொழி அகராதி** சாரதா பதிப்பகம், 2003. |
| இராமசாமிப் புலவர், அ.சு. | **சிறப்புப் பெயரகராதி** தென்னிந்திய தமிழ்ச் சங்க வெளியீடு, சென்னை, 1970. |

சாரங்கபாணி, இரா. **சங்க இலக்கியப் பொருட் களஞ்சியம்** (தொகுதி -2) தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர்.

அருணாசலம், கே.கே. **அறிவியல் களஞ்சியம்** (தொகுதி-7)

மாதையன், பெ. **சங்க இலக்கியச் சொல்லடைவு** தமிழ்ப் பல்கலைக்கழக வெளியீடு, 2007.

சிங்காரவேலு முதலியார், ஆ. **அபிதான சிந்தாமணி** ஆசிய கல்விச் சேவை, புதுடெல்லி.

இராமசந்திர சர்மா, வே. **கம்பர் தமிழ் அகராதி** பி.எஸ். அண்டு எப் மார்ட், சென்னை, 1957.